# திருவேங்கடமும் திருவரங்கமும்

அழகிய மணவாள தாஸர்





விளக்க உரை : மு. நா. நாராயணன்

உ
ஸ்ரீ ராமஜெயம்

# திருவேங்கடமும்



# திருவரங்கமும்

ஸ்ரீ பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்
என்ற
அழகிய மணவாளதாசர்

அருளிய

## திருவேங்கட மாலை
## திருவரங்கத்து அந்தாதி

விளக்க உரை : மு.நா. நாராயணன்

கல்யாண நவமணி பதிப்பகம்
2775A சுப்ரமணியபுரம் 10வது வீதி தெற்கு
காரைக்குடி - 630 003

## BIBLIO GRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title | : | **Thiruvenkadamum Thiruvarangamum** |
| Author | : | **M.N. Narayanan** |
| Publisher | : | **Kalyana Navamani Pathippakam**<br>2775A Subramaniapuram 10th Street<br>South Extn. Karaikudi - 630 003. |
| Publication | : | 1 |
| Language | : | Tamil |
| Size of the Book | : | 1/8 Demmy |
| Paper | : | 13.7 Kg White Color wove |
| No. of Page | : | 172 |
| Price | : | Rs. 80/- |
| Subject | : | Religious Poetry |
| Copy Right | : | Author |
| No. of Copies | : | 1000 |
| Designed & Printed at | : | **Sri Lakshmi Printers**<br>Karaikudi |

I Print December 2008

149

390

*This book is published with*
*the financial assistance of*
*Tirumala Tirupathi Devastanam's*
*under their scheme*
*'Aid to publish religious books'*



திருவுடை முகத்தினில் திருக்கண்களால்
திருந்தவே நோக்கெனக் கருளுகண்டாய்

# THIRUVENKATAM AND THIRUVARANGAM

Lord. Vishnu pours His blessings in a standing posture at THIRUVENKATAM (THIRUMALA) and in a reclining posture at THIRUVARANGAM (SRI RANGAM)

The two treatises that sing the Glory of the Lord are "THIRUVENKATA MALAI" and "THIRUVARANGATHU ANDHATHI"

Absorbing the salient features of NALAYIRATHIVAYA PRAPANDAM. (4000 Devotional Hymns done by Twelve VAISNAVA SAINT POETS) Sri. Pillai Perumal Iyyangar Under the PSEUDONYM "AZHIYA MANAVALA THASAR" has written Eight Literary Marvels, (Eight Books of VAISHNAVA CANON) which bring out the Greatness of ASTAKSHARA called "ASHTA PRABANTHAM", Two of them are known by the Titles. "THIRUVENKATA MALAI" & "THIRUVARANGATHU ANDHATHI.

The Author of these books SRi PILLAIPERUMAL IYYENGAR was well versed in TAMIL and SANSKRIT. He was an efficient and proficient poet. His, works were enchanting, wrapped with Natural description, Similitudes and Paronomosia.

Belonging to the 13th Century. He worked as a special officer in the Government of THIRUMALAI NAICKER. He was reverentially called "THIVYAKAVI". THIRUVENKATA MALAI consist of 100 Hymns, in the form of VENBA (One of the Major metres of TAMIL PROSODY) delineating the various AVTHAR and greatness of the Lord. VENKATESWARA creating tranquility in readers.

THIRUVARANGATHU ANDHATHI praising LORD RENGANATHA was written in the form of YAMAGA ANDHATHI which reflects of the scholarly disposition of the Author and his grammatical expertise.

70 years ago some part of these works were published by SRI. VAI.MU.SADAGOPARAMANUJA CHRIAR and SRI. VAI.MU. GOPALAKRISHNAMACHARIAR individually. In 1955, Murrary S. Rajam, published the entire originals. But nobody has ventured to these unfathomable creations with explanatory commentary so far.

It is my ambitions yet humble attempt to bring these salient features of these works, in simple language so that the greatness of VAISHNAVA RELIGION & SPIRITUALITY could be understood by the readers.

May the readers be blessed by the Lord.

*M.N. Narayanan*

நீதியரசர் மெ. சொக்கலிங்கம்
நீதிபதி, உயர்நீதிமன்றம்,
சென்னை




28, கிரீன்வேஸ் சாலை
சென்னை

நாள் : 3-12-2008

## வாழ்த்துச் செய்தி

நலம் தரும் சொல் நாராயணனே என்பதை உணர்ந்து, யாவரும் அதன் நலனும், பயனும் பெறுமாறு பன்னிரு ஆழ்வார்கள் பாரேற்றும் பரந்தாமனோடு உள்ளத்தால் உறவாடி பாத மலர்களைப் போற்றித் தெள்ளத் தமிழில் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தை நமக்குத் தந்தருளினர். அதன் சாரத்தை எவ்வழியும் வழுவாது அட்டப் பிரபந்தமாக ஆக்கித் தந்த பெருமை பிள்ளைப்பெருமாள் ஐயங்காரை சாரும். வைணவமும் தமிழும் இரண்டறக் கலந்து திருமாலின் புகழ்பாடும் அட்டப் பிரபந்தத்தில் நின்ற கோலத்தில் கருணை வாருதியாக உலகைக் காக்கும் திருவேங்கடவன் புகழ்கூறும் “திருவேங்கடமாலை” மற்றும் பள்ளிகொண்ட நிலையில் ஆனந்தம் பெருக்கும் அரங்கனை போற்றும் “திரு அரங்கத்து அந்தாதி” ஆகிய இரண்டும் சிறப்பானவை.

வானோங்கு தர்மத்தைத் தானோங்கச் செய்து வரும் செட்டிநாட்டின் நகரத்தார்களுக்குத் தர்மமும் பக்தியும் இரு கண்கள் என்பதும், எந்தக் காலத்திலும் தமிழையும் தமிழ் இசையையும் போற்றிப் பாராட்டியதோடு மட்டுமின்றித் தன் வாழ்க்கையோடு இயைந்ததாகக் கொண்டவர்கள் என்பதும் யாவரும் அறிந்ததே.

செட்டி நாட்டின் அழகிய ஊர்களில் ஒன்றாம் காரைக்குடியில் தோன்றிய கவிஞர் மு.நா. நாராயணன் அவர்கள் நாரணன் புகழ் பாடும் இவ்விரு பாக்களுக்கும் எழுதிய விளக்க உரை இந்நூலாக வெளிவருகிறது. அவர் தம் தந்தையார் அவருக்குச் சிறுவயதிலிருந்தே இலக்கியங்கள், காவியங்கள் ஆகியவற்றோடு தேவாரம், திருவாசகம், திருப்புகழ் ஆகியவற்றை கற்று உணருமாறு செய்தமை ஆசிரியருக்குக் கிடைத்த பேறு.

தந்தையில் தொடங்கிக் கவிஞர் நாராயணன் அவர்கள் தம் வாழ்க்கைக் காலத்தில் தாம் மட்டுமின்றித் தம் குடும்பத்தார் அனைவரையும் தமிழ்ப்பற்று உடையவராக்வும், தமிழ்ப்பண்பு படைத்தவராகவும் ஆக்கியிருக்கிறார்கள். சுருங்கக் கூறின் நூலாசிரியர் குடும்பம் ஒரு தமிழ்க் குடும்பம் என்று சொன்னால் வியப்பில்லை. ஆசிரியர் இயற்றிய "அற்புத திருப்புகழ் ஐம்பத்தி ஒன்று" "**வேல் விருத்தம்**" மற்றும் "**மயில் விருத்தம்**" ஆகிய நூல்களையும் மற்ற நூல்களையும் படித்து, அதை உணர்ந்து ரசிக்கும் தோறும், சொல்லால் அடங்காச் சுகமான அனுபவத்தை ஏற்படுத்தும் என்பதில் ஐயமில்லை. "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பதே" என்று சொல்லும்போது இந்த நூல்களை எழுதி அதன் சுவையோடு சுகமும் உணர்ந்து வெளிப்படுத்தியிருக்கும் விதம் ஆசிரியரின் இந்த விளக்க உரை நூலில் வெளிப்படை.

சொற் செறிவு மிகு அட்டப் பிரபந்த நூலில் இரு பகுதியை எடுத்து எவ்வழியிலும் மொழி, பொருள் ஆகியவற்றின் நிலை மற்றும் அழகு மாறா வண்ணம் கடுமையை அகற்றி எளிமையாக்கிக் கவிஞர் தந்திருக்கும் விளக்க உரை யார் படித்தாலும் பக்தி வரும், அதனால் சித்தி பெருகும், பார் போற்றும் பரந்தாமனை உணர இயலும், எதை நிறைவேற்ற வேண்டும் என்று எண்ணிப் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் மூல நூலை இயற்றினாரோ அந்த எண்ணமும், பயனும் படிப்பவரை எளிதாகச் சென்று அடையுமாறு இந்த விளக்க உரை நூல் அமைந்திருப்பதால் இந்நூல் நல்ல சாதனை படைத்திருக்கிறது என்பது தெளிவு. ஆதலால் கவிஞர் அவர்கள் நெஞ்சார்ந்த பாராட்டுக்கு உரியவராகிறார்.

திருவேங்கடவன் பாற்கடல் போல் பொங்கும் கருணையைக் கங்கை என வாரி எல்லோருக்கும் வழங்க அந்த நீலவண்ணன் நாராயணனின் பொற்பாதங்களை தலைமேற்கொண்டு வணங்குகிறோம்.

நீதியரசர் மெ.சொக்கலிங்கம்
மற்றும் துணைவியார்

தமிழ்ப் பேராசிரியர் - தமிழ்த் துறைத் தலைவர் (முன்னாள்)
அழகப்பா பல்கலைக் கழகம்
முனைவர் **தெ. சொக்கலிங்கம்** எம்.ஏ.,பி.ஓ.எல்.,பி.எச்.டி.,

சிறப்பாசிரியர் **பூச்சரம்**
வழங்கிய

# அணிந்துரை

கவிஞர் **மு.நா. நாராயணன்** செட்டியார் சிறந்த கவிஞர்; தேர்ந்த திறனாய்வாளர்; தமிழ்ப் புலமை மிக்க உயர்ந்த சிந்தனையாளர். அவருடைய கவிதைகள் சொல் வளமும் ஆழமும் ஓட்டமும் நிறைந்தவை. கவிதைப் படைப்பாளியாகச் சிறந்து விளங்கும் அவர், தனிப் பாடல்களைப் பயின்று சுவைத்துப் பல கட்டுரைகள் எழுதியுள்ளார். அவர் **பிள்ளைப் பெருமாளய்யங்கார்** அருளிச் செய்த இரண்டு நூல்களைக் கண்டெடுத்து **(திருவரங்கத்து அந்தாதி, திருவேங்கட மாலை)** உரையெழுதித் திருத்தமான பதிப்பாகப் பதிப்பித்துள்ளார்.

பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் **'திவ்விய கவி'** என்றும் **'அழகிய மணவாள தாசர்'** என்றும் அழைக்கப் பெறுவர். இப் பெரியார் திருவரங்கப் பெருமானிடம் மிக்க ஈடுபாடுடையவர். திருவரங்கப் பெருமானையன்றி வேறு திருப்பதிகளில் எழுந்தருளிய மூர்த்திகளைப் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் பாட விரும்ப வில்லை. இவரை ஆட்கொள்ள விழைந்த திருவேங்கட முடையான் இவருக்குக் 'கண்டமாலை' என்ற நோயை ஏற்படுத்தினார். இந்நோய் நீங்கப் பாடியவை திருவேங்கடத்தந்தாதியும், திருவேங்கடமாலையுமாம், திருவரங்கத்துமாலை, திருவரங்கத்தந்தாதி, சீரங்க நாயகரூசல், திருநாமம், திருவரங்கக் கலம்பகம் என்பன இவராக்கிய கோயில் பிரபந்தங்கள். அழகர் அந்தாதியும் நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியும் இவர் இயற்றியவை. இந்த எட்டு நூல்களை ஒருங்கு தொகுத்து **'அஷ்டப் பிரபந்தம்'** என்பர்; **'ஐயங்கார் பிரபந்தம்'** என்பதும் இதுவே. இப் பெரும்புலவர் பதின் மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.

பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் யமகம், திரிபு, சிலேடை முதலிய அணிகள் அமையப் பாடும் புலமையாளராவார். இத்தகைய சொல்லணிகள் அமைந்தாலும், இவை எளிதில் பொருள் விளங்கக் கூடியன. பாடல்களில் இப் பெரியார் கருத்தைப் புலப்படுத்தும் அழகும் அதைப் புலப்படுத்தும் நெறியும் மிகச் சிறந்தவை. இவர் நூல்கள் ஸ்ரீமந் நாராயண மூர்த்தியான திருவரங்கப் பெருமானைப் போற்றும் தோத்திரப்பாக்கள்.

கவிஞர் நாராயணன் அவர்கள் மிகச் சிறந்த திருவரங்கத்தந்தாதியையும் திருவேங்கட மாலையையும் அனைவரும் படித்து அனுபவிக்கும் வண்ணம் உரையுடன் எழுதி வெளியிட்டிருப்பது பாராட்டத் தக்கது. பாட்டு நடையைப் போல இவரும் பாடலின் பொழிப்புரையையும் ஒரே வாக்கியமாக எழுதியிருப்பது இவருடைய தமிழ்ப் புலமையைப் புலப்படுத்துகிறது.

அகப் பொருள் தழுவிய பாடல்களுக்கும் இவர் கூற்று (தி.அ.59, 60) எழுதியுள்ளார். சில இடங்களில் சொல்லுக்குப் பொருளும் தந்திருக்கிறார் (பா-76) இதற்கு "அராகம் = அடங்காமை அகந்தை" என்பது சான்றாகும்.

"ஆழிய துயராய்த் தூசும் நாணும்
மதியும் செங்கை
வரை ஆழியும் வளையும் இழந்தாள்
என்மட மகளே"

என்ற பகுதிக்குப் பொருள் எழுதிய கவிஞர் கூடுதலாக "திருவரங்கப் பெருமானின் மீது மையல் கொண்டதால் பெண் துயரம் கொண்டாள்; அதனால் உடல் மெலிந்தாள்; அதன் காரணமாய் இடுப்பில் உள்ள ஆடை நெகிழ்ந்தது. மோதிரமும் வளைகளும் கழன்றன" என்று கருத்தை விளக்குவர். இவ்வாறு நூலைப் படிப்பார் எளிதில் உணர்ந்து கொள்ளுமாறு நூல் பதிப்பிக்கப் பட்டிருக்கிறது.

ஆசிரியர் உரை வரைந்துள்ள இன்னொரு நூல் திருவேங்கட மாலை; இது வெண்பா யாப்பான் இயன்றது. பாட்டின் கருத்தை விளக்கி எழுதும் ஆசிரியர் ஒரே வாக்கியமாக எழுதியிருக்கிறார். பாடலில் பயிலும் சொற்றொடர்களுக்குத் தேவையான இடங்களில் பிரித்து வளைவுக் குறிக்குள் தந்திருப்பது நயமானது. வேங்கட மாலைக்கும் இவருரை நல்லுரை.

ஸ்ரீ வைணவத்துக்குச் சாலச்சிறந்த திருவரங்கத்தையும் திருவேங்கடத்தையும் ஐயங்கார் பாடிய இரண்டு நூல்களை ஒருங்கே உரையுடன் பதிப்பித்திருப்பது வரவேற்கத் தக்கது. பாடல்கள் சந்தி பிரிக்காமல் ஒரு முறையும் சந்தி பிரித்து இன்னொரு முறையும் என்று இரண்டு முறை, ஒன்றின் கீழ் ஒன்றாகப் பதிப்பித்திருப்பது படிப்போர்க்கு நன்மை பயக்கும் நெறியாகும். அண்ணாமலைப் பல்கலைக் கழகம், கம்பராமாயணம் முழுவதையும் இவ்வாறு பதிப்பித்திருக்கிறது. அம் முறையைத் தழுவி நூல்களைப் பதிப்பித்திருப்பது மகிழ்ச்சியாகும்.

கவிஞர் நாராயணன் அவர்கள், இது போல இன்னும் பலநூல்களுக்கு நல்ல உரை எழுதியும் திறனாய்வு செய்தும் தமிழ்ப் பணி ஆற்றிடவேண்டும்.

வாழ்க அவர்; வளர்க அவர்தம் புலமை.

***தெ. சொக்கலிங்கம்***

# மதிப்புரை

தமிழாகரர் **தெ. முருகசாமி**
புதுச்சேரி

அட்டப் பிரபந்தம் என்றதும் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் நினைவுக்கு வருவார். பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் என்றதும் அட்டப் பிரபந்தம் நினைவுக்கு வரும். அந்த அளவிற்கு அகங்கை புறங்கை போல ஒன்றுக்குள் ஒன்றாக வைணவத் தமிழை வையம் அறியச் செய்த பெருமை அந்நூலுக்கும் அந்நூலாசிரியருக்கும் உண்டு.

ஆராஅமுதனாகிய அரங்கனையும் வேங்கடவனையும் அருச்சிக்கும் பாக்களான திருவரங்கத்து அந்தாதிக்கும் திருவேங்கட மாலைக்கும் காரைக்குடிக் கவிஞர் மு.நா. நாராயணன் அவர்கள் விளக்கவுரை தந்துள்ளார்கள்.

சொல் புதிது, சுவை புதிது, சோதிமிகு நவயுகக் கவிதை எனப் பாரதியார் தம் நூலுக்குரிய அறிமுகத்தைச் செய்துகொண்ட பொருள் நுட்பத்தை இவ்விரு நூல்களுக்கமைந்த விளக்க உரையால் உணரலாம். எளிய பதம், சட்டென்று புரிந்து கொள்ளக்கூடிய தொடர்கள் அமைய உரை எழுதப்பட்டுள்ளது பாராட்டுக்குரியது.

அட்டப் பிரபந்த நூற்பொருளை அவ்வளவு எளிதாகப் புரிந்துகொள்ள முடியாதென்பர். "இரும்புக் கடலையை வறுத்துத் தின்பது" போன்றதென அந் நூலின் சொற்செறிவைக் கூறுவர். அக்கடுமையை எளிமையாக்குகிறது இவ் விளக்க உரை. இருட்டறைக்குக் கொண்டு செல்லும் கை விளக்காக இவ்வுரை உள்ளது எனலாம்.

அரங்க வேங்கடவனை அய்யங்கார் தாம் அனுபவித்ததைப் பிறர் அனுபவிக்கப் பாடல்களைத் தந்தாலும் அந்த அமுதத்தை எடுத்துப் பரிமாறினால் தான் உண்ணமுடியும். அப்படி உண்ணச் செய்யும் எளிய தொண்டைச் செய்கிறது இவ்வுரை. இவ்வுரை மூலம் திக்குத் தெரியாத காட்டில் நாம் போவதற்கான வழியைக் காட்டி நிற்கும் பெயர்ப் பலகையான கைகாட்டி போன்ற தொண்டைச் செய்கிறது எனலாம். இதனால் இவ் விளக்க உரை தந்த கவிஞர் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

நூல்களுக்குச் சிலரால் எழுதப்பட்ட விருத்தியுரைகள் (வியாக்கியானம்) சில இருப்பினும் நூல் கற்கப் புகுவார்க்கான பாலபாடமாக அமைந்த இவ்வுரை, நூலின் சுவை முழுவதையும் உணரத் தூண்டகிறது என்பதில் ஐயமில்லை.

பரந்தாமனைப் பாடல்களின் சொற்பதங்கள் சுட்டினாலும் தூண்டா விளக்கெனினும் ஒரு தூண்டுகோல் வேண்டுமென்றபடி அந்தப் பரமபதத்தினை விளக்கிக் காட்ட வல்லதாய் இவ்விளக்க உரை உள்ளதால் இதனைப் பரமபத விளக்கம் எனலாம் என்க.



(बालाजी) तिरुपति और श्रीरंगम

भगवान श्री नारायण कृपाकरनेवाले क्षेत्रों 108 कहा जाता है। उस स्थलों में तिरुपति और तिरुच्चिरापल्लि में बसा हुआ श्रीरंगम सर्व श्रेष्ठ माने जाते हैं।

कई विद्वानों ने तिरुपती में श्री भगवान खड़ा हुआ अलंकृत आकार से और श्रीरंगम में आनंद शयन अलंकृत आकार से ये दोनों क्षेत्रों के बारे में कविता रचना कर, कहानियाँ लिखकर स्तुत्यात्मक श्लोक (श्लोक स्तोत्र) भी रचकर गीत गाते थे। भगवान के सर्वश्रेष्ठ भक्तों बारह आऴ्वारों ये दोनों पुण्य क्षेत्रों के विशय पर "मंगल शासन" याने चारहजार दिव्य कविताएँ रचिते थे।

सर्वश्रेष्ठ कवि से माने जाते श्री पिळ्ळै पेरुमाल अय्यंगार ये "फूलों में असीनकर मधू को चूसने भौरों की तरह" उन्होंने नालायिर द्विव्य प्रबंध को पूर्ण रूप से ग्रहण कर अतुलनीय अनुपम कवियों में अष्टप्रबंध से गाते थे। उन्होंने भगवन से अपरिमित प्रेम होने के कारण "अऴगिय मणवाल दासर" नाम से पुकारा जाते थे।

बारहवीं शताब्दी में जिए हुए, ये अपने अपरिमित भक्त, प्रेम, द्रवित हृदय भक्त और परिपूर्ण प्रेमी रूप से. श्री वेंगटाजलपत और श्री रंगनाथ दे भगवन को अपने "अष्टप्रबंध" यानी आठ ग्रंथों रचते थे। अष्टप्रबंध हैं।

1. तिरूवेंगडमालै (2) तिरूवेंगडत्तु अंदादी. (3) अष्गार अंदादी (4) 108 तिरूपदिगल अंदादी, (5) तिरूवरंग कलम्बगम (6) तिरूवरंग मालै (7) तिरूवरंगत्तु अंदादी (8) श्रीरंग नायकर ऊंचल आदी।

तमिष और देवनागरी शब्द शास्त्रों (व्याकरण) का अच्छी अध्ययन करनेवाले अष़गिय मनवाल दासर ने महाविष्णु के अवतारों, पुराणों और वैष्णव तत्वों को अपने अष्टप्रबंधों में रचिते थे। इस में तिरूपति पर्वत के श्रेष्टतम और वेंगाडाजलपत के असाधारण, अनुपम को अपने कलपना चिन्तन से उचित उपमाओं से अलंकृत वर्णन कर अदिक रूचिपूर्ण से लिखते थे। आठ ग्रंथों में (1) तिरूवेंगडमालै (2) तुरूवरंगत्तु अंदादी यानी रचना को अच्छे अध्ययन कर कारैकुडी कावि मुना. नारायणन बहुत कठिन शब्दों को प्रयोग होनेवाले ये दोनों किताबें, पंडित और ग्रामीण लोग भी जानने कि तरह आसानी से व्याख्यान रूप से प्रचालित करते हैं।

उनके ये श्रेष्ट सेवा से भगवान के अदभुतों और विचित्रों के बारे में हम सब जान सकते हैं। भगवान वेंगडाजलपत और रंगनाथ उनको कृपा करें।

अनुवादक
एम. जगदाम्बाल MA. MPhil
एम. ए. एमफिल

# நுழைவாயில்

"இருந்தமிழே உன்னால் இருந்தேன் விண்ணோர் விருந்து அமிர்தம் என்றாலும் வேண்டேன்" என்று "தமிழ் விடு தூது" என்ற நூலில் பாடப்பட்டள்ளது. ஏன் எனில் தமிழ்பாடல்கள் அத்தகைய இனிமை பயப்பதாகும். குறிப்பாக பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் என்ற அழகிய மணவாள தாசர் பாடியுள்ள "அட்டப் பிரபந்தம்" என்ற 8 நூல்களில் உள்ள பாடல்கள் அமிர்தம் போல் இனிப்பவை. பொருளாழமும் சொல்லினிமையும் கொண்ட அவரது பாடல்களை போற்றாத புலவர்களே இல்லை.

அழகிய மணவாள தாசர் திருவேங்கடப் பெருமானிடமும் திருவரங்கப் பெருமானிடமும் அளவற்ற பக்தி கொண்டு அந்த பக்தியில் ஊறித் திளைத்தவர் மட்டுமல்ல, ஊன் உருகிப் பாடிப் பரவினார் ! பாடினார் !

திருமாலின் அவதாரங்களையும் புராண வரலாறுகளையும் நன்கு கற்றுணர்ந்து தமது பாடல்களால் உலகு உணரும்படி செய்தவர். அவர் பாடிய அட்டப் பிரபந்திம் எனும் எட்டு நூல்களில் மிகுந்த சிறப்பு மிக்கவை. திருவேங்கடமாலையும், திருவரங்கத்து அந்தாதியுமே. அவற்றில் அமைந்த தாசரின் புலமையும், சொல்லாட்சியும், உவமைகளும் சிலேடைகளும் கற்பனைத் திறமும் அளவிடற்கரியன.

அழகிய மணவாள தாசரின் தமிழ்ப்புலமையும், அவரது பன்னூல் பயிற்சியும் பாடல்களில் விரவிக் கிடக்கின்றன. அவரது புராணங்களைப் பற்றிய அறிவும் பல பாடல்களில் உள்ளன. குறிப்பாக இரணியன் வதம், ராவண வதம், வாணாசுர வதம், கஜேந்திரன், மாவலி, கண்டாகன்னன், மார்க்கண்டேயர் பற்றிய வரலாறுகள் ஆகியனவற்றைப் பல பாடல்களில் தெளித்து உள்ளார். இராமாயணம், பாரதம், பாகவதம், ஆழ்வார்கள் பாசுரம், திருப்புகழ், திருக்குறள் ஆகியனவற்றை அவர் கற்றுத் தேர்ந்துள்ளார் என்பது பல பாடல்களில் புலப்படுகிறது. எடுத்துக்காட்டாக இரண்டு பாடல்! திருவரங்கத்து அந்தாதி 23ம் பாடலில்

"இலங்கையில் ஆதவன் போகக் கண்டான்
என் இதயத்தனே"

என்று பாடுகிறார் இதே கருத்தை கம்பராமாயணத்தில்.

அளித்தகவில்லா ஆற்றல் அமைந்தவன் கொடுமை அஞ்சி
வெளிப்படல் அரிதென்று உன்னி வேதனை உழக்கும் வேலை
களித்தவற் களிப்புநீங்கி காப்பவர்தம்மை கண்ணுற்று
ஒளித்தவர் வெளிப்பட்டென்ன கதிரவன் உதயம் செய்தான்

என்று பாடுகிறார்.

அதே போல் பாடல் 9ல்

- உடல்

கைக்கும் சரம தசையில் அஞ்சேல்
என்றுஎன் கண்முன் வந்தே

என்ற கருத்தினை அருணகிரி நாதர் தம் திருப்புகழில்

"அந்தகனும் எனை அடர்ந்து வருகையினில்
அஞ்சல் என வலிய மயில்மேல் நீ
அந்த மறலியொடுகந்த ! மனிதன் நமது
அன்பன் என மொழிய, வருவாயே"

என்று பாடுகிறார். ஒவ்வொருவருக்கும் அவர்களின் இறுதிக் காலத்தில் பெருமானின் திருவடிகளே துணை என மணவாள தாசர் பல பாடல்களில் கூறுகிறார்.

பாடல் எண் 3ல் தாசர்

"தனமாதர் அஞ்சொல் குதலைப் புதல்வர்
தரணி இல்லம்
தனம் ஆதரம் செயும் வாழ்வஞ்சியே
தஞ்சம் நீ எனப் போந்தனம்

எனப் பாடுகிறார். இதே கருத்தை

அருணகிரி நாதர்

இருந்த வீடும் கொஞ்சிய சிறுவரும் உறுகேளும்
இசைந்த ஊரும் பெண்டிரும் இளமையும் வளம்மேவும்
விரிந்த நாடும் குன்றமும் நிலையென மகிழாதே

எனப் பாடுகிறார்.

அதே போல் திருவேங்கட மாலையில் நூறு வெண்பாக்களில் முன்னிரண்டு வரிகளில் திருவேங்கட மலையின் வளத்தை பலப்பல விதமாய் வர்ணனை செய்து அந்தத் திருவேங்கட மலைதான் எம்பெருமானுக்கு உகந்தது எனப் பின்னிரண்டு வரிகளில் பெருமானது திருவிளையாடல்களையும் புராண வரலாறுகளையும் செஞ்சொற்களால் விளக்குகிறார். ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு இரத்தினங்கள்.

அழகிய மணவாளதாசரின் பாசுரங்கள் பலாப்பழம் போன்றவை. பலாச்சுளைகளை உண்ண வேண்டுமெனில் முதலில் பழத்தின் கடினமான தோலைப் பிளந்து பின் நெருக்கமாய் அடர்ந்து இருக்கும் சக்கைகளில் இருந்து பலாச்சுளைகளைத் தனியே பிரித்து எடுத்தல் வேண்டும்.

அதுபோல தாசரின் பாடல்கள் கடினமான பாடல்களாய் புலவர்கட்கு மட்டுமே புரியக்கூடிய அளவில் இருந்தாலும் சுவை நிறைந்தவை. ஆகவே இந்தத் தமிழ் அமிர்தத்தை ஓரளவு தமிழ்ப் பயிற்சி உள்ளவரும் படித்து மகிழ வேண்டும் என விரும்பினேன். எனவே அனைவருக்கும் விளங்கும்படி யாப்பினைக் கருத்தில் கொள்ளாது பொருள் நன்கு விளங்குமாறு மூலப் பகுதியை பதம் பிரித்துக் காட்டியுள்ளேன். சிலேடைகள் வரும் இடங்களில் உரிய பொருள் கூறியுள்ளேன். அருஞ்சொற்களுக்கு விளக்கம் அளித்துள்ளேன். கல்வித்திறம் வாய்ந்த அறிஞர் பெருமக்களும், குறைந்த அளவே தமிழ் கற்றவர்களும், இந்நூலை படித்து உணரும்படி எளிமைப்படுத்தியுள்ளேன்.

இந்நூலை எழுத என்னைத் தூண்டியவர் என்பால் மிகுந்த அன்புகொண்ட முன்னாள், இராமசாமி தமிழ்க் கல்லூரி முதல்வர் தமிழாகரர் தெ. முருகசாமி அவர்கள் தான்.

பின்னர் இதை எழுதுதற்கு எனக்கு உற்சாகமூட்டி பல வழிகளிலும் துணையாக நின்று பிழை திருத்தம் செய்து, நூல் வெளிவரப் பெரிதும் உதவியவர். அழகப்பா பல்கலைக் கழக முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர், ஆய்வுரைத் திலகம், பெரும்புலவர், முனைவர் தெ. சொக்கலிங்கனார் அவர்கள்தான். அவர்களது உதவி என்றும் மறக்கற்பாலது.

இந் நூலுக்கு மதிப்புரைகள் எழுதிக்கொடுத்த இவ்விரு தமிழ்ச் சான்றோர்கட்கும் எனது உளமார்ந்த நன்றி.

எவ்வளவோ அலுவல்களுக்கு இடையில் எனது வேண்டுகோளைக் கேட்டவுடன் சற்றும் தயங்காது அணிந்துரை வழங்கி என்னைப் பெருமைப்படுத்திய உயர்நீதிமன்ற நீதியரசர் மாண்புமிகு **மெ. சொக்கலிங்கனார்** அவர்கட்கு எனது உளமார்ந்த நன்றி.

அடுத்து இந்நூலை எழுதுவதன் முன் என்னை உற்சாகப்படுத்தி எனக்கு உதவிய அன்பர்களான அமரர் டாக்டர் **P.K. நாராயணன்** அவர்களின் புதல்வர்கள், திரு. **N. கிருஷ்ணமூர்த்தி** அவர்கட்கும், திரு. **N. ஜானகிராமன்** அவர்கட்கும் என் நன்றி.

நூலுக்கு ஹிந்தி மொழியில் மதிப்புரை தந்து உதவிய அன்புச் சகோதரி செல்வி **ஜெகதாம்பாள்** M.A.,M.Phil., அவர்கட்கும் என் நன்றி.

இந்நூலை அழகு மிளிர, கலை நயத்துடன் அச்சிட்டு உதவிய காரைக்குடி ஸ்ரீ லெட்சுமி பிரிண்டர்ஸ் உரிமையாளர் திரு **K.N. சரவணன்** அவர்கட்கும் நூலின் மேலட்டையினை அழகுற வடிவமைத்து உதவிய திருமதி. **வள்ளியம்மை சரவணன்** அவர்கட்கும், நான் வேண்டும்போது எல்லாம் முகம் சுளிக்காது பிழைதிருத்தங்கள் செய்து அச்சுக் கோத்து அச்சிட்டு உதவிய **ஸ்ரீ லெட்சுமி பிரிண்டர்ஸ் பணியாளர்கள்** அனைவருக்கும் என் உளமார்ந்த நன்றி. இவ்வுரை எழுதும்போது துணைநின்ற என் மனைவிக்கும், மக்களுக்கும், மறுமக்கட்கும் மற்றும் பேரன் பேத்திகளுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

வாழ்க வையகம் வளமுடன்

***மு.நா. நாராயணன்***



# சமர்ப்பணம்

நான் பிறந்த உடனேயே

திருவேங்கடவன் திருவடிகளை அடைந்த

என் அன்னை நா. முத்தழகம்மை ஆச்சி அவர்கட்கும்,

எனக்குத் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்பித்த

என் தந்தையார் முத்து நாராயணன் செட்டியார் அவர்கட்கும்

இந்நூலைக் காணிக்கையாக்குகிறேன்.

*மு.நா. நாராயணன்*



உ

ஸ்ரீ ராமஜெயம்



# திருவேங்கடமாலை

## அழகிய மணவாள தாசர்

தண்ணந் துழாயணி வேங்கடம் வாழும்
தயாநிதிமேல்
அண்ணல் அழகிய மணவாள தாசர்
அளித்த தமிழ்
வண்ணந் திகழ்திரு வேங்கட மாலை
மனத்தினுள்ளே
எண்ணும் தொறும் களிப்பெய்திடும் நாவில்
இனிப்பூறுமே.

விளக்க உரை

*மு.நா. நாராயணன்*





# திருவேங்கடமாலை

1. **பொன்னும் மணியும் பொலிந்தோங்கிப் பார்மகட்கு,**
**மின்னும் மணிமுடியாம் வேங்கடமே – மன்னும்**
**பரமபத நாட்டினான் பையரவின் சூட்டில்**
**சிரமபத நாட்டினான் சேர்வு.**

***பொன்னும் மணியும் பொலிந்து ஓங்கிப் பார்மகட்கு***
***மின்னும் மணிமுடி ஆம் வேங்கடமே – மன்னும்***
***பரமபத நாட்டினான் பை அரவின் சூட்டில்***
***சிரமபதம் நாட்டினான் சேர்வு.***

**பொருள் :**

செம்பொன்னும் நவமணிகளும் பொலிந்து விளங்க, நிலமகளின் ஒளிவீசும் மணிமுடிபோல் விளங்கும் வேங்கட மலைதான் பெருமை மிக்க பரமபதமாகிய வைகுந்த நாட்டை உடையவனான, படத்தினை உடைய பாம்பின் தலையில் மீது ஆடிய பெருமான் சேர்ந்திருக்கும் இடமாகும். (விண்ணும் மண்ணும் அளந்து களைத்துப்போன பெருமான் தனது திருவடிகளை பாம்பின் தலைமீது (அரவணைப் படுக்கையில்) வைத்து ஓய்வெடுத்தார் எனவும் பொருள் கூறுவர்)

2. **சோதிமதி வந்துதவழ் சோலைமலை யோடிரண்டாய்**
**மேதினியாள் கொங்கைநிகர் வேங்கடமே – போதில்**
**இருப்பாற் கடலான் இபமூர்ந்தார்க் கெட்டாத்**
**திருப்பாற் கடலான் சிலம்பு.**

***சோதிமதி வந்து தவழ் சோலைமலையோடு இரண்டுஆய்***
***மேதினியாள் கொங்கை நிகர் வேங்கடமே – போதில்***
***இருப்பார்க்கு, அடல்ஆன் இபம் ஊர்ந்தார்க்கு எட்டாத்***
***திருப்பாற் கடலான் சிலம்பு.***

**பொருள் :**

தாமரை மலரில் உள்ள பிரமன், வலிமை மிக்க காளை வாகனரான சிவன், ஐராவதம் என்ற யானையின் மீது வரும் இந்திரன் ஆகியோருக்கு எட்டாத திருப்பாற் கடலினான் இருக்கும் மலை எது என்றால், சூரியனும் சந்திரனும் உரசிச் செல்லும் அளவு உயர்ந்துள்ளதும் மண்மகளின் இரு மார்பகம் போல் விளங்குவதும் ஆன திருமாலிரும்

3. மாலைக்கோ லித்திரியும் வையகத்தோர் தம்பிறவி
வேலைக்கோர் வங்கமாம் வேங்கடமே - சோலைத்
தருமா தரைநட்டான் தண்முல்லை ஆயர்
தருமா தரைநட்டான் சார்பு.

*மாலைக் கோலித்திரியும் வையகத்தோர் தம்பிறவி*
*வேலைக்கோர் வங்கமாம் வேங்கடமே - சோலைத்*
*தருமா தரை நட்டான் தண்முல்லை ஆயர்*
*தரு மாதரை நட்டான் சார்பு.*

பொருள் :

ஆசை மயக்கம் அடைந்து அலைகின்ற இவ்வுலக மாந்தர்களின் பிறவிக் கடலைக் கடப்பதற்கு ஓர் மரக்கலம் போல் உதவும் திருவேங்கட மலைதான் கற்பகச் சோலையில் இருந்த பாரிசாத மரத்தை மண்ணுலகில் கொணர்ந்து நட்டுவைத்தவனும் ஆய்ச்சியர் குலப் பெண்களிடம் நட்பு (காதல்) கொண்டவனும் ஆன பெருமான் சார்ந்துள்ள இடம்.

4. நாலு திசை முகமும் நண்ணுதலால் ஒண்கமலம்
மேலுறலால் வேதா ஆம் வேங்கடமே - சாலுறையும்
மண்மயக்கம் தேற்றுவித்தால், மாற்றுதல் போல் ஆரியனால்
உள்மயக்கம் தேற்றுவித்தான் ஊர்.

*நாலு திசை முகமும் நண்ணுதலால் ஒண்கமலம்*
*மேல் உறலால் வேதா ஆம் வேங்கடமே - சால் உறையும்*
*மண் மயக்கம் தேற்று வித்தால் மாற்றுதல் போல் ஆரியனால்*
*உள் மயக்கம் தேற்றுவித்தான் ஊர்.*

இப்பாடல் வேங்கட மலைக்கும் பிரம்மனுக்கும் சிலேடை

பொருள் :

நான்கு முகங்கள் பொருந்தி இருத்தலால் (நான்கு திசையில் உள்ளவரும் வந்து பணிவதால்) ஒளிபொருந்திய தாமரை மலரின் மேல் இருத்தலால் (புண்ணிய தீர்த்தங்கள் நிறைந்துள்ளதால்) பிரம்மனை ஒத்து இருக்கும் திருவேங்கட மலைதான் பாத்திரம் ஒன்றில் மண் சேறு சேர்ந்து குழம்பிய நிலையில் உள்ள தண்ணீரை தேற்றாங் கொட்டையால் தெளிவித்தல் போல் மாந்தர்களின் அறியாமையையும் மயக்கத்தினையும் தெளிவிக்கும் பெருமானது ஊராகும்.

5. பாணி பிறை கொன்றைப் பணிசூடி மானேந்தி
வேணியர னைப்பொருவும் வேங்கடமே – ஆணிநிறப்
பீதாம்பரனார் பிரமர்வா ழண்டங்கள்
மீதாம்பரனார் விருப்பு.

*பாணி பிறை கொன்றை பணி சூடி மான் ஏந்தி*
*வேணி அரனைப் பொருவும் வேங்கடமே – ஆணி நிறப்*
*பீதாம்பரனார், பிரமர்வாழ் அண்டங்கள்*
*மீது ஆம் பரனார் விருப்பு.*

பொருள் :

சிவனுக்கும் வேங்கடமலைக்கும் சிலேடை

சிவன் கங்கையினையும் இளம்பிறையினையும், கொன்றை யினையும் பாம்பையும் தன்சடாமுடியில் அணிந்து மானைக் கையில் ஏந்தி உள்ளவர்.

வேங்கடம் நீர்நிலைகள், கொன்றை மரங்கள் பாம்புகள், பொருந்தி சந்திரனைத் தொடும் அளவு உயர்ந்து தன்பால் மான் கூட்டம் உலவப் பெறும் திருவேங்கட மலைதான். பொன் போன்ற நிறமுள்ள பட்டாடை உடுத்தியவரான, நான்முகன் முதலிய தேவர்கள் வாழும் வானுலகின் மீது எழுந்தருளியுள்ள பரம்பொருளான திருமாலுக்கு விருப்பமான இடம்.

6. மாலாய் சசிதழுவி வச்சிரமேந் திப்புகர்மா
மேலாய்ப் புரந்தரனாம் வேங்கடமே – நாலாய்க்
கிளர்வாகு மந்தரத்தான் கேட்டமரர் வேட்டுத்
தளர்வாகு மந்தரத்தான் சார்பு.

*மால் ஆய் சசி தழுவி வச்சிரம் ஏந்தி புகர்மா*
*மேல் ஆய்ப் புரந்தான் ஆம் வேங்கடமே – நாலாய்க்*
*கிளர் வாகு மந்தரத்தான் கேட்டு அமரர் வேட்டுத்*
*தளர்வு ஆகும் அந்தரத்தான் சார்பு*

பொருள் : இந்திரனுக்கும் திருவேங்கட மலைக்கும் சிலேடை

இந்திரன் மால் எனும் பெயரை உடையவனாய், இந்திராணிடன் பொருந்தி வச்சிராயுதத்தை ஏந்தி, ஐராவதம் என்னும் புள்ளிகளையுடைய முகத்தைப் பெற்ற யானைமேல் வருதலால்

திருவேங்கடமலை திருமாலின் வடிவு தங்குதலால் சந்திரனைத் தொடும் அளவு உயர்ந்து ஒளி பொருந்தி, வைரங்களை உடையதாய், தன்னிடத்தே காட்டு யானைகள் உலவுதலால் இந்திரனையே ஒத்து இருக்கும் திருவேங்கட மலைதான், மந்தர மலைபோல் வலிமை பொருந்திய நான்கு புயங்களை உடையவனான, திருமாலின் சிறப்பினை அறிந்து தேவர்கள் விரும்பியும் எளிதில் கிடைக்காததினால் தளர்வு அடைதற்குக் காரணமான பொன்னுலகத்தினான் வாழும் இடம். (இந்திரனுக்கு மால் என்ற பெயரும் உண்டு)

7. வள்ளிபுணர்ந் தாறுமுகம் மன்னிமயில் மேற்கொளலால்
வெள்ளிலைவேல் வேள்போலும் வேங்கடமே – உள்ளினரைத்
தங்கமலப் பார்வையான் தன்னடியார் மேல்வைக்கும்
செங்கமலப் பார்வையான் சேர்வு

*வள்ளி புணர்ந்து ஆறுமுகம் மன்னி, மயில் மேற்கொளலால்*
*வெள் இலை வேல் வேள் போலும் வேங்கடமே ! – உள்ளினரைத்*
*தங்க மல பார் வையான் தன் அடியார் மேல் வைக்கும்*
*செங்கமலப் பார்வையான் சேர்வு*

**பொருள் :**

முருகனுக்கும் திருவேங்கட மலைக்கும் சிலேடை

முருகன் வள்ளியை மணந்து ஆறுமுகங்கள் பொருந்தி மயில் மேல் வருதலோடு இலை வடிவான வேலை உடைய முருகவேளைப் போல்

வேங்கட மலை வள்ளிக் கிழங்குகள் நிறைந்து பல ஆறுகள் பாய, மயில்கள் திரிதலோடு வெளிறிய இலைகளை உடைய வேல மரங்கள் சூழ்ந்த மலையான திருவேங்கட மலைதான் தன்னை நினைந்து பூசிப்பவரை மும்மலங்கள் நிறைந்த இம்மண்ணுலகத்தில் தங்க வைக்காதவனும், தனது அடியார்களை வைகுந்த நாட்டில் கொண்டு வைப்பவனுமான சிவந்த தாமரை போன்ற கண்களை உடையவனான திருமால் சேரும் இடமாகும்.

8. புள்ளரவம் நீரரவம் போர்மா வரவமறா
வெள்ளரவப் பொற்பாகும் வேங்கடமே – ஒள்ளரியாய்
மாகனகம் பத்தினார் வாய்கண்கை யுந்திபதம்
கோகனகம் பத்தினார் குன்று

*புள் அரவம் நீர் அரவம் போர் மா அரவம் அறா*
*வெள் அரவ வெற்பு ஆகும் வேங்கடமே – ஒள் அரியாய்*
*மா கன கம்பத்தினார் வாய், கண், கை, உந்தி பதம்*
*கோகனகம் பத்தினார் குன்று*

**பொருள் :**

பறவைகளின் ஓசையும், அருவிகளின் ஓசையும், போராற்றல் கொண்ட யானைகளின் ஓசையும் என்றும் நீங்கப் பெறாத ஆதிசேடன் மலை எனப் பெயர் கொண்ட திருவேங்கட மலைதான் ஒளி துலங்கும் நரசிம்ம மூர்த்தியாகப் பெரிய தூணில் தோன்றியவரும், வாய் ஒன்று, கண் இரண்டு, கைகள் நான்கு ஒரு நாபிக்கமலம், பாதங்கள் இரண்டு ஆகிய பத்து அங்கங்களையும் பத்து பொற்றாமரைகள் போல் கொண்ட பெருமானின் மலை ஆகும்.

9. துய்ய செம்பொற் கோவில் சுடரெறிப்பக் கண்முகிழ்த்து
வெய்யவன் தேர் மாவிடறும் வேங்கடமே – ஐயிருநூ
றானமுகப்பாம் பணையார் ஆனிரைப்பின் ஊதிவரும்
கானமுகப்பாம் பணையார் காப்பு

*துய்ய செம்பொன் கோவில் சுடர் எறிப்பக் கண்முகிழ்த்து*
*வெய்யவன் தேர் மாஇடறும் வேங்கடமே – ஐ இரு நூறு*
*ஆன முகப்பாம்பு அணையார் ஆனிரை பின் ஊதிவரும்*
*கானம் உகப்பாம் பணையார், காப்பு*

பொருள் :

பரிசுத்தமான பொன்னால் ஆன கோவிலின் ஒளி வீசுவதால் கதிரவனின் தேரில் பூட்டப்பட்ட குதிரைகளின் கண்கள் கூசுவதால் அவற்றின் கால்கள் இடறும் திருவேங்கடமலைதான், ஆயிரம் முகங்களை உடைய பாம்பான ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்டவரும், பசுக் கூட்டங்களின் பின்னால் குழல் இசைக் கானம் செய்து மகிழ்ந்தவருமான பெருமான் இவ்வுலகைக் காக்கும் இடமாகும்.

10. மாண்டுபிறக் கும்துயர்போய் வைகுந்தம் புக்கவரும்
மீண்டுதொழக் காதலிக்கும் வேங்கடமே – பாண்டுமகன்
ஏறிரதப் பாகனார் ஏத்துமடி யார்நாவில்
ஊறிரதப் பாகனார் ஊர்

*மாண்டு பிறக்கும் துயர்போய் வைகுந்தம் புக்கவரும்*
*மீண்டு தொழக் காதலிக்கும் வேங்கடமே – பாண்டுமகன்*
*ஏறு இரதப் பாகனார் ஏத்தும் அடியார் நாவில்*
*ஊறு இரதப் பாகு அனார் ஊர்*

பொருள் :

இறப்பு பிறப்புத் துயரம் நீங்கி வைகுந்தத்தை அடைந்தவர்களும் மீண்டும் திரும்ப வந்து தொழுது வணங்க ஆசைப்படும் திருவேங்கட மலைதான் பாண்டு மைந்தனான அருச்சுனன் ஏறிவந்த தேரில் சாரதியாக இருந்து செலுத்தியவரும் தம்மைப் போற்றித் துதிக்கும் அடியவர்களின் நாவில் ஊறிப் பாகுபோல் இனிமை தருபவரும் ஆன பெருமானின் ஊர் ஆகும்.

11. கோலியொரு நான்கு குலமறையும் நாற்றிசையும்
வேலியென நின்றேத்தும் வேங்கடமே – வாலிதனை
நண்பாவை யாதரித்தான் ஞானமுத லாழ்வார்கள்
வெண்பாவை யாதரித்தான் வெற்பு

*கோலி ஒரு நான்கு குல மறையும் நால் திசையும்*
*வேலி என நின்று ஏத்தும் வேங்கடமே – வாலிதனை*
*நண்பா வையாது அரித்தான், ஞான முதலாழ்வார்கள்*
*வெண்பாவை ஆதரித்தான் வெற்பு*

**பொருள் :**

நான்கு வேதங்களும் நான்கு திசைகளிலும் உள்ள வேலிபோலச் சூழ்ந்து புகழும் திருவேங்கட மலைதான் வாலியை நண்பனாகக் கொள்ளாமல் அழித்தவனும், மெய்யறிவு மிக்க சான்றோரான முதலாழ்வர்கள் பாடிய வெண்பாப் பாசுரங்களை ஏற்றவனும் ஆன பெருமானின் மலை ஆகும்.

12. தெள்ளியதோர், வீடருளும் சீர்கேட்டுப் பொன் மலையும்
வெள்ளிமலையும் பணியும் வேங்கடமே – புள்ளின்
கொடிவா கனத்தான் குளிர்ந் திருண்டகாரின்
வடிவா கனத்தான் வரை.

*தெள்ளியது ஓர் வீடு அருளும் சீர்கேட்டுப் பொன்மலையும்*
*வெள்ளிமலையும் பணியும் வேங்கடமே – புள்ளின்*
*கொடி வாகனத்தான் குளிர்ந்து இருண்ட காரின்*
*வடிவு ஆகன் – நத்தான் வரை.*

**பொருள் :**

தெளிவுமிக்க வீடுபேற்றை அருள்கின்ற சீர்மையினைக் (புகழைக்) கண்டு பொன்மலையாகிய மேருமலையும் வெள்ளி மலையாகிய கைலாயமும் (பொன்மலையும் வெள்ளி மலையும் என்பன பிரமனும் சிவனும் தங்கும் மலைகள்) வணங்கும் திருவேங்கட மலைதான் கருடனைத் தனது கொடியாகவும் வாகனமாகவும் கொண்டவரான கறுத்துத் திரண்ட மேகவண்ண மேனி உடையவனும் வலப்புறத்தே சங்கை ஏந்தியவனும் ஆன பெருமானின் மலையாகும்.

13. எப்பூ தலமும் இறைஞ்சித் திசை நோக்கி
மெய்ப்பூ சனைபுரியும் வேங்கடமே – கொப்பூழ்
இலகுமுண்ட கந்தரத்தான் ஈன்றளிக்கும் ஈரேழ்
உலகுமுண்ட கந்தரத்தான் ஊர்

*எப் பூதலமும் இறைஞ்சித் திசை நோக்கி*
*மெய்ப் பூசனை புரியும் வேங்கடமே – கொப்பூழ்*
*இலகும் முண்டகம் தர தான் ஈன்று அளிக்கும் ஈரேழ்*
*உலகும் உண்ட கந்தரத்தான் ஊர்.*

பொருள் :

தனது உந்தித் தாமரையில் வந்த பிரமன் பெற்றுத் தந்த பதினான்கு உலகினையும் உண்ட முகில் வண்ணனான பெருமானின் ஊர் எல்லா உலகினரும் திக்குநோக்கி வணங்கித் துதி செய்யும் திருவேங்கடமலை தான். (கந்தரம் - முகில்)

14. நோவினையும் நோயினையும் நோய்செய் வினையினையும்
வீவினையும் தீர்த்தருளும் வேங்கடமே – மூவினைசெய்
மூவடிவாய்ப் பச்சென்றான் முன்னா ளகலிகைக்குச்
சேவடிவாய்ப் பச்சென்றான் சேர்பு

*நோவினையும் நோயினையும் நோய்செய் வினையினையும்*
*வீவினையும் தீர்த்தருளும் வேங்கடமே – மூவினைசெய்*
*மூவடிவு ஆய்ப் பச்சென்றான் முன்னாள் அகலிகைக்குச்*
*சேவடி வாய்ப்பச் சென்றான் சேர்பு.*

பொருள் :

மனக்கவலையினையும், உடல் நோய்களையும் அந் நோய்களுக்குக் காரணமான செயல்களையும், இறப்புத் துன்பத்தையும் தீர்க்கும் திருவேங்கட மலைதான். (நோவினையும் நோயினையும் என்பதை நோவில் நையும் நோயினையும் எனப் பொருள் கூறுவாரும் உளர்) ஆக்கல் காத்தல் அழித்தல் ஆகிய முச் செயல்களைச் செய்யும் பிரமன், திருமால், சிவன் ஆகியவர்களின் வடிவாய்ப் பசிய நிறமுடையவனாய் இருப்பவனும், ராமாவதார காலத்தில் சாபம் தீர்வதற்கு அகலிகைக்குத் தன் திருவடி ஸ்பரிசம் கிடைக்கும்படி கானில் சென்றவனும் ஆன பெருமான் சேர்ந்து இருக்கும் இடம்.

15. பித்து மல மூமைமுடம் பேய்குருடு கூன்செவிடு
மெய்த்துயர்நோய் தீர்த்தருளும் வேங்கடமே - பக்தருக்கு
வந்ததுக் கங்காப்பான் மலர்உந்தி யின்னுலகம்
தந்ததுக் கங்காப்பான் தலம்

*பித்து மலடு ஊமைமுடம், பேய், குருடு, கூன், செவிடு*
*மெய்த் துயர் நோய் தீர்த்தருளும் வேங்கடமே - பக்தருக்கு*
*வந்த துக்கம் காப்பான் மலர் உந்தியின் உலகம்*
*தந்து அதுக்கு அங்காப்பான் தலம் !*

பொருள் :

மனநோய், மலட்டுத்தன்மை, வாய்பேசாமை, முடம், பேய்த்தன்மை, குருட்டுத்தன்மை, கூனல், செவி கேளாமை ஆகிய நோய்களையும் அவற்றால் உண்டாகும் துன்பங்களையும் தீர்த்து அருள் செய்யும் திருவேங்கடம்தான், தன் அடியார்கட்கு வரும் துன்பங்களை நீக்கிக் காப்பவனும் தனது நாபிக் கமலத்தில் உலகம் அனைத்தையும் படைத்து அதை உண்பதற்காக வாயைத் திறந்தவனும் ஆன பெருமானின் ஊர்.

16. (புதினாறாம் பாடல் முதல் 24ம் பாடல் வரை வேங்கட மலையில் வாழ்வன விண்மீன் ராசிகளைக் கண்டு மனமயக்கம் கொள்வதாய்ப் பாடப்பட்டுள்ளன. அதாவது வேங்கடமலை வானைத் தொடும் அளவு உயர்ந்துள்ளதாய் மறைமுகமாய்க் குறிப்பிடப்பட்டுள்ளது)

வாடப்பசித்த வரியுழுவை வாலாட்டி
மேடத்தைப் பார்த் துறுக்கும் வேங்கடமே - கூடத்துக்
கம்பவள மாவென்றான், காசினிக்கும் வெண்ணெய்க்கும்
செம்பவள மாவென்றான் சேர்வு

*வாடப் பசித்த வரிஉழுவை வால் ஆட்டி*
*மேடத்தைப் பார்த்து உறுக்கும் வேங்கடமே - கூடத்துக்*
*கம்ப வள மா வென்றான், காசினிக்கும் வெண்ணெய்க்கும்*
*செம்பவளம் 'ஆ' என்றான் சேர்வு.*

பொருள் :

வாட்டமுறும் வண்ணம் பசியால் துன்புற்ற வரிப்புலி விண்ணில் உள்ள மேஷராசியினை (ஆட்டினை)க் கண்டு அதை உண்பதற்காக தனது வாலை உயர்த்தியபடி சீறும் வேங்கட மலைதான் கம்சனின் யானைக் கூடத்தில் இருந்து தன்னைக் கொல்வதற்காக அனுப்பப்பட்ட குவாலய பீடம் எனும் வலிமை மிக்க யானையினை வென்றவனும் இந்த பூவுலகினை உண்பதற்காகவும் வெண்ணெய் உண்பதற்காகவும் தனது செம்பவளம் போன்ற திருவாயினை 'ஆ' வென்று திறந்தவனும் ஆன எம்பெருமான் சேர்ந்துள்ள இடம்.

17. தாவிவரும் வானரங்கள் தண்குவட்டில் கற்கடகம்
மேவிவரக் கண்டோடும் வேங்கடமே – காவிரிசூழ்
பொற்றிருவ ரங்கத்தான் போதன்சி வன்னென்னும்
மற்றிருவ ரங்கத்தான் வாழ்வு

*தாவி வரும் வானரங்கள் தண்குவட்டில் கற்கடகம்*
*மேவிவரக் கண்டு ஓடும் வேங்கடமே – காவிரிசூழ்*
*பொன்திரு அரங்கத்தான் போதன் சிவன் என்னும்*
*மற்று இருவர் அங்கத்தான் வாழ்வு.*

பொருள் :

விண்ணைத் தொடும் அளவுக்கு உயர்ந்துள்ள மலை முகட்டில் தாவித் திரியும் குரங்குகள் விண்ணில் உள்ள கடக ராசியினை (நண்டினை)க் கண்டு அஞ்சி ஓடும் திருவேங்கட மலைதான் காவிரியால் சூழப்பெற்ற திருவரங்கத்தில் உள்ளவனும், மும்மூர்த்திகளில் மற்ற இருவரான பிரமனையும், சிவனையும் தன்னுடலின் கண் கொண்டவனான பெருமான் வாழ்கின்ற இடமாகும்.

18. ஒண்சிந்து ரத்தைவெறுத் தூடும் பிடிவேழம்
விண்சிங்கம் கண்டணைக்கும் வேங்கடமே – எண்சிந்தைக்
கோரா விருந்தான் ஒருநாள் விதுரனுக்கு
வாரா விருந்தான் வரை

*ஒண் சிந்துரத்தை வெறுத்து ஊடும் பிடிவேழம்*
*விண் சிங்கம் கண்டு அணைக்கும் வேங்கடமே – எண் சிந்தைக்கு*
*ஓரா இருந்தான் ஒருநாள் விதுரனுக்கு*
*வாரா விருந்தான் வரை.*

பொருள் :

எழில் பொருந்திய தன்துணையான ஆண் யானையினோடு ஊடல்கொண்டு பிணங்கி ஒதுங்கிய பெண்யானை விண்ணில் உள்ள சிங்கத்தை (சிம்மராசியை)க் கண்டு தனது ஊடலை அகற்றிக்கொண்டு ஆண்யானையின் அணுக்கத்தில் ஒதுங்கும் திருவேங்கட மலைதான் உலகத்தார் சிந்தனைக்கும் ஆய்வுக்கும் அப்பால் பட்டவனாய் இருப்பவனும் விதுரனுடைய மாளிகையில் ஒருநாள் வாரா விருந்தினனாய் இருந்தவனும் ஆன பெருமானின் மலையாகும்.

19. மாதுமடக் கன்னி கழை வந்தணுக கம்பத்தின்
மீதுநடிப் பாளொக்கும் வேங்கடமே – ஊது குழற்
பாலன்பா லாக்குவித்தான் பஞ்சவர்க்கா நூற்றுவரை
காலன்பா லாக்குவித்தான் காப்பு

*மாது மடக் கன்னி கழை வந்து அணுக கம்பத்தின்*
*மீது நடிப்பாள் ஒக்கும் வேங்கடமே – ஊது குழல்*
*பாலன் பால் ஆ குவித்தான் பஞ்சவர்க்காய் நூற்றுவரை*
*காலன்பால் ஆக்குவித்தான் காப்பு*

**பொருள் :**

அழகும் மென்மையும் பொருந்திய கன்னி (கன்னிராசி) மலையில் ஓங்கி வளர்ந்திருக்கும் மூங்கிலை நெருங்கி இருப்பதைக் காணும் போது கழைக் கூத்தாடும் பெண் போலத் தோன்றும் வேங்கட மலைதான் குழல் ஊதி வந்த பாலனாய்ப் பசுக் கூட்டங்களைத் தனது இசையால் மயங்கச் செய்து திரண்டு வரும்படிச் செய்தவனும் பாண்டவர்களுக்காகத் துரியோதனனையும் அவன் தம்பியரையும் யமனிடம் சேர்ப்பித்தவனும் ஆன பெருமான் உயிர்களைக் காக்கும் இடம் ஆகும். (கன்னிராசியினைப் பெண்ணாக உருவகப்படுத்துகிறார்)

20. மன்னு குடிக்குறவர் வானூர் துலாத்திடையே
மின்னு மணிநிறுக்கும் வேங்கடமே – என்னுள்
அரவிந்தப் போதகத்தான் அன்பால் அழைத்த
கரவிந்தப் போதகத்தான் காப்பு

*மன்னு குடி குறவர் வான் ஊர் துலாத்து இடையே*
*மின்னும் அணி நிறுக்கும் வேங்கடமே – என் உள்*
*அரவிந்தப் போது அகத்தான் அன்பால் அழைத்த*
*கர விந்தப் போதகத்தான் காப்பு.*

**பொருள் :**

குறிஞ்சி நிலமான வேங்கட மலையில் வாழும் குறவர்கள் வானத்தில் ஊர்ந்து வரும் துலா ராசியில் (தராசு) தங்களது ஒளிபொருந்திய அணிகலன்களை நிறுத்துப் பார்க்க முயற்சி செய்யும் திருவேங்கட மலைதான் என் மனமாகிய தாமரை மலரினைத் தனது வீடாகக் கொண்டு குடியிருப்பவனும் "ஆதிமூலமே" என்று அழைத்த மலை போன்ற துதிக்கையினை உடைய யானையைக் காத்து ஆட்கொண்டவனும் ஆன பெருமான் உயிர்களைக் காக்கும் இடம் ஆகும்.

21. கொல்லைக் குறவர் குளிர்மதிமா னைக்ககன
வில்லைக் குனித்தெய்யும் வேங்கடமே – கல்லை
அரிவைவடி வாக்கினான் அன்னமாய் வேத
விரிவைவடி வாக்கினான் வெற்பு

*கொல்லைக் குறவர் குளிர்மதி மானைக் ககன*
*வில்லைக் குனித்து எய்யும் வேங்கடமே – கல்லை*
*அரிவை வடிவு ஆக்கினான் அன்னம் ஆய் வேத*
*விரிவை வடி வாக்கினான் வெற்பு.*

பொருள் :

வேங்கடமலையில் உள்ள தினைக்கொல்லைகளில் வாழும் குறவர்கள் வானில் உள்ள தண்ணிலவில் தெரியும் மானைத் தங்களது பயிரை மேய வருகிறதோ என எண்ணி விண்ணில் உள்ள (தனுர் ராசி) வில்லை வளைத்து அம்பு எய்ய முயலும் திருவேங்கடமலைதான், கல்லாக இருந்த அகலிகையைப் பெண் வடிவாக மாற்றியவனும் அன்ன வடிவு பெற்று பிரமனுக்கு வேதத்தின் விரிபொருளைத் தெளிந்து சொல்லியவனும் ஆன பெருமானின் மலை.

22. தேனேறித் தேன்வைக்கும் திண் கழைமேல் விண்மகர
மீனேறி வேட்கொடியாம் வேங்கடமே – வானேறித்
தீமுகனாகத் திருப்பார் சேவடிக்கா ளானவனைக்
காமுகனாகத் திருப்பார் காப்பு

*தேன் ஏறித் தேன்வைக்கும் திண்கழைமேல் விண் மகர*
*மீன் ஏறி வேள் கொடிஆம் வேங்கடமே – வான் ஏறி*
*தீ முக நாகத்து இருப்பார், சேவடிக்கு ஆள் ஆனவனை*
*காமுகனாகத் திருப்பார் காப்பு*

பொருள் :

தேனீக் கூட்டங்கள் மேலே பறந்து தேனைச் சேகரித்து வைக்கும் வலிமைமிக்க வானளவு வளர்ந்த மூங்கில்களை வானில் உள்ள மகரராசி மீன் நெருங்கிப் பொருந்தி மன்மதனின் மீன்கொடி போல் காட்சி தரும் திருவேங்கட மலைதான், வைகுந்த நாட்டில் தீ போன்ற நஞ்சினை உமிழும் பாம்புப் பாயலில் இருப்பனும், தனது செம்மையான திருவடிகட்கு ஆட்பட்டவரைக் காமுகனாக மாற்றாதவனும் (சேவடிக்கு ஆட்பட்டவரைப் பெருமான் தனது பரமபதத்தில் சேர்ப்பாரேயன்றி மீண்டும் பிறப்பு இறப்புக்களை உடைய இவ்வுலக இல்லறத்துக்கு அனுப்ப மாட்டார்) ஆன எம்பெருமான் உயிர்களைக் காக்கும் இடமாகும்.

23. ஒண்கொம்பின் தேனிறால் ஊர்பிறைக்கோட் டாலுடைந்து
விண்கும்ப வாய்நிறைக்கும் வேங்கடமே - வண்கும்ப
கம்பத்தா னைக்கடுத்தார் காரரக்கர் போர்மாளக்
கம்பத்தா னைக்கடுத்தார் காப்பு

*ஒண் கொம்பின் தேன் இறால் ஊர் பிறைக்கோட்டால் உடைந்து*
*விண்கும்ப வாய் நிறைக்கும் வேங்கடமே - வண் கும்ப*
*கம்பத்து ஆனைக்கு அடுத்தார், கார்அரக்கர் போர் மாளக்*
*கம் பத்தானைக் கடுத்தார் காப்பு.*

பொருள் :

ஓங்கி வளர்ந்துள்ள மரங்களின் உச்சியில் கட்டப்பட்டுள்ள தேன் கூடுகள் வானில் ஊர்ந்து வரும் பிறைச் சந்திரனின் கொம்பால் கிழிபட்டு விண்ணில் உள்ள குடத்தில் (கும்பராசியில்) தேனைப் பொழிவது போல் தோன்றும் திருவேங்கட மலைதான் வலிமை மிக்க மத்தகத்தினை உடைய யானையினைக் காத்தவனும் கருமை நிற அரக்கர்கள் போரில் மாளவும், தலைகள் பத்து உடையவனான இராவணனை அழித்தவனும் ஆன பெருமான் உயிர்களைக் காக்கும் இடமாகும்.

24. கூனலிள வெண்குருகு கோனேரி யில்விசும்பூர்
மீனநிழ லைக்கொத்தும் வேங்கடமே - கானகத்துப்
பொன்னா ருழையெய்தார் பூங்கழலே தஞ்சமென
உன்னா ருழையெய்தார் ஊர்

*கூனல் இள வெண் குருகு கோனேரியில் விசும்பு ஊர்*
*மீன நிழலைக் கொத்தும் வேங்கடமே - கானகத்துப்*
*பொன் ஆர் உழை எய்தார் பூங்கழலே தஞ்சம் என*
*உன்னார் உழை எய்தார் ஊர்.*

பொருள் :

வளைந்த உடல் கொண்ட இளமையான வெண்ணிறக் கொக்கு கோனேரி நீர் நிலையில், வானத்தில் ஊர்ந்து வரும் (மீன ராசியின்) மீனின் நிழல் தெரியக்கண்டு அந்நிழலைத் தனது இரையென்று கருதிக் கொத்தும் திருவேங்கட மலைதான், வனவாசம் சென்றபோது பொன் மயமான மேனியினைப் பெற்று மானாக வந்த மாரீசனைக் கொன்றவனும் தனது திருவடிகளைத் தஞ்சம் என எண்ணாதவர்களிடம் எய்தாதவனும் ஆன பெருமான் வாழும் ஊர்.

25. மண்மூலந் தாவென்று மந்திகடு வற்குரைப்ப
விண்மூலம் கேட்டேங்கும் வேங்கடமே - ஒண் மூல
வேதத் திருக்குழையார் வெய்யோன் இரண்டனைய
சீதத் திருக்குழையார் சேர்வு

*மண் மூலம் தா என்று மந்தி கடுவற்கு உரைப்ப*
*விண் மூலம் கேட்டு ஏங்கும் வேங்கடமே - ஒண் மூல*
*வேதத்து இருக்கு உழையார் வெய்யோன் இரண்டு அனைய*
*சீதத் திருக்குழையார் சேர்வு.*

பொருள் :

பெண்குரங்கு ஆண்குரங்கிடம் மண்ணில் உள்ள கிழங்கு வகைகளைத் தோண்டி எடுத்துத் தரும்படி கேட்க, அதைக் கேட்ட விண்ணில் உள்ள மூலம் என்னும் விண்மீன் தன்னைத்தான் பறித்துத் தரும்படி கேட்கிறதோ என அஞ்சும் திருவேங்கட மலைதான் ஆதி மறையின் உட்பொருள் ஆனவனும், இரண்டு சூரியர்கள் போல் ஒளிவிடும் இரண்டு திருக்குண்டலங்களை அணிந்தவனும் ஆன பெருமான் சேர்ந்துள்ள இடமாகும்.

26. நாலவிட்ட வொன்னூசல் நன்னுதலார் உந்துதொறும்
மேலவிட்டம் தொட்டிழியும் வேங்கடமே - ஆலமிட்ட
பொற்புக்க ளங்கறுத்தார் போர்சரிய வாணன் தோள்
வெற்புக்க ளங்கறுத்தார் வீடு

*நால விட்ட பொன் ஊசல் நன்னுதலார் உந்துதொறும்*
*மேல் அவிட்டம் தொட்டு இழியும் வேங்கடமே - ஆலம் இட்ட*
*பொற்புக் களம் கறுத்தார் போர் சரிய வாணன் தோள்*
*வெற்புக்கள் அங்கு அறுத்தார் வீடு.*

பொருள் :

தொங்கவிடப்பட்ட பொன்னால் ஆன ஊஞ்சலை அழகிய நெற்றி உடைய பெண்கள் எழுப்பி ஆடும் ஒவ்வொரு முறையும் வானில் உள்ள அவிட்ட நட்சத்திரத்தினைத் தொட்டு இறங்கும்படி உள்ள திருவேங்கட மலைதான் ஆயிரம் தோள்களை உடைய வாணாசுரனுடன் ஏற்பட்ட போரில், ஆலகால விஷம் தங்கியதால் பொலிவு மிக்க கண்டம் கறுத்தவரான சிவன் பின்வாங்க, அவ்வசுரனின் மலைகளைப் போன்ற தோள்களை அறுத்தவரான பெருமான் வாழும் வீடு ஆகும்.

27. பானிறங்கொள் தெங்கினிளம் பாளைவிரியச் சுனையில்
மீனினங்கொக் கென்றொளிக்கும் வேங்கடமே - வானிமிர்ந்த
வெள்ளத்துக் கப்பாலான் மெய்ப்பரம யோகியர்தம்
உள்ளத்துக் கப்பாலான் ஊர்

*பால் நிறம்கொள் தெங்கின் இளம்பாளை விரியச் சுனையில்*
*மீன்இனம் கொக்கு என்று ஒளிக்கும் வேங்கடமே - வான் நிமிர்ந்த*
*வெள்ளத்துக் கப்பு ஆலான் மெய்ப்பரம யோகியர்தம்*
*உள்ளத்துக்கு அப்பாலான் ஊர்.*

பொருள் :

பால்போல் வெண்ணிறமுடைய தென்னம்பாளை விரிய சுனையில் உள்ள மீன் இனங்கள் அப்பாளையினைக் கொக்கு என நினைத்து அஞ்சி மறைந்து கொள்ளும் திருவேங்கட மலைதான் வானை எட்டிய ஊழி வெள்ளத்தில் கிளையுடன் கூடிய ஆல இலையில் துயின்றவனும், மெய்த்தவ யோகியரின் அறிவுக்கும் எட்டாதவனும் ஆன பெருமானது ஊராகும்.

28. கொம்பணியும் தேமாங் குயில்கருடன் போற்கூவ
வெம்பணிகள் புற்றடையும் வேங்கடமே - வம்பணியும்
விண்ணினைந்து காப்பார் மிசைவைத்தார், பத்தரைத்தம்
உண்ணினைந்து காப்பார் ஊர்

*கொம்பு அணியும் தே மாங்குயில் கருடன் போல் கூவ*
*வெம் பணிகள் புற்று அடையும் வேங்கடமே - வம்பு அணியும்*
*விண்ணின் ஐந்து கா பார்மிசை வைத்தார், பத்தரைத் தம்*
*உள் நினைந்து காப்பார் ஊர்*

பொருள் :

மாமரக் கிளையில் உள்ள குயில்கள் தித்திப்புமிக்க மாந்தளிரை உண்டதால் குரல் மாறிக் கருடன் போல் ஒலியெழுப்ப அது கேட்ட கொடிய பாம்புகள் அஞ்சி புற்றுக்குள் செல்லும் வேங்கட மலைதான் விண்ணில் உள்ள மணம் பரப்பும் ஐந்து மரங்களில் ஒன்றான பாரிஜாத மரத்தைப் பூவுலகில் நட்டவனும், தம் அடியவர்களைத் தனது உள் மனத்தே நினைந்து நினைந்து காப்பவனும் ஆன பெருமான் விரும்பும் ஊராகும்.

29. தெங்கிளநீர் வீழச் சிதறு மணியைக் கரிகள்
வெங்கனலென் றஞ்சிப்போம் வேங்கடமே - பைங்கழையின்
மாண்டாரைப் பண்டழைத்தார் மாமரையோன் பால்தோன்றி
மாண்டாரைப் பண்டழைத்தார் வாழ்வு

*தெங்கு இளநீர் வீழச் சிதறும் மணியைக் கரிகள்*
*வெங்கனல் என்று அஞ்சிப் போம் வேங்கடமே - பைங்*
*கழையின்*
*மாண் தாரைப் பண் தழைத்தார் மாமறையோன் பால்தோன்றி*
*மாண்டாரைப் பண்டு அழைத்தார் வாழ்வு.*

பொருள் :

தென்னை மரத்தில் இருந்து இளநீர்கள் விழ அவற்றால் சிதறி விழும் சிவந்த இரத்தினங்களைத் தீக்கங்குகள் என்று நினைத்து யானைகள் அச்சமுற்று விலகிச் செல்லும் வேங்கட மலைதான், பசுமையான மூங்கில் குழலில் மாட்சிமை உடைய இனிய இசையை எழுப்பியவனும், ஒரு மறையவனின் துயர் தீர அவனுடைய இறந்த பிள்ளைகளை மீண்டும் உயிர்பெறச் செய்தவனும் ஆன பெருமான் வாழும் இடமாகும்.

30. அங்கயலில் மேகம் அதிரப் வெரும் பாந்தள்
வெங்கயமென் றங்காக்கும் வேங்கடமே - பங்கயனோ
,டம்பு வனங்கடந்தார் அம்புயத்து மங்கையொடு
வெம்பு வனங்கடந்தார் வெற்பு

*அங்கு அயலில் மேகம் அதிர, வெரும் பாந்தள்*
*வெங்கயம் என்று அங்காக்கும் வேங்கடமே - பங்கயனோடு*
*அம் புவனங்கள் தந்தார், அம்புயத்து மங்கையொடு*
*வெம்பு வனம் கடந்தார் வெற்பு*

பொருள் :

மேகக் கூட்டம் திரண்டு இடி முழக்கம் செய்ய அவ்விடியோசையினை யானையின் பிளிறல் என நினைத்து அந்த யானையை விழுங்குவதற்காக மலைப்பாம்புகள் வாய் திறந்து காத்திருக்கும் வேங்கடமலைதான் தாமரை மலரில் வாழும் பிரமனையும் அழகிய உலகங்களையும் படைத்தவனும் திருமகள் வடிவான சீதா பிராட்டியுடன் கொடிய கானகத்தைக் கடந்தவனும் ஆன பெருமானின் மலையாகும்.

**31.** திங்களிறு மாந்துலவ தீம்பாற் கவளமென்று
வெங்களிறு கைநீட்டும் வேங்கடமே – பொங்கமரில்
ஆர்த்த வலம்புரியார் ஆட்பட்டார் செய்தபிழை
பார்த்த வலம்புரியார் பற்று

*திங்கள் இறுமாந்து உலவ, தீம் பால்கவளம் என்று
வெங் களிறு கை நீட்டும் வேங்கடமே – பொங்கு அமரில்
ஆர்த்த வலம்புரியார் ஆட்பட்டார் செய்த பிழை
பார்த்து அவலம் புரியார் பற்று.*

**பொருள் :**

கலைகள் அனைத்தும் முழுமையானதால் பூரண நிலவு வானில் கர்வத்துடன் உலாவர அந்த நிலவை இனிமை மிகுந்த பால் சோற்று உருண்டை என எண்ணி யானை தன் துதிக்கையினை நீட்டி அதைக் கவர முயற்சி செய்யும் திருவேங்கட மலைதான் பாரதப் பெரும் போரில் தமது வலம்புரிச் சங்கினை முழக்கியவரும், தமது அடியவர்கள் செய்த குற்றங்களைக் கண்டபோதும் அவர்கட்குத் துயரம் தராதவனும் ஆன பெருமான் பற்றாக இருக்கும் இடம்.

**32.** அம்புலியில் வாழ்மான் அதிரும் குரற்பகுவாய்
வெம்புலியைக் கண்டேங்கும் வேங்கடமே – நம்பும்எனை
வீங்கூத்தைக் கண்டிருப்பார் விண்ணோர் நரர் பிறந்து
சாங்கூத்தைக் கண்டிருப்பார் சார்பு

*அம்புலியில் வாழ்மான் அதிரும் குரல் பகுவாய்
வெம்புலியைக் கண்டு ஏங்கும் வேங்கடமே – நம்பும் எனை
வீங்கு ஊத்தைக் கண் திருப்பார் விண்ணோர் நரர் பிறந்து
சாம் கூத்தைக் கண்டு இருப்பார் சார்பு.*

**பொருள் :**

முழு நிலவில் ஒளிர்கின்ற மான், மலையில் உள்ள புலி இடி முழங்குதல் போல் ஒலி எழுப்பி உறுமுவதைக் கேட்டு அஞ்சுவது போல் தோன்றும் (நிலவில் மான் இருப்பது போல் தோன்றுவது மாயக்காட்சிதான். அம் மானுக்கு உயிர் இருப்பது போலும் வேங்கடமலையின் புலி உறுமலால் அது அஞ்சுவதாகவும் கூறியுள்ளது வேங்கட மலையின் வளம் விளக்குவதற்காகக் கூறப்பட்டது) வேங்கட மலைதான் திருவேங்கடப் பெருமானே எனது புகலிடம் என்று நம்பும் என்னை மாசுகள் மிக்க பிறப்பு இறப்புக்களில் தள்ளாதவனும் தேவர்களும் மனிதர்களும் பிறந்து இறந்து தவிக்கும் கூத்தைக் கண்டுகொண்டிருப்பவனும் ஆன பெருமானின் இடம் ஆகும்.

**33.** கண்ணால் வெடித்த கழைமுத்தம் கார்துளைத்து
விண்ணாலி யோடுதிரும் வேங்கடமே – எண்ணார்
கலங்கவரு மஞ்சனையார் கான்முளையை ஊர்ந்தார்,
சலங்கவரு மஞ்சனையார் சார்பு

*கண்ணால் வெடித்த கழைமுத்தம் கார் துளைத்து*
*விண்ஆலியோடு உதிரும் வேங்கடமே – எண்ணார்*
*கலங்க வரும் அஞ்சனையார் கான்முளையை ஊர்ந்தார்*
*சலம் கவரும் மஞ்சு அனையார் சார்பு.*

**பொருள் :**

மூங்கிலின் கணுக்கள் தோறும் வெடித்துச் சிதறிய முத்துக்கள் மேகக் கூட்டத்தினிடையே புகுந்து, பொழியும் மழையின் பனிக்கட்டிகளுடன் கலந்து மண்ணில் விழும் வேங்கட மலைதான் பகைவர்களாகிய அரக்கர்கள் அஞ்சி நடுங்கும்படி, அஞ்சனா தேவியின் மகனான அனுமனின் தோள்மேல் வந்தவனும் கடல் நீரை வாரிக்குடிக்கும் மேகத்தை நிகர்த்த வண்ணமுடையவனும் ஆன பெருமான் சார்ந்துள்ள இடம்.

**34.** செல்லுக்கு மேற்செல்லும் திண்ணியவேய் வாசவனார்
வில்லுக்கு வாளியாம் வேங்கடமே – எல்லுக்குள்
அந்தகா ரம்படைத்தார் ஆரழல்வா யம்பினால்
வெந்தகா ரம்படைத்தார் வெற்பு

*செல்லுக்கு மேல் செல்லும் திண்ணிய வேய் வாசவனார்*
*வில்லுக்கு வாளிஆம் வேங்கடமே – எல்லுக்குள்*
*அந்தகாரம் படைத்தார் ஆர்அழல்வாய் அம்பினால்*
*வெந்த கார் அம்பு அடைத்தார் வெற்பு.*

**பொருள் :**

விண்ணுக்கு மேலும் வளர்ந்துள்ள வலிமையான மூங்கில்கள் வானத்தில் உள்ள இந்திரவில் எனப்படும் வானவில்லில் பொருத்தப்பட்ட அம்புகள் போலத் தோன்றும் திருவேங்கட மலைதான், பாரதப் போரில் தனது சக்கரப் படையால் கதிரவனை மறைத்து பகலிலே இருளை உண்டாக்கியவனும், தனது தீப்பொறி கக்கும் அம்புகளால் வற்றிய கடலின் மேல் அணை கட்டி அடைத்தவனுமான பெருமானின் மலையாகும்.

35. பொன்கமழும் கற்பகத்தின் பூங்கா வணத்துக்கு
மென்கமுகம் காலாகும் வேங்கடமே – நன்கமரும்
ஊரத் திகிரியார் ஊதும் திகிரியார்
வீரத் திகிரியார் வெற்பு

*பொன் கமழும் கற்பகத்தின் பூங் காவணத்துக்கு*
*மென் கமுகு அம் கால் ஆகும் வேங்டமே – நன்கு அமரும்*
*ஊர் அத்திகிரியார் ஊதும் திகிரியார்*
*வீரத் திகிரியார் வெற்பு*

பொருள் :

பொன்மயமான நறுமணம் வீசும் வானகக் கற்பகச் சோலைக்கு இட்ட பந்தலின் கால்கள் போலப் பாக்கு மரங்கள் உயர்ந்து வளர்ந்து பொருந்தியிருப்பது போல் தோன்றும் திருவேங்கட மலைதான் அத்திகிரி எனும் தலத்தில் அமர்ந்த கோலத்தில் அருள்பவனும், மூங்கில் குழலினை ஊதி இசை பொழிந்தவனும் வெல்லும் படையாகிய சக்கரப்படையை உடையவனும் ஆன பெருமானின் மலையாகும்.
(திகிரி என்ற சொல் சக்கரப்படை என்றும் மூங்கில் என்றும் பொருள்படும்)

36. தண்ணிலைக்கண் மூங்கில் தலைதொடுத்த தேனிறால்
விண்ணிலைக்கண் ணாடியாம் வேங்கடமே – உண்ணிவைக்கும்
சோதி வணங்கரியார் தூயசன காதியரும்
ஓதி வணங்கரியார் ஊர்

*தண் இலைக்கண் மூங்கில் தலை தொடுத்த தேன் இறால்*
*விண் நிலைக்கண்ணாடி ஆம் வேங்கடமே – உள் நிலைக்கும்*
*சோதி வணம் கரியார் தூய சனகாதியரும்*
*ஓதி வணங்கு அரியார் ஊர்*

பொருள் :

குளிர்ச்சிமிக்க இலைகளையும் கணுக்களையும் உடைய மூங்கிலின் உச்சியில் கட்டப்பட்டுள்ள தேன்கூடுகள் வானுலகில் உள்ள தேவர்கள் அகத்தில் பொருத்தப்பட்டுள்ள நிலைக் கண்ணாடி போல் தோன்றும் வேங்கட மலைதான் அடியவர்களின் மனத்தில் நிலைத்து நிற்கும் ஒளிச்சுடரானவனும் சனகர் முதலிய முனிவர்கள் நால்வரும் துதித்து வணங்கும் அரியும் ஆனவனுமான பெருமானின் ஊர்
(ஓதி வணங்கு அரியார் என்பதைத் துதித்து வணங்குதற்கு எட்டாதவன் என்றும் சிலர் பொருள் கூறுவர்)

37. தண்கமுகின் பாளை தடங்கதிரின் செல்வனுக்கு
வெண்கவரி போலசையும் வேங்கடமே - ஒண்கடல்சூழ்
வண்டுவரை நாட்டினான் மத்தாக வாரிதியுள்
பண்டுவரை நாட்டினான் பற்று

*தண் கமுகின் பாளை தடங் கதிரின் செல்வனுக்கு*
*வெண் கவரி போல் அசையும் வேங்கடமே - ஒண்கடல் சூழ்*
*வண் துவரை நாட்டினான், மத்தாக வாரிதி உள்*
*பண்டு வரை நாட்டினான் பற்று.*

பொருள் :

குளிர்ச்சிதரும் பாக்குமரத்தின் பாளைகள் விரிந்து காற்றில் அசைய, அக்காட்சி விரிக்கின்ற கதிர்களை உடைய சூரியனுக்கு வெண்சாமரம் வீசுவது போல் தோன்றும் வேங்கடமலைதான் அகன்ற கடல் சூழ்ந்த வளமை மிக்க துவாரகை நாட்டை ஆண்டவனும், முன்பு கடலுக்குள் மந்தர மலையினை மத்தாக நாட்டியவனும் ஆன பெருமானின் பற்றுக் கோடாகும்.

38. அங்கதிரும் கானியாற் றடர்திவலை யானனைந்து
வெங்கதிரும் தண்கதிராம் வேங்கடமே - செங்கதிர் வேற்
சேந்தனத்தம் ஐந்தான் திருத்தாதை விற்கிளையாள்
பூந்தனத்தம் ஐந்தான் பொருப்பு

*அங்கு அதிரும் கான் யாற்று அடர் திவலையால் நனைந்து*
*வெங்கதிரும் தண் கதிர்ஆம் வேங்கடமே - செங்கதிர்வேல்*
*சேந்தன் அத்தம் ஐந்தான் திருத்தாதை விற்கு இளையாள்*
*பூந் தனத்து அமைந்தான் பொருப்பு.*

பொருள் :

பேரொலி எழுப்பி ஓடும் காட்டாற்றில் எழும் அடர்ந்த நீர்த்திவலைகள் தெறித்தலால் வெப்பம் மிகுந்த சூரியனின் கிரணங்கள் நிலவின் கிரணங்கள் போல் குளிர்ந்து விளங்கும் வேங்கடமலைதான் செம்மையான ஒளிவீசும் வேலை ஏந்திய முருகப் பிரானுக்கும், ஐந்து கரங்களை உடைய விநாயகப் பெருமானுக்கும் தந்தையான சிவபெருமானின் வில்லுடன் பிறந்தவளான சீதாப் பிராட்டியின் மென்மையான தனங்களுக்கு உரியவனான பெருமானின் மலையாகும்.

(சீதாப்பிராட்டியை ஜனக மகராஜா கண்டெடுக்கும் போது அக்குழந்தையுடன் சிவதனுசும் இருந்தது. அதனால் தான் சிவனின் வில்லுக்கு இளையவள் என்றார்) (அத்தம் : ஹஸ்தம் அதாவது கை)

**39.** **சேணுலவு திங்களெனும் சித்தசவேள் வெண்குடைக்கு
வேணுவொரு காம்பாகும் வேங்கடமே – கோணுமனத்
தென்னையா ளாகத்தானின் னருள்செய்தான் செங்கமல
மின்னையா ளாகத்தான் வெற்பு**

***சேண் உலவு திங்கள் எனும் சித்தச வேள் வெண் குடைக்கு
வேணு ஒரு காம்பு ஆகும் வேங்கடமே – கோணும் மனத்து
என்னை ஆளாக தான் இன்அருள் செய்தான் செங்கமல
மின்னை ஆள் ஆகத்தான் வெற்பு.***

**பொருள் :**

விண்ணில் உலாவரும் பூரண நிலவான மன்மதனின் வெண்கொற்றக் குடைக்கு ஒரு காம்பு (கைப்பிடி) போல மூங்கில்கள் உயர்ந்து வளர்ந்துள்ள வேங்கடமலைதான் ஒரு நிலையில் நில்லாது தடுமாறும் மனமுடைய என்னை நெறிப்படுத்தி ஆட்கொண்டு நல்லருள் புரிந்தவனும் செந்தாமரை மலரில் இருக்கும் திருமகளை அணையும். மார்பினனும், ஆன பெருமானின் மலையாகும்.

**40.** **தேவருடை ஐந்தருவின் செந்தே னிறால் கிழிய
மீவருடை பாய்கின்ற வேங்கடமே – மூவடிமண்
போயிரந்தா ரத்தர் புனையு மொருபதினா
ராயிரம்தா ரத்தர் அகம்**

***தேவர் உடை ஐந்தருவின் செந்தேன் இறால் கிழிய
மீ வருடை பாய்கின்ற வேங்கடமே – மூவடி மண்
போய் இரந்தார், அத்தர் புனையும் ஒரு பதினாறு
ஆயிரம் தாரத்தர் அகம்***

**பொருள் :**

தேவர்களது உலகத்தில் உள்ள ஐந்து கற்பக மரங்களில் அமைந்துள்ள தேன்கூடுகள் உடைபட்டு தேன் சொரியும்படி மலை ஆடுகள் தாவிப் பாய்கின்ற வேங்கடமலை தான் மகாபலியிடம் போய் மூன்றடி நிலம் யாசித்த தெய்வம் ஆனவனும் பதினாறாயிரம் மனைவியைக் கொண்டவனும் ஆன பெருமானின் வீடு ஆகும்.

41. வன்குறிஞ்சி மாதர் பால் வானாடு மருந்துக்கு
மென்குறிஞ்சித் தேன்மாறும் வேங்கடமே - நன் குறிஞ்சி
பேய்த்த நஞ்சுவைத்தார் பிறர்க்கமுதீந் தீசனுக்கு
வாய்த்த நஞ்சு வைத்தார் வரை

*வன் குறிஞ்சி மாதர்பால் வான் நாடு மருந்துக்கு*
*மென் குறிஞ்சித் தேன் மாறும் வேங்கடமே - நன்கு உறிஞ்சி*
*பேய்த் தனம் சுவைத்தார் பிறர்க்கு அமுதுஈந்து ஈசனுக்கு*
*வாய்த்த நஞ்சு வைத்தார் வரை*

பொருள் :

வலிய சிமிள்போல் தனம் பெற்ற மலைவாழ் குறப்பெண்களிடம் வானுலகத்தவர் அமுதத்தை ஒப்படைத்து மாற்றாகத் தேனைப் பெற்றுக்கொள்ளும் வேங்கட மலைதான் அரக்கியான பூதகியின் முலைப்பாலோடு அவளது உயிரையும் உறிஞ்சியவனும், தேவர்களுக்கெல்லாம் அமுதத்தைக் கொடுத்துச் சிவ பெருமானுக்கு மட்டும் நஞ்சை அளித்தவனும் ஆன பெருமானின் மலையாகும்.

42. வாவுகவின் மந்திநுகர் மாங்கனிக்குக் கற்பகத்தின்
மேவுகவி கைநீட்டும் வேங்கடமே - தாவுகடல்
வேவவிலங் கைக்கொண்டார் வீடணனை வைத்தொழிந்தார்
சாவவிலங் கைக்கொண்டார் சார்பு

*வாவு கவின் மந்தி நுகர் மாங்கனிக்குக் கற்பகத்தின்*
*மேவு கவி கை நீட்டும் வேங்கடமே - தாவுகடல்*
*வேவ, இலங்கைக்கு ஒண் தார் வீடணனை வைத்து ஒழிந்தார்*
*சாவ, வில் அங்கைக் கொண்டார் சார்பு.*

பொருள் :

மலையில் தாவித்திரியும் அழகிய பெண்குரங்கு உண்ணும் மாங்கனியின்பால் ஆசை கொண்டு வானுலகில் உள்ள கற்பக மரத்தில் உள்ள குரங்கு கையை நீட்டும் வேங்கட மலைதான், பள்ளம் நிறைந்த கடல் வெந்து வறழ, இலங்கைக்கு வீடணனை மன்னனாக்கி ஏனைய அரக்கர் அனைவரும் மாண்டுவிடும்படி, தனது அழகிய கரத்தில் வில் ஏந்தியவனான பெருமான் சார்ந்துள்ள இடம். (தாவு - பள்ளம்)

**43.** **வெள்ளியகல் மீதே விடர்முளைத்த செங்காந்தள்
வெள்ளியகல் விளக்காம் வேங்கடமே – வெள்ளியெனும்
வேதியன்நாட் டங்கெடுத்தார் மேதினியைப் பாதலமென்
றோதியநாட் டங்கெடுத்தார் ஊர்**

***வெள்ளிய கல் மீதே விடர் முளைத்த செங்காந்தள்
வெள்ளிஅகல் விளக்குஆம் வேங்கடமே – வெள்ளி எனும்
வேதியன் நாட்டம் கெடுத்தார் மேதினியை பாதலம் என்று
ஓது இயல் நாடு அங்கு எடுத்தார் ஊர்.***

**பொருள் :**

வெண்மை மிகுந்த கல்பிளவுகளில் முளைத்து எழுந்த செம்மைநிறக் காந்தள் மலர்கள், வெள்ளியால் செய்யப்பட்ட அகல் விளக்குகளில் உள்ள தீபத் திரிபோல் காட்சிதரும் வேங்கட மலைதான் அசுரர்களின் குருவான சுக்கிராசாரியனின் விழியைக் குருடாக்கியவனும் பாதாளம் எனப்படும் நாட்டில் இருந்து இப்பூவுலகை இடந்து எடுத்தவனும் ஆன பெருமானது ஊர் ஆகும்.

(மகாபலியிடம் வாமனனாக மூவடி மண் கேட்டபோது அம்மண்ணைத் தாரை வார்த்துத் தரும்படிக் கேட்டார். இத்தானத்தால் மகாபலிக்கு அழிவு என அறிந்த சுக்ராசாரியர், தாரைவார்க்கும் கமண்டலத்தின் மூக்கு வாய்ப்பகுதியில் வண்டு ரூபம் கொண்டு நீர் வராமல் அடைத்து விட்டார். வாமனப் பெருமாள் ஒரு ஈர்க்குச்சியால் கமண்டல வாயைக் குத்தவே வண்டாக அதனுள் இருந்த சுக்கிரனின் ஒரு விழி பழுதானது)

**44.** **அல்லிமலர்க் காந்தளின்மேல் ஆடும்சு ரும்பினங்கள்
மெல்லியலார் கைக்கழுங்காம் வேங்கடமே – மல்லினரைப்
பண்டறைந்த வன்புடையார் பார்த்தனுக்குத் தத்துவநூல்
விண்டறைந்த வன்புடையார் வெற்பு**

***அல்லி மலர்க் காந்தளின்மேல் ஆடும் சுரும்பு இனங்கள்
மெல்லியலார், கைக் கழுங்கு ஆம் வேங்கடமே – மல்லினரைப்
பண்டு அறைந்த வன் புடையார் பார்த்தனுக்குத் தத்துவநூல்
விண்டு அறைந்த அன்பு உடையார் வெற்பு.***

**பொருள் :**

அகவிதழ்கள் நிறைந்துள்ள காந்தள் மலர்களின் மீது தேன் உண்பதற்காக வண்டுகள் அமர்வதும் பின் எழுவதும் பின்னர் மீண்டும் மீண்டும் அமர்ந்து எழும் காட்சி (காந்தளைப்போல் கைகள் கொண்ட) இளநங்கையர் கையால் எறிந்து விளையாடும் சுழற்சிக்காய் (கழங்காடல்) போலத் தோன்றும் வேங்கட மலைதான் துரியோதனனின் அவையில் மல்லர்கள் பலரை அறைந்து அழித்தவனும் அருச்சுனனுக்குக் கீதை எனும் தத்துவத்தை விரித்துப் பொருள் சொன்னவனும் ஆன பெருமானது மலையாகும்.

45. காந்தள் இரவலர்போல் கையேற்பக் கொன்றைகொடை
வேந்தனெனப் பொன்சொரியும் வேங்கடமே – பூந்துளவின்
கான்மடங்கா மார்வத்தார் காண விரும்பினர்மேல்
நான் மடங்கா மார்வத்தார் நாடு

*காந்தள் இரவலர் போல் கை ஏற்பக் கொன்றை கொடை*
*வேந்தன் எனப் பொன் சொரியும் வேங்கடமே – பூந்துளவின்*
*கான் மடங்கா மார்வத்தார், காண விரும்பினர் மேல்*
*நான் மடங்காம் ஆர்வத்தார் நாடு.*

பொருள் :

காந்தள் மலர்கள் மீது கொன்றை இதழ்கள் சொரிந்து கிடக்கும் காட்சி பொருளை நாடிக் கையேந்தி நிற்கும் வறியவர்க்கு வள்ளலான வேந்தன் சொரிந்த பொற்காசுகள் போல் தோன்றும் வேங்கட மலைதான் பசுமையான துளசிமாலையின் வாசனை என்றும் குறையாமல் கொண்ட மார்பகத்தை உடையவனும் தன்னைத் தரிசனம் செய்ய விரும்பும் அடியவர்களிடம் நான்கு மடங்கு ஆர்வம் கொண்டவனும் ஆன பெருமானின் நாடு ஆகும்.

46. நாகத்தின் மேற்குறவர் நன்கெறிந்த மாணிக்கம்
மேகத்தின் மின்புரையும் வேங்கடமே – மாகத்தின்
மாத்தாண்ட மண்டலத்தார் வாயுண் டுமிழ்ந்தளந்து
காத்தாண்ட மண்டலத்தார் காப்பு

*நாகத்தின் மேல் குறவர் நன்கு எறிந்த மாணிக்கம்*
*மேகத்தின் மின் புரையும் வேங்கடமே – மாகத்தின்*
*மாத்து அண்ட மண்டலத்தார் வாய்உண்டு, உமிழ்ந்து அளந்து*
*காத்து ஆண்ட மண் தலத்தார் காப்பு.*

பொருள் :

தமது பயிர்களை அழிக்க வரும் யானைகள் மீது குறவர்கள் எறிந்த சிவந்த மாணிக்கங்கள் மேகமண்டலத்தில் தோன்றிய மின்னலைப் போல விளங்கும் வேங்கட மலைதான் வானவெளியில் உள்ள பெருமைமிக்க அண்டங்களின் மண்டலத்தில் இருப்பவனும் இப்பூவலகை உண்டு, உமிழ்ந்து அளந்து காத்து ஆண்டவனான பெருமான் காக்கும் இடம்.

**47.** **செம்பதும ராகச் சிலைசூழ் பெரும்பாந்தள்**
**வெம்பரிதி ஊர்கோளாம் வேங்கடமே - உம்பருல**
**கோதத்தின் அப்புறத்தான் ஒரா லிலைத்துயின்றான்**
**வேதத்தின் அப்புறத்தான் வெற்பு**

***செம் பதுமராகச் சிலை சூழ் பெரும் பாந்தள்***
***வெம் பரிதி ஊர்கோள் ஆம் வேங்கடமே - உம்பர் உலகு***
***ஓதத்தின் அப்பு உறத் தான் ஓர் ஆலிலையில் துயின்றான்***
***வேதத்தின் அப்புறத்தான் வெற்பு.***

**பொருள் :**

சிவந்த பதுமராகம் போன்ற மலையினைச் சுற்றிக்கொண்ட பெரிய மலைப்பாம்பு, கதிர்வீசும் பகலவனைச் சுற்றி உள்ள பரிவேட வட்டம் போல் தோன்றம் வேங்கட மலைதான் ஊழிக்காலத்தில் வானுலகும் ஏனை உலகு அனைத்தும் நீரில் மூழ்க, தான் மட்டும் ஒரு ஆல இலையில் துயில் கொண்டவனும் வேதங்களுக்கு அப்பால் பட்டவனும் ஆன பெருமானது மலையாகும்.

**48.** **கோலமணிப் பாறையில்பால் கோடரங்கள் செங்கதிரோன்**
**மேலனுமன் பாய்ந்தனைய வேங்கடமே - நாலுமறை**
**ஆய்ந்தபர தத்துவந்தா னானான் குடமாடல்**
**வாய்ந்தபர தத்துவந்தான் வாழ்வு**

***கோல மணிப் பாறையில் பாய் கோடரங்கள் செங்கதிரோன்***
***மேல் அனுமன் பாய்ந்தனைய வேங்கடமே - நாலுமறை***
***ஆய்ந்த பர தத்துவம் தான்ஆனான் குடம் ஆடல்***
***வாய்ந்த பரதத்து உவந்தான் வாழ்வு.***

**பொருள் :**

அழகிய செவ்வொளி வீசும் பாறைகளில் குரங்குகள் பாயும் காட்சி சூரியன் மேல் அனுமன் பாய்வது போல் காட்சி அளிக்கும் வேங்கட மலை, நான்கு மறைகளும் ஆய்ந்து உரைக்கும் மெய்ப்பொருளே தானாக ஆனவனும், குடக்கூத்து எனும் நாட்டிய வகையினை விரும்பி ஆடியவனும் ஆன பெருமானின் வாழும் இடம்.

49. கொம்பினிறால் வாங்கநிமிர் குஞ்சரக்கை அம்புலிமேல்
வெம்பிஎழும் கோளரவாம் வேங்கடமே - தும்பிபல
போர்காது மீர்ந்தார் புனைஅரக்கி மூக்கினொடு
வார்காது மீர்ந்தார் வரை

*கொம்பின் இறால் வாங்க நிமிர் குஞ்சரக்கை அம்புலி மேல்*
*வெம்பி எழும் கோள் அரவுஆம் வேங்கடமே - தும்பி பல*
*போர் காதும் ஈர்ந்தார் புனை அரக்கி மூக்கினொடு*
*வார் காதும் ஈர்ந்தார் வரை.*

பொருள் :

மரங்களின் உச்சியில் கட்டியுள்ள தேன் கூட்டினை எடுப்பதற்காக யானை தனது துதிக்கையை நீட்ட, அக்காட்சி பூரண நிலவை விழுங்க வரும் ராகுவெனும் பாம்பு போல் தோன்றும் திருவேங்கடமலைதான். வண்டுகள் பல மொய்த்திருக்கும் குளிர்ந்த மலர் மாலையினைத் தரித்துக்கொண்டு வந்த சூர்ப்ப நகையின் மூக்கையும் காதுகளையும் அறுத்தவனான பெருமான் வாழும் மலை. (அரக்கியின் மூக்கு, காதுகளை அறுத்தான் என்பதை இயற்றுதல் கருத்தாவாகக் கொள்ளாமல், ஏவுதல் கருத்தாவாகக் கொள்ளவேண்டும்)

50. வண்மைதிகழ் வெண்பளிங்கு வட்டத்தில் கண்துயில்மான்
விண்மதியில் மானேய்க்கும் வேங்கடமே - ஒண்மதியில்
நூலலைத்தா மோதரனார் நோக்கரி யார்துளவ
மாலைத்தா மோதரனார் வாழ்வு

*வண்மை திகழ் வெண் பளிங்கு வட்டத்தில் கண் துயில்மான்*
*விண் மதியில் மான் ஏய்க்கும் வேங்கடமே - ஒண் மதியால்*
*நூலலைத் தாம் ஓது அரனார் நோக்க அரியார் துளவ*
*மாலைத் தாமோதரனார் வாழ்வு.*

பொருள் :

அழகிய வெண்மை நிறமான வட்டவடிவான பளிங்கு பீடத்தில் உறங்கும் மானானது விண்ணில் உள்ள முழு நிலவில் உள்ள மானை ஒத்திருப்பது போல் தோன்றும் வேங்கட மலைதான் சிறந்த அறிவோடு பல்வேறு சாத்திர நூல்களை ஓதி உணர்ந்த சிவனாலும் காண்பதற்கு அரியவனும் துளசி மாலை அணிந்த தாமோதரன் எனப்படும் பெருமானும் ஆனவன் வாழும் இடம்.

51. பாடல் எண் 51 முதல் 100 வரை உள்ள பாடல்கள் சிலேடைக் கவிகள்

காதலிற்றுச் சார்தவர்க்கும் காமியத்தைச் சார்ந்தவர்க்கும்
வேதனைக்கூற் றைத்தவிர்க்கும் வேங்கடமே – போதகத்தை
மோதிமருப் பொசித்தார் முன்பதினா றாயிரவர்
ஓதிமருப் பொசித்தார் ஊர்

*காதல் இற்றுச் சார் தவர்க்கும் காமியத்தைச் சார்ந்தவர்க்கும்*
*வேதனைக் கூற்றைத் தவிர்க்கும் வேங்கடமே – போதகத்தை*
*மோதி மருப்பு ஒசித்தார் முன் பதினாறாயிரவர்*
*ஓதி மருப் பொசித்தார் ஊர்*

**பொருள் :**

உலக ஆசைகளை அறவே நீக்கிய தவ நிலையினைச் சார்ந்தவர்களுக்கு (பிரமனை, யமனை) பிறப்பு இறப்பை ஒழிக்கும் வேங்கடமலை, காமியம் எனப்படும் இப்பிறப்பில் ஏற்படும் பாவ புண்ணியங்களை நாடி இருப்பவர்க்குத் துன்பமாகிய கொடிய யமனை நீக்கும் வேங்கடமலை தான் குவாலய பீடம் என்னும் யானையோடு போர் செய்து அதன் தந்தங்களை முறித்தவனும் பதினாறு ஆயிரம் பெண்களை மணந்து அப் பெண்களின் கூந்தல் நறுமணத்தை நுகர்ந்தவனும் ஆன. பெருமானின் ஊர்.

52. கேள்வித் துறவோரும் கேடறவில் வாழ்வோரும்
வேள்விக் கினமாற்றும் வேங்கடமே – மூள்வித்து
முன்பா ரதமுடித்தார் மொய் வேந்தர், வந்தவிய
வன்பா ரதமுடித்தார் வாழ்வு

*கேள்வித் துறவோரும் கேடு அற இல் வாழ்வோரும்*
*வேள் விக்கினம் ஆற்றும் வேங்கடமே – மூள்வித்து*
*முன்பா ரத முடித் தார் மொய்வேந்தர் வந்து அவிய*
*வன் பாரதம் முடித்தார் வாழ்வு.*

**பொருள் :**

கேள்வி ஞானம் மிக்க துறவியர்கள் (வேள்விக்கு + இனம் ஆற்றும்) யாகங்கள் செய்தற்கு வேண்டிய பணிகளைச் செய்யும் வேங்கடமலை - தீமையற்ற இல்லறத்தில் வாழ்பவர்கள் (வேள் + விக்கினம் + மாற்றும்) காமனால் ஏற்படும் துன்பங்களை மாற்றிடும் வேங்கடமலைதான் தானே மூட்டுவித்து தேர், முடி, மாலைகளை உடைய மன்னர் திரண்டு வந்து போர் புரிந்து மடியும்படி வலிய, பாரதப் போரை முடித்தவனான பெருமான் வாழும் இடமாகும்.

53. பொய்யாம் வினையேனைப் போல்வாரும் அன்பரும்செய்
மெய்யாம் வழுத்தேயும் வேங்கடமே – செய்யாள்
தனத்துவசப் பொற்புள்ளார் தானவரை மோதும்
சினத்துவசப் பொற்புள்ளார் சேர்வு

*பொய் ஆம் வினையேனைப் போல்வாரும் அன்பரும் செய்*
*மெய் ஆம் வழுத்தேயும் வேங்கடமே – செய்யாள்*
*தனத்து வசப் பொற்பு உள்ளார் தானவரை மோதும்*
*சினத் துவசப் பொற் புள்ளார் சேர்வு*

பொருள் :

பொய்மை மிகுந்த இயல்புடைய என்போன்றவர்கள் தங்களில் படிந்த குற்றங்கள் (வழு + தேயும்) நீங்கும் இடமான வேங்கடமலை, எம்பெருமானின் மெய்யன்பர்கள் புரியும் உண்மை பூசனைகள், போற்றிகள் (வழுத்து + ஏயும்) பொருந்திய இடமான வேங்கடமலை தான் திருமகளின் தனங்கட்கு உரிமை உள்ளவனும், அரக்கர்களுடன் போரிடும் கோபம் மிக்க பொற் கருடனைத் தனது கொடியாகக் கொண்டவனும் ஆன பெருமான் சேரும் இடமாகும்.

54. கோடலிலா உள்ளத்துக் கோதில் அடியவரும்,
வேடருமங் கைவரைவெல் வேங்கடமே – மூடர்
மனமா மனைக்கொன்றார், வன்கஞ்சன் என்னும்
சினமா மனைக்கொன்றார் சேர்பு

*கோடல் இலா உள்ளத்துக் கோதுஇல் அடியவரும்*
*வேடரும் அங்கைவரை வெல் வேங்கடமே – மூடர்*
*மனம்ஆம் மனைக்கு ஒன்றார், வன் கஞ்சன் என்னும்*
*சின மாமனைக் கொன்றார் சேர்பு.*

பொருள் :

ஒருநிலைப்பட்ட மனமுடைய குற்றமற்ற அடியார்கள் ஐம்புலன்களையும் (அங்கு + ஐவரை) வெல்கின்ற இடமான வேங்கடமலை வேடர்கள் அழகிய துதிக்கையினை உடைய மலை போன்ற யானையை (அம் + கைவரை) வெல்கின்ற இடமான வேங்கடமலைதான் அறிவற்ற மூடர்களின் மனம் ஆகிய வீட்டில் ஒன்றாதவனும் தன்மீது ஆத்திரம் கொண்ட மாமனான கொடிய கம்சன் என்பவனைக் கொன்றவனும் ஆன பெருமான் சேரும் இடம்.

55. மொய்வதன மங்கையர்கள் முன்கையும் யோகியர்தம்
மெய்வயதும் அஞ்சுகமார் வேங்கடமே – பெய்வளையார்
பாற்றிருப்பா தஞ்சிவந்தார் பற்றினார் புன்பிறப்பை
மாற்றிருப்பா தஞ்சிவந்தார் வாழ்வு

*மொய் வதன மங்கையர்கள் முன்கையும் யோகியர்தம்*
*மெய் வயதும் அஞ்சுகம் ஆர் வேங்கடமே – பெய்வளையார்*
*பால் திருப்பாது அஞ்சி வந்தார் பற்றினார் புன் பிறப்பை*
*மாற்று இருபாதம் சிவந்தார் வாழ்வு.*

**பொருள் :**

பெருமை மிக்க அழகுமுகம் கொண்ட மங்கையர்கள் தங்களது கைகளில் அழகிய கிளிகள் (அஞ்சுகம் + ஆர்) தத்தி விளையாடும் வேங்கடமலை - யோகநிலை கைவரப் பெற்ற முனிவர்களது ஆயுள்காலம் ஐந்து யுகங்களாகும் (அஞ்சு + யுகம் + ஆர்) படி அருளும் வேங்கடமலை தான் பெண்கள் பால் தமது மனத்தைத் (பெண்ணாசை கொள்ளாது) திருப்பாமல் அஞ்சி, பெருமானிடம் வந்து அவரது திருவடிகளில் பற்று வைத்தவர்களுக்குப் பிறப்பு இறப்புகளை மாற்றி அருளும் இரண்டு சிவந்த திருவடிகளை உடைய பெருமானது வாழ்விடமாகும்.

56. இல்லக் குறத்தியரும் யாக்கைநிலை வேட்டவரும்
மெல்லக் கிழங்கெடுக்கும் வேங்கடமே - நல்ல
புதுப்பூவை வண்ணத்தான் போர்முகத்து செவ்வாய்
மதுப்பூவை வண்ணத்தான் வாழ்வு

*இல்லக் குறத்தியரும் யாக்கை நிலை வேட்டவரும்*
*மெல்லக் கிழங்கெடுக்கும் வேங்கடமே - நல்ல*
*புதுப் பூவை வண்ணத்தான் போர் முகத்துச் செவ்வாய்*
*மதுப் பூ வை, வள் நத்தான் வாழ்வு.*

**பொருள் :**

இல்லற வாழ்வில் உள்ள குறப்பெண்கள் மென்று தின்பதற்காக் கிழங்கைத் தோண்டி எடுக்கும் (மெல்ல + கிழங்கு + எடுக்கும்) வேங்கடமலை - மனித உடலோடு பூவுலகில் நிலைத்து இருக்க விரும்புகிறவர்கள். தமது கிழப்பருவத்தினை மெதுவாக நீக்கிக் கொள்ளும் (மெல்லக் + கிழம் + கெடுக்கும்) வேங்கடமலைதான் மலர்ந்த காயாம்பூ போன்ற மேனி நிறம் உடையவனும் போர்க்களத்தில் தனது சிவந்த தேன்சிதறும் தாமரை போன்ற வாயில் வலிமை மிக்க பாஞ்ச சன்னியம் எனும் சங்கை வைத்து ஊதியவனும் ஆன பெருமான் வாழும் இடம்.

57. தேனியலும் கூந்தலார் செங்கரமும் மாதவத்தோர்
மேனியுமை யம்பொழியும் வேங்கடமே – ஞானியர்கள்
தாங்குறியெட் டக்கரத்தார் தாளுரல்மேல் வைத்து வெண்ணெய்
தாங்குறியெட்டக்கரத்தார் சார்பு

*தேன் இயலும் கூந்தலார் செங்கரமும் மாதவத்தோர்*
*மேனியும் ஐஅம்பொழியும் வேங்கடமே – ஞானியர்கள்*
*தாம்குறிஎட்டு அக்கரத்தார் தாள் உரல்மேல் வைத்து வெண்ணெய்*
*தாங்கு உறி எட்டு அக்கரத்தார் சார்பு.*

பொருள் :

"தேன் இயலும் கூந்தலார் மேனியும் மாதவத்தோர் செங்கரமும்" எனப் பொருத்திப் பொருள் கொளல் வேண்டும்.

தேன்கள் சிதறும் மலர்களை அணிந்த கூந்தலை உடைய பெண்கள் மேனியில் காமனது அம்புகள் வந்து தாக்காமல் இருக்கும் (ஐ + அம்பு + ஒழியும்) வேங்கட மலை, நிறை தவமுடையவர்களைத் தேடிவந்து அவர்களது செம்மையான கரங்களில் உணவுவகைகளை பொழியும் (மக்கள் நிரம்பிய) (ஐயம் + பொழியும்) வேங்கடமலைதான், ஞானநிலை கைவரப் பெற்ற முனிவர்கள் இலக்காகக குறித்துத் தியானம் செய்யும் எட்டு எழுத்துக்களான மந்திரத்துக்கு உரியவனும், உரலின் மேல் கால் வைத்து ஏறி வெண்ணெய் வைத்துள்ள. உறியை எட்டிப்பிடித்த கரம் உடையவனும் ஆன பெருமான் சார்ந்துள்ள இடம்.

58. காணயிலார் சொற்கேட்ட கந்தருவ ரும்தவரும்
வீணையிரா கத்தைவிடும் வேங்கடமே – கோணை
இருங்குண்டை ஓட்டினான் ஏற்பொழித்தான் கூனி
மருங்குண்டை ஓட்டினான் வாழ்வு

*காண் அயிலார் சொல் கேட்ட கந்தருவரும் தவரும்*
*வீணை இராகத்தைவிடும் வேங்கடமே – கோணை*
*இருங் குண்டை ஓட்டினான், ஏற்பு ஒழித்தான், கூனி*
*மருங்கு உண்டை ஓட்டினான் வாழ்வு*

பொருள் :

வானிலே உலாவந்த கந்தர்வர்கள் வேல் போன்ற விழிகளை உடைய பெண்களைக் கண்டு அவர்களது இனிய மென்குரல் பேச்சுக்களைக் கேட்டதால் தம்மை மறந்து தாங்கள் எப்போதும் வாசித்துக் கொண்டிருக்கும் வீணை இசையை விட்டு விடும் வேங்கடமலை (வீணை + இராகத்தை) தவத்தில் சிறந்த முனிவர்கள் வீணான ஐயங்களையும் ஆசைகளையும் விட்டுவிடும் (வீண் + அயிர் + இராகத்தை) வேங்கடமலைதான் வலிமை மிக்க காளையை வாகனமாய்க் கொண்ட சிவனின் பிச்சைத் தொழிலை நீக்கியவனும் கைகேயி தாதியான கூனியின் வளைந்த கூன் முதுகில் மண் உண்டைகளை எய்தவனும் ஆன பெருமான் வாழும் இடம் (பிகு) கிருஷ்ணவதாரத்தில் நைவக்கரை எனும் பெண்ணின் கூனை நிமிர்த்தியவன் எனவும் பொருள் கூறுவர்.

**59.** **முந்நூல் மறையவர் நா மூதரம்பை மாரினடு**
**மெய்ந்நூல் நலங்கவரும் வேங்கடமே - பொய்ந்நூலால்**
**அச்சமயக் கத்தினார் ஆதரிக்கத் தெய்வங்கள்**
**வைச்சமயக் கத்தினார் வாழ்வு**

***முந்நூல் மறையவர் நா மூது அரம்பைமாரின் நடு***
***மெய்ந்நூல் நலம் கவரும் வேங்கடமே - பொய்ந் நூலால்***
***அச்ச மயக்கத்தினார் ஆதரிக்கத் தெய்வங்கள்***
***வைச்ச மயக்கத்தினார் வாழ்வு.***

**பொருள் :**

மூன்று புரிகளை உடைய பூணூல் அணிந்த அந்தணர்களின் நாக்கு உண்மையான சாத்திர நூல்களைக் கற்றுத் தேர்ந்து அவற்றின் மெய்ப்பொருளை ஓதும் வேங்கடமலை, பஞ்சு நூலைப் போல் மெல்லிய இடைதுலங்க வரும் தேவ மாதர் நடமாடும் வேங்கடமலைதான் பல பொய்மையான சாத்திர நூல்களால் அச்சமும் மன மயக்கமும் கொண்டவர்கள் கடைப்பிடிப்பதற்காக உண்மையான தெய்வ நெறிகளை வைத்தவனும் தம்மை நாடினவரைத் தம்பால் மயக்கம் கொள்ளும்படி செய்தவனும் ஆன பெருமானின் வாழும் இடம்.
(வைச்ச = வைத்த)

**60.** **ஓதுமறை யோர்புறமும் உள்ளும் கலையினரு**
**மேதையக லாதிருக்கும் வேங்கடமே - கோதைகுழல்**
**சுற்றாத தாரணியார் தூயதிருத் தாளூன்றப்**
**பற்றாத தாரணியார் பற்று**

***ஓதும் மறையோர் புறமும் உள்ளும் கலையின் அரு***
***மேதை அகலாது இருக்கும் வேங்கடமே - கோதை குழல்***
***சுற்றாத தார் அணியார் தூய திருத்தாள் ஊன்றப்***
***பற்றாத தாரணியார் பற்று.***

**பொருள் :**

வேதங்களை ஓதும் மறையவர்களான முனிவர்களின் மேனியில் மான் தோல் அகலாது இருக்கும் அவர்களது மனத்தில் தாம் கற்ற கலைகளின் அறிவு நீங்காது இருக்கும் வேங்கடமலைதான், கோதை நாச்சியாரான ஆண்டாள் தனது குழலில் சூடித் தரும் மாலையினையன்றி வேறு மாலை எதையும் அணியாதவனும் வாமன அவதாரத்தில் ஒருகால் அடியை உலக முழுவதிம் ஊன்றிவிட்டு. மற்றொரு கால் அடியை ஊன்ற இடமில்லாமல் விண்ணில் ஊன்றியவனும் ஆன பெருமானின் பற்றுக்கோடு.

61. நன்முலைபோல் வெண்ணகையார் நாயகர்மேல் வைத்த
நெஞ்சும்
மென்முலையும் கற்புரம்சேர் வேங்கடமே – முன்மலைந்து
தோற்றமா ரீசனார் தோற்றிமா யம்புரிய
சீற்றமா ரீசனார் சேர்வு

*நன் மு(ல்)லை போல் வெண் நகையார் நாயகர்மேல் வைத்த*
*நெஞ்சும்*
*மென்முலையும் கற்புரம்சேர் வேங்கடமே – முன் மலைந்து*
*தோற்ற மாரீசனார் தோற்றி மாயம் புரிய*
*சீற்றம் ஆர் ஈசனார் சேர்வு.*

பொருள் :

எழில் மிக்க முல்லைமலர் போல் வெண்மையான பல் வரிசை தெரிய நகைக்கும் பெண்கள் தத்தம் கணவர்கள் மேல் வைத்த மனம் கற்பின் உறுதியோடு இருக்க அப்பெண்களின் மென்மைமிக்க தனங்கள் பச்சைக் கற்பூரம் கலந்த வாசனைப் பொருள்களைப் பூசியபடி இருக்கும் வேங்கடமலைதான் முன்னாளில் இராமவதாரத்தில் தன்னோடு போர் செய்து தோற்று ஓடி மறைந்த மாரீசன் மீண்டும் பொன் மானாக வடிவு கொண்டு தோன்றி மாயம் செய்ய அது கண்ட சீற்றம் நிறையக் கொண்ட ஈசனான பெருமான் சேர்ந்துள்ள இடம்.

62. கூறும் கிளிமொழியார் கொங்கையென்றும் கண்ணென்றும்
வீறு மருப்பிணைசேர் வேங்கடமே – நாறும்
துளவமலர்க் கண்ணியார் தொண்டாய்த் தமக்கன்பு
உளவமலர்க் கண்ணியார் ஊர்

*கூறும் கிளிமொழியார் கொங்கை என்றும் கண் என்றும்*
*வீறு மருப்பிணை சேர் வேங்கடமே – நாறும்*
*துளவ மலர்க் கண்ணியார் தொண்டாய் தமக்கு அன்பு*
*உள அமலர்க்கு அண்ணியார் ஊர்*

பொருள் :

கிளியின் மொழிபோல் இனிமையாகப் பேசும் பெண்களின் தனங்கள் போன்று விளங்கும் இரட்டையான யானைத் தந்தங்களும், அப்பெண்களது கண்கள் போல் விளங்கும் பெண் மான்களும் மிகுந்த வேங்கட மலைதான், வாசனை மிக்க துளசி மாலையினை அணிந்தவனும் தனக்குத் தொண்டு செய்து தன்பால் அன்பு காட்டும் குற்றம் இல்லாத அடியவர்கட்கு அண்மையில் இருப்பவனும் ஆன பெருமானின் ஊர்.

63. மாதரம்பொன் மேனி வடிவு மவர்குறங்கும்
மீதரம்பை யைப்பழிக்கும் வேங்கடமே – பூதமைந்தின்
பம்பரமா காயத்தார் பாடினால் வீடருளும்
நம்பரமா காயத்தார் நாடு

*மாதர் அம் பொன் மேனி வடிவும் அவர் குறங்கும்*
*மீது அரம்பையைப் பழிக்கும் வேங்கடமே – பூதம் ஐந்தின்*
*பம்பர மா காயத்தார் பாடினால் வீடு அருளும்*
*நம் பரம் ஆகாயத்தார் நாடு.*

**பொருள் :**

பெண்களின் பொன்மயமான உடல் அழகு வானில் உள்ள தேவ மாதர்களை வெட்கப்படச் செய்யும், அவர்களது தொடைகள் வாழைத்தண்டினை நாணம் கொள்ளச் செய்யும்படி இருக்கும் வேங்கடமலைதான் ஐம்பூதங்களால் பம்பரமாகச் சுழற்றப்பெரும் பெரிய உடலைத் தாங்கும் மானிடர் தன்னைத் துதித்துப் பாடினால் பரமபதமாகிய வீடு பேற்றைத் தந்தருளும் நம்முடைய ஒளி மிகுந்த வானில் உள்ள திருமாலின் நாடு ஆகும்.

64. கோள்கரவு கற்றவிழிக் கோதையர்கள் பொற்றாளும்
வேள்கரமும் அம்பஞ்சார் வேங்கடமே – நீள் கரனார்
தூடணனார் முத்தலையார் துஞ்சவெய்து துஞ்சாரைக்
கூடணனார் முத்தலையார் குன்று

*கோள் கரவு கற்ற விழிக் கோதையர்கள் பொற்றாளும்*
*வேள் கரமும் அம்பஞ்சார் வேங்கடமே – நீள் கரனார்*
*தூடணனார் முத்தலையார் துஞ்ச எய்து துஞ்சாரைக்*
*கூடு அணனார் முத்து அலையார் குன்று.*

**பொருள் :**

பொய்மையும் வஞ்சனையும் கண்களால் வெளிப்படுத்தக் கற்ற பெண்களின் பாதங்களில் அழகிய செம்பஞ்சுக் குழம்பு பூசித்திரியும் வேங்கடமலை, (அம்பஞ்சு + ஆர்) மன்மதனின் கைகளில் ஐந்து விதமான மலர் அம்புகள் திகழ (அம்பு + அஞ்சு + ஆர்) விளங்கும் வேங்கடமலைதான் கரன், தூஷணன், திரிசிரன் (முத்தலையான்) ஆகியோர் மாள அம்புகளை ஏவியவனும், கானகத்தில் பதினான்கு ஆண்டு காலம் கண் உறக்கமில்லாமல் துணை நின்ற தம்பியான இலக்குவனோடு பிரியாமல் வாழ்ந்த அண்ணனான முத்துக்கள் விளையும் பாற்கடலை உடையவனுமான பெருமானது மலை.

65. கோங்கைக்கோ டேறி குலுக்குமரி யும்கரியும்
வேங்கைக்கோ டாதரிக்கும் வேங்கடமே – பூங்கைக்குள்
மெய்த்தவளச் சங்கெடுத்தார் மேகலைவிட் டங்கைதலை
வைத்தவளச் சங்கெடுத்தார் வாழ்வு

*கோங்கைக் கோடு ஏறிக் குலுக்கும் அரியும் கரியும்*
*வேங்கைக்கு ஓடாது அரிக்கும் வேங்கடமே – பூங்கைக்குள்*
*மெய்த் தவளச் சங்கு எடுத்தார் மேகலைவிட்டு அங்கை தலை*
*வைத்தவள் அச்சம் கெடுத்தார் வாழ்வு*

பொருள் :

கோங்கு மரங்கிளையில் ஏறி அக்கிளையை உலுப்பும் குரங்குகள் வேங்கைப் புலியைக்கண்டு அஞ்சி ஓடாமல் நெருக்கமாக வரும் வேங்கடமலை, (வேங்கைக்கு + ஓடாது + அரிக்கும்) யானைகள் வேங்கைமரத்தின் கிளைகளைத் தாவிப் பிடிக்கும் வேங்கட மலைதான் (வேங்கைக்கோடு + ஆதரிக்கும்) தனது மலர் போன்ற கையில் வெண்மையான சங்கினை ஏந்தியவனும் கௌரவர் அவையில் துகில் உரியப்படும் போது தனது ஆடையை நெகிழவிடாமல் இடுப்பில் கை வைக்காமல் தலையில் கைகளைக் கூப்பி "கண்ணா" என அபயக்குரல் எழுப்பியவளான பாஞ்சாலியின் அச்சத்தை மாற்றியவனுமான பெருமான் வாழுமிடம்.

66. மாவிற் குயிலும் மயிலும் ஒளிசெய்ய
மேவிப் புயல்தவழும் வேங்கடமே – ஆவிக்குள்
ஆனவரு டந்தடுத்தார், ஆனிரைக்காக் குன்றேந்தி
வானவரு டந்தடுத்தார் வாழ்வு

*மாவில் குயிலும் மயிலும் ஒளிசெய்ய*
*மேவிப் புயல் தவழும் வேங்கடமே – ஆவிக்குள்*
*ஆன அருள் தந்து அடுத்தார் ஆன் நிரைக்காய் குன்று ஏந்தி*
*வான வருடம் தடுத்தார் வாழ்வு.*

பொருள் :

மேகக் கூட்டங்கள் திரண்டு வரக்கண்ட மாமரத்தில் வாழும் குயில்கள் மழை வரப்போகிறதோ என அஞ்சி மறைந்து கொள்ள, அம்மேகக் கூட்டங்களைக் கண்ட மயில்கள் நெஞ்சம் களிப்படைந்து தோகை விரித்து ஒளிர ஆடும் வேங்கடமலைதான் எனது உயிருக்குள் உயிராய் ஒன்றி இருந்து அருள் தந்தவனும் பசுக்கூட்டங்களை வான்மழையில் இருந்து காப்பதற்காகக் கோவர்த்தன மலையினைத் தூக்கியவனும் ஆன பெருமான் வாழுமிடம்.

67. கானோ டருவி கனகமும்முத் தும்தள்ளி
மீனோ வெனக்கொழிக்கும் வேங்கடமே – வானோர்கள்
மேகநய னம்கொண்டார் வேணியரன் காண்பரியார்
காகநய னம்கொண்டார் காப்பு

*கான் ஓடு அருவி கனகமும் முத்தும் தள்ளி,*
*மீனோ எனக் கொழிக்கும் வேங்கடமே – வானோர்கள்*
*மேகன் அயன் அம்கொண்டு ஆர் வேணிஅரன் காண்பு அரியார்*
*காக நயனம் கொண்டார் காப்பு.*

பொருள் :

கானாற்றில் ஓடும் அருவியில் பொன்னும் முத்துக்களும் தெளித்து வருதல் அவ்வருவியில் விண்மீன்கள் உதிர்ந்து திரண்டு வருகின்றனவோ என்னும் வண்ணம் செழிப்பு மிகுந்த வேங்கட மலைதான், தேவர்களும், இந்திரனும், பிரம்மனும் கங்கையாற்றினைச் சடைமுடியில் தாங்கிய சிவனும் காணுதற்கு அரியவனும், ராமாவதாரத்தில் வனவாச காலத்தில் காக வடிவில் வந்து துயர் செய்ததால் அக்காகத்தின் கண்ணை அழித்தவனும் ஆன பெருமான் காக்கின்ற இடம்.

68. கண்டடைந்த வானவரும் காந்தள் குலமலரும்
விண்டவிர்ந்து நிற்கின்ற வேங்கடமே – தொண்டருக்கு
வைகுந்த நாட்டான் மருவுருவம் ஈந்துவைக்கும்
வைகுந்த நாட்டான் வரை

*கண்டு அடைந்த வானவரும் காந்தள் குலமலரும்*
*விண்டவிர்ந்து நிற்கின்ற வேங்கடமே – தொண்டருக்கு*
*வை குந்தம் நாட்டான், மருவு உருவம் ஈந்து வைக்கும்*
*வைகுந்த நாட்டான் வரை.*

பொருள் :

திருவேங்கட மலையின் வனப்பைக் கண்டு அங்கு வந்து அடைந்த தேவர்கள் அவ்வனப்பால் கவரப்பட்டு வேங்கட முடையானின் அருளை நுகர்ந்து தமது வானகத்துக்குத் திரும்பிச் செல்லாமல் விண்ணுலகத்தையும் தவிர்த்து (விண் + தவிர்ந்து) இருக்கும் வேங்கடமலையில் பூத்துள்ள காந்தள் மலர்களின் இதழ்கள் விண்டு விரிந்து மலர்ந்து நிற்கின்ற வேங்கடமலைதான் தன்னுடைய தொண்டர்களுக்கு எமனின் சூலப்படைதாக்கா வண்ணம் காத்து அவர்களை அணைத்து தனது வைகுந்தத் திருநாட்டில் வைப்பவன் ஆன பெருமானது மலை.

69. வாழம்புலி யினொடு வானூர் தினகரனும்
வேழங்களும் வலஞ்செய் வேங்கடமே – ஊழின்கண்
சற்றாயினு மினியான் சாரா வகையருளும்
நற்றாயினு மினியான் நாடு

*வாழ் அம்புலியினொடு வான் ஊர் தினகரனும்*
*வேழங்களும் வலம்செய் வேங்கடமே – ஊழின்கண்*
*சற்று ஆயினும் இனி யான் சாரா வகை அருளும்*
*நல் தாயினும் இனியான் நாடு.*

பொருள் :

எந்நாளும் அழிவு இல்லாது வாழும் நிலவும் வானில் ஊர்ந்து வரும் பகலவனும் வலிமை மிக்க யானைகளும் வலமாக வரும் வேங்கடமலைதான் ஊழ்வினைப் பலன்களில் கொஞ்சம் கூட சாராதபடி எனக்கு நற்கதி அருளும், என்னுடைய நற்பண்பு மிக்க தாயைவிட இனியவனான பெருமானின் நாடு ஆகும்.

70. தாட்கமலப் பூஞ்சுனைக்கும் சாயகங்கள் எய்துதிரி
வேட்கும்வடி வில்லா வேங்கடமே – வாட்கலியன்
நாவியப்பாம் பாட்டினார் நச்சுமடுவைக் கலக்கித்
தாவியப்பாம் பாட்டினார் சார்பு

*தாட் கமலப் பூஞ்சுனைக்கும் சாயங்கள் எய்து திரி*
*வேட்கும் வடிவில்லா வேங்கடமே – வாட் கலியன்*
*நா வியப்புஆம் பாட்டினார், நச்சு மடுவைக் கலக்கித்*
*தாவி அப் பாம்பு ஆட்டினார் சார்பு.*

பொருள் :

தண்டொடு கூடிய தாமரைகள் பொலிந்துள்ள ஊற்றுக்கள் பெருகி வரும் நீர்நிலைகளில் என்றும் நீர் வடிதல் இல்லாமல் விளங்கும் வேங்கடமலை - (வடி + இல்லா) அனைவர் பாலும் இளவேனில் பருவத்தில் மலரம்புகளை எய்து திரியும் மன்மதனுக்கு வடிவம் இல்லாமல் (வடிவு + இல்லா) விளங்கும் வேங்கடமலைதான் கலியன் எனும் பெயர் கொண்ட திருமங்கை ஆழ்வாரது திருவாக்கில் உண்டான அதிசயமான பாடல்களை விரும்பியவனும், மடுக்கரையில் கொடிய நஞ்சு கொண்ட காளிங்கன் எனும் பாம்பின் தலையில் தாவி ஏறி ஆடி அப்பாம்பை ஆட்டுவித்தவனும் ஆன பெருமான் சாரும் இடம்.

**71. ஆயும்துற வறத்தை அண்டினமுத் தண்டினரும்
வேயும் கிளை விட்ட வேங்கடமே – தோயும்
தயிர்க்காத் தாங்கட்டுண்டார் தாரணியில் தந்த
உயிர்க்காத் தாங்கட்டுண்டார் ஊர்.**

***ஆயும் துறவறத்தை அண்டின முத்தண்டினரும்
வேயும் கிளைவிட்ட வேங்கடமே – தோயும்
தயிர்க்காத் தாம் கட்டுண்டார் தாரணியில் தந்த
உயிர்க் காத்து ஆங்கு அட்டு உண்டார் ஊர்.***

**பொருள் :**

தாம் பின்பற்ற வேண்டிய நெறி எதுவென்று ஆராய்ந்து துறவறத்தை ஏற்று மூன்று தலை உடைய தண்டங்களை ஏந்திய முனிவர்கள் தங்களது சுற்றங்களையும் துறந்து திரியும் வேங்கடமலை - மூங்கில் மரங்கள் கிளைவிட்டு செழித்து இருக்கும் வேங்கடமலைதான் தோய்ந்த தயிர் உண்டதால் ஆய்ச்சியரால் கட்டப்பட்டு இருந்தவனும், இப்பூவுலக உயிர்களை உண்டாக்கி, அவ்வுயிர்களைக் காத்து அப்பூவுலகை உண்டவனுமான பெருமானது ஊராகும்.

**72. தொண்டொடுமெய் யன்புடையார் தூமனமும் சந்தனமும்
விண்டொடுபொற் பாம்பணைசேர் வேங்கடமே – தண்டொடுவாள்
கோலமருங் கார்முகத்தார் கோடாழி யார் குழையின்
கோலமருங் கார்முகத்தார் குன்று**

***தொண்டொடு மெய்அன்பு உடையார் தூமனமும், சந்தனமும்
விண் தொடு பொற்பாம் அணைசேர் வேங்கடமே – தண்டொடுவாள்
கோல் அமரும் கார்முகத்தார் – கோடு ஆழியார் குழையின்
கோலம் மருங்கு ஆர் முகத்தார் குன்று.***

**பொருள் :**

தொண்டுள்ளமும், உண்மையான அன்பும் உடைய அடியவர்களின் உள்ளம் விண்ணில் உள்ள பரமபதத்தை அணையும்படியும், மலையில் வளரும் சந்தனமரங்கள் விண்ணைத் தொடும் அளவு உயர்ந்து விளங்கும்படியும் உள்ள வேங்கட மலைதான் தண்டும் வாளும். அம்புகள் பொருந்திய வில்லையும் சங்கும சக்கரமும் உடையவனும் செவியில் அணிந்த குண்டலங்கள் தமது முகத்தின் இருபுறமும் அழகுடன் பொலிய விளங்குபவனும் ஆன பெருமானின் மலை ஆகும்.

73. கிட்டுநெறி யோகியரும் கிள்ளைகளும் தங்கூடு
விட்டுமறு கூடடையும் வேங்கடமே - எட்டுமத
மாவென் றுவந்தான் வரநாளை வாயின்று
போவென் றுவந்தான் பொருப்பு

*கிட்டும் நெறி யோகியரும் கிள்ளைகளும் தம் கூடு*
*விட்டு மறுகூடு அடையும் வேங்கடமே - எட்டு மத*
*மா வென்று வந்தான் வர "நாளை வா இன்று*
*போ" என்று உவந்தான் பொருப்பு.*

**பொருள் :**

முக்தி நெறியினை அடையக்கூடிய ஆற்றல் பெற்ற யோக முனிவர்களும் தம் உயிர் தங்கி உள்ள உடலை விட்டு "கூடுவிட்டு கூடுபாயும்" வித்தையால் வேறு உடலில் தம் உயிரை வைக்கும்படி உள்ள வேங்கடமலை, மலையில் வாழும் கிளிகள் தமது கூட்டை விட்டு வேறு கூட்டில் குடிபுகும் நிலை விளங்கும் வேங்கடமலைதான் எட்டுத் திசைகளில் நிற்கும் வலிமை மிக்க யானைகளை வென்று வந்தவனான இராவணன் போர்க்களத்தில் வந்த போது இன்று போய் நாளை வா எனப் பெருமிதத்துடனும் பெருந்தன்மையுடனும் கூறியவனான பெருமானது மலையாகும்.

74. மட்டுவளர் சாரலினும் மாதவத்தோர் சிந்தையினும்
விட்டுமதி விளங்கும் வேங்கடமே - கட்டு சடை
நீர்க்கங்கை யேற்றான் இரப்பொழித்தான் நீள்குறளாய்ப்
பார்க்கங்கை யேற்றான் பதி

*மட்டு வளர் சாரலினும் மாதவத்தோர் சிந்தையினும்*
*விட்டு மதி விளங்கும் வேங்கடமே - கட்டு சடை*
*நீர்க்கங்கை ஏற்றான் இரப்பு ஒழித்தான் நீள் குறளாய்*
*பார்க்கு அங்கை ஏற்றான் பதி.*

**பொருள் :**

மணம் வீசும் சோலைகள் வளர்ந்துள்ள மலைப்பகுதியில் இடையில் பூரண நிலவு ஒளிவீச, அங்கு வாழும் தவத்தில் சிறந்தவர்கள் மனத்தே அறிவு சுடர் விட்டு ஒளி வீசும்படி இருக்கும் வேங்கடமலைதான் கட்டியுள்ள சடைமுடியில் கங்கையாற்றினை வைத்தவனும், காளையை ஊர்தியாகக் கொண்டவனுமான சிவபெருமானின் இரந்துண்ணும் வாழ்வை மாற்றியவனும், முதலில் குறள் வடிவமாயும் பின்னர், நீண்டு வளர்ந்தும் மூவடி நிலத்தைத் தனது கையில் தானமாக வாங்கியவனும் ஆன பெருமான் இருப்பிடம்.

75. புக்கவரு மாதவரும் பூமதுவுண் வண்டினமும்
மெய்க்கவசம் பூண்டிருக்கும் வேங்கடமே – உய்க்கவெனை
அன்பதனா லாண்டார் அரிவையுடன் கானுறைந்த
வன்பதினா லாண்டார் வரை

*புக்க அரு மா தவரும் பூ மது உண் வண்டினமும்*
*மெய்க் கவசம் பூண்டிருக்கும் வேங்கடமே – உய்க்க எனை*
*அன்பு அதனால் ஆண்டார் அரிவையுடன் கான் உறைந்த*
*வன் பதினால் ஆண்டார் வரை.*

**பொருள் :**

மலையில் தங்கி வாழும் அரிய தவம் செய்த முனிவர்கள் தங்களது உடலிலும் உள்ளத்திலும் மெய் (வாய்மை) யையே கவசமாய்ப் பூண்டிருப்பர், அங்குள்ள பூக்களில் தேன் உண்ணும் வண்டுக் கூட்டங்கள் மலருக்கு மலர் தாவி அலைந்ததாலும் தேனுண்ட மகிழ்வாலும் தங்களது உடலில் பரவசம் ஏற்பட்ட நிலையில் (மெய்க்கு + அவசம்) உள்ள வேங்கடமலை தான் என்னை வாழ்விப்பதற்காக என்மீது அன்பு காட்டி அதனால் என்னை ஆட்கொண்டவனும் சீதாப் பிராட்டியுடன் கானகத்தில் கொடுமை மிகுந்த பதினான்கு ஆண்டுகளைக் கழித்தவனுமான பெருமானது மலையாகும்.

76. தக்கமறை யோர்நாவும் தண்சாரலின் புடையும்
மிக்க மனு வளையும் வேங்கடமே – அக்கு அரவம்
பூண்டார்க்கு மாறுடைத்தார் பொங்கோத நீரடைத்து
மீண்டார்க்குமாறுடைத்தார் வெற்பு

*தக்க மறையோர் நாவும் தண் சாரலின் புடையும்*
*மிக்க மனு வளையும் வேங்கடமே – அக்கு அரவம்*
*பூண்டார்க்கு மால் துடைத்தார் பொங்கு ஓத நீர் அடைத்து*
*மீண்டு ஆர்க்குமாறு உடைத்தார் வெற்பு.*

**பொருள் :**

வேங்கட மலையில் உள்ள தன்மை மிக்க அந்தணர்களின் நாக்கு எப்போதும் மனு நீதியை ஓதிக்கொண்டிருக்கும் அம் மலையைச் சார்ந்துள்ள பக்கங்களில் நற்பெருமாந்தர் சுற்றிக்கொண்டே இருப்பர் அந்த வேங்கட மலைதான் எலும்பு, உருத்திராட்சம் ஆகியவற்றோடு நாகங்களையும் அணிந்த சிவபெருமானுக்குப் பிரம்ம சாபத்தால் ஏற்பட்ட துன்பத்தை நீக்கியவனும் பொங்கும் கடலுக்கு அணை கட்டித் தடுத்து பின்னர் கடல் மீண்டும் ஆர்க்கும் வண்ணம் அந்த அணையை உடைத்தவனும் ஆன பெருமானது மலையாகும்.

77. நீடு கொடுமுடியும் நீதிநெறி வேதியர்கள்
வீடும் மகம்மருவும் வேங்கடமே - கோடும்
கருத்துளவ மாலையார் காணாமல் நின்ற
மருத்துளவ மாலையார் வாழ்வு

*நீடு கொடுமுடியும் நீதிநெறி வேதியர்கள்*
*வீடும் மகம்மருவும் வேங்கடமே - கோடும்*
*கருத்துள் அவ மாலையார் காணாமல் நின்ற*
*மருத்துளவ மாலையார் வாழ்வு.*

பொருள் :

வேங்கட மலையில் நீண்டு உயர்ந்த மலைச் சிகரங்கள் விண்ணில் உள்ள மக நட்சத்திரத்தை எட்டும் அங்குள்ள நீதி நெறியில் வழுவாமல் வாழும் மறையவர்களது வீடுகளில் எப்போதும் யாகங்கள் நடைபெறும் அத்தகைய வேங்கடமலைதான் நேர்மை நிலையில் மாறித் தம் மனத்தே குற்றம் உடையவர்களால் காணமுடியாதபடி நின்ற மணம் கமழும் துளசி மாலையினை அணிந்த பெருமானின் வாழிடம்.

78. சீதங்கொள் சாரலினும் சீர்மறையோர் இல்லிடத்தும்
வேதங்கணால் வளரும் வேங்கடமே - போதன்
சிரித்துப் புரந்துடைத்தான் தேவரொடு அண்டம்
விரித்துப் புரந்துடைத்தான் வெற்பு

*சீதம் கொள் சாரலினும் சீர் மறையோர் இல்லிடத்தும்*
*வேதம் கணால் வளரும் வேங்கடமே - போதன்,*
*சிரித்துப் புரந் துடைத்தான் தேவரொடும் அண்டம்*
*விரித்துப் புரந்து உடைத்தான் வெற்பு*

பொருள் :

வேங்கட மலையில் குளிர்ச்சி மிகுந்த மலைப் பக்கங்களில் மூங்கில்கள் தம் கணுக்களால் வளரும் சீர்மை மிகுந்த அந்தணர்கள் வீடுகள் தோறும் நான்கு வேதங்களும் (வேய் + தம் + கணால்) (வேதங்கள் + நால்) ஓதப் பெற்று விளங்கும் வேங்கட மலைதான் நான்முகனும்,, சிரிப்பு ஒன்றால் முப்புரங்களையும் எரித்தவனான சிவனும் தேவர்களும் அடங்கிய அண்டங்களை (உலகை) ப் படைத்து, காப்பாற்றிப் பின் அழித்தவனும் ஆன பெருமானின் மலை ஆகும்.

79. நன்கோடு போலுமுலை நாரியரும் செண்பகத்தின்
மென் கோடும் கற்பகம் சேர் வேங்கடமே – வன்கோடு
கவிருவர் ஆகனார், கோகனகை பூமியெனும்
ஓரிருவர் ஆகனார் ஊர்

*நன் கோடு போலும் முலை நாரியரும் செண்பகத்தின்*
*மென் கோடும் கற்பகம் சேர் வேங்கடமே – வன்கோடு*
*கவர் இரு வராகனார், கோகனகை பூமியெனும்*
*ஓரிருவர் ஆகனார், ஊர்.*

**பொருள் :**

வேங்கட மலையில் சிறந்த யானைத் தந்தம் போல் தனங்கள் அமைந்த பெண்கள் கற்பு நெறி தவறாமல் இருப்பர் அங்கு செண்பக மரத்தின் மென்மையான கிளைகள் வானுலகில் உள்ள கற்பகச் சோலையினை எட்டும்படி வளரும் அத்தகைய வேங்கட மலைதான், வலிமையும் கூர்மையும் கொண்ட இரு பற்களை உடைய வராக அவதாரம் எடுத்தவனும், செந்தாமரை மலரில் வாழும் திருமகளும், நிலமகளும் ஆன இருவரையும் தழுவும் மார்பினனான பெருமானது ஊர்.

80. கோடஞ்சும் கோதையர்கள் கொங்கையினும், குஞ்சரத்தும்
வேடஞ்ச ரம்துரக்கும் வேங்கடமே – சேடனெனும்
ஓர்பன்ன கத்திடந்தான் உற்றான் இரணியனைக்
கவர்பன்ன கத்திடந்தான் குன்று

*கோடு அஞ்சும் கோதையர்கள் கொங்கையினும் குஞ்சரத்தும்*
*வேடன் சரம் துரக்கும் வேங்கடமே – சேடன் எனும்*
*ஓர் பன்னகத்திடம் தான் உற்றான், இரணியனைக்*
*கவர் பல் நகத்து இடந்தான் குன்று.*

**பொருள் :**

மலைகள்தாம், நிகராக மாட்டோம் என அஞ்சும்படி இருக்கும் மங்கையர்களின் பருத்த தனங்கள் மீது மன்மதன் தனது மலரம்புகளை எய்வான் (வேள் + தன் + சரம் + துரக்கும்) யானைகள் மீது வேடர்கள் அம்புகளை எய்வர் (வேடன் + சரம் + துரக்கும்) அந்த வேங்கட மலைதான் ஆதி சேடன் என்னும் பாம்புப் பாயலில் துயில்பவனும், இரணியனைத் தனது கூரிய பல்லாலும் நகத்தாலும் பிளந்தவனும் ஆன பெருமானின் மலை.

81. நாரியர்தம் கூந்தலினும் நாலும் அருவியிலும்
வேரினறும் சாந்தொழுகும் வேங்கடமே – பாரினுளார்
அற்பசுவர்க் கத்தார் அறிவரியார் : முன்மேய்த்த
நற்பசுவர்க் கத்தார் நாடு

*நாரியர்தம் கூந்தலினும் நாலும் அருவியிலும்*
*வேரினறும் சாந்து ஒழுகும் வேங்கடமே – பாரின் உளார்*
*அற்ப சுவர்க்கத்தார், அறிவு அரியார் : முன் மேய்த்த*
*நல் பசு வர்க்கத்தார் நாடு*

பொருள் :

வேங்கடமலையில் உள்ள மங்கையர்களின் கூந்தலில் வாசனைமிக்க மயிர்ச்சாந்து வழியும் (வேரி + நறும் + சாந்து) அம்மலையிலினின்று வழியும் நீர் அருவிகளில் வேர் அறுபட்ட சந்தன மரங்கள் நீரின் ஒழுக்கோடு சேர்ந்து வரும் (வேரின் + அறும் சாந்து) அந்த வேங்கடமலை தான் இப்பூவுலகில் உள்ளவரும் விண்ணாட்டில் சொர்க்கத்தில் உள்ளவரும் அறிந்து கொள்ள முடியாதவனும் பசுக்கூட்டங்களை மேய்த்தவனும் ஆன வருமானின் நாடாகும்.

82. மாதரார் கண்ணும் மலைச்சாரலும் காமர்
வேதமாற்கம் செறியும் வேங்கடமே – பாதமாம்
போதைப்படத் துவைத்தார் போர்வளைய மாற்றரசர்
வாதைப்படத் துவைத்தார் வாழ்வு

*மாதரார் கண்ணும் மலைச்சாரலும் காமர்*
*வேதமாற்கம் செறியும் வேங்கடமே – பாதம் ஆம்*
*போதைப் படத்து வைத்தார் போர் வளைய மாற்று அரசர்*
*வாதைப்படத் துவைத்தார் வாழ்வு*

பொருள் :

வேங்கட மலையில் மங்கையரின் கண்கள் காமனது கலைகளை விளங்கும்படி பொருந்தி இருக்கும் அம் மலைப் பக்கங்களில் மூங்கில் காடுகள் ஒழுங்கு குலையாமல் நெருங்கி வளர்ந்திருக்கும் அவ்வேங்கட மலை தான் தமது பாத மலர்களைப் பாம்பின் படத்தில் வைத்தவனும் தன்னுடன் போர்புரிய வந்த பகைவர் நாட்டு அரசர்கள் துன்பம் அடையும்படி அழித்தவனான பெருமான் வாழும் இடம்.

*மாற்கம் : ஒழுங்கான வரிசை*

83. எத்திக்கும் காம்பும் எயினருமா ரத்தினையே
வித்திக்க திர்விளைக்கும் வேங்கடமே – தித்திக்கும்
காரிமா றன்பாவார் காதலித்தார் தம்பிறவி
வாரிமா றன்பாவார் வாழ்வு

*எத்திக்கும் காம்பும் எயினரும் ஆரத்தினையே*
*வித்திக் கதிர்விளைக்கும் வேங்கடமே – தித்திக்கும்*
*காரிமாறன் பாவார் காதலித்தார் தம் பிறவி*
*வாரி மாறு அன்பாவார் வாழ்வு.*

**பொருள் :**

வேங்கட மலையின் அனைத்து திசைகளிலும் மூங்கில்களில் முத்துக்கள் ஒளிவீசும் அந்த மலையில் வேடர்கள் முத்துக்கள் போன்ற தானிய விதைகளைப் பயிர்செய்து அத்தானியக் கதிர்களை விளைவிப்பர் அந்த வேங்கட மலைதான் "காரிமாறன்" என்னும் நம்மாழ்வாரின் என்றும் இனிக்கும் பாடல்களில் பாட்டுடைத் தலைவன் ஆனவனும் தம்மீது அன்பு வைத்தவர்களின் பிறவிக் கடலை மாறுமாறு அன்பு வைத்தவனுமான பெருமான் வாழும் இடம்.

84. பாரோடு கான்யாறும் பல்களிறும் நந்தவனம்
வேரோடலைத்தீர்க்கும் வேங்கடமே – காரோதம்
சுட்டகரு விற்படையார் தொண்டரைமீண் டேழுவகை
பட்டகரு விற்படையார் பற்று

*பார் ஓடு கான் ஆறும் பல்களிறும் நந்தவனம்*
*வேரோடு அலைத்து ஈர்க்கும் வேங்கடமே – கார் ஓதம்*
*சுட்ட கரு வில் படையார் தொண்டரை மீண்டு ஏழுவகைப்*
*பட்ட கருவில் படையார் பற்று.*

**பொருள் :**

மலையில் இருந்து சமதரையை நோக்கி இழிந்து வரும் காட்டாறுகளும் யானைக்கூட்டங்களும் மலைக்காடுகளில் உள்ள மரங்களில் வேர்களை அசைத்துப் பிடுங்கி இழுத்து வரும்படி விளங்கும் வேங்கடமலைதான் கரிய கடலினை வறளச் செய்யும்படி அனல் அம்புகளை ஏவிய வலிமை மிக்க வில்லாயுதத்தை ஏந்தியவனும், தனது அடியவர்களை ஏழுவகைப் பிறப்புகளில் படைக்காதவனுமான பெருமான் பற்றுக்கொண்ட இடம்.

**85.** நன்காமர் வண்டினமும் நால்வாய் மதகரியும்
மென்காமர முழக்கும் வேங்கடமே – புன்காமம்
ஏவார்கழலார் எனதுளத்தில் என்தலை வைப்
பூவார்கழலார் பொருப்பு

*நன் காமர் வண்டு இனமும் நால்வாய் மதகரியும்*
*மென் காமர முழக்கும் வேங்கடமே – புன் காமம்*
*ஏவார் கழலார் எனது உளத்தில் என்தலை வைப்*
*பூ ஆர் கழலார் பொருப்பு.*

**பொருள் :**

வேங்கட மலையில் அழகும் கருமை நிறமும் கொண்ட வண்டுகள் மெல்லிய இசையை முழக்கம் செய்யும் (காமரம் + முழக்கும்) அங்கு தும்பிக்கை உடைய வலிய யானைகள் சோலைகளில் உள்ள மரங்களை அசைத்துப் பிடுங்க முயலும் (மென் +கா+மரம்+உழக்கும்) அந்த வேங்கடமலைதான் எனது நெஞ்சினுள் புன்மை நிறைந்த காமத்தை செலுத்தாமல் நெகிழ வைப்பவனும் எனது தலையில் தனது பூப்போல் மலர்ந்த திருவடிகளை வைப்பவனும் ஆன பெருமானின் மலையாகும்.

**86.** பாம்பும் குளிர்சந்தின் பக்கத்தில் நிற்கின்ற
வேம்பும் மருத்துவக்கும் வேங்கடமே – காம்புகரம்
ஆனவரை நன்குடையார் ஆளாய்த் தொழுதேத்தும்
மானவரை நன்குடையார் வாழ்வு

*பாம்பும் குளிர்சந்தின் பக்கத்தில் நிற்கின்ற*
*வேம்பும் மருத்துவக்கும் வேங்கடமே – காம்பு கரம்*
*ஆன வரை நன்குடையார் ஆளாய்த் தொழுது ஏத்தும்*
*மானவரை நன்கு உடையார் வாழ்வு.*

**பொருள் :**

வேங்கட மலையில் உள்ள பாம்புகள் காற்றை விரும்பி உணவாகக் கொள்ளும் (மருத்து + உவக்கும்) அங்கு குளிர்ச்சி மிகுந்த சந்தன மரங்களின் அருகே வளர்ந்துள்ள வேப்பமரங்கள் நறுமணம் வீசும் (மருந்துப் பொருளாகும் எனவும் பொருள் கொள்ளலாம்) கோவர்த்தன மலையை நல்ல குடையாக்கி அக்குடைக்குக் காம்பாகத் தனது கையையே கொண்டவனும் தனக்கு ஆட்பட்டு, தன்னைத் தொழுது வணங்கும் ஆன்மாக்களைக் கடைத்தேற்றும் பெருமான் வாழும் இடம்.

87. சாரும் அருவிதவழ் சாரலுஞ்செஞ் சந்தனத்தின்
வேரும் அரவமறா வேங்கடமே – நேரும்
மதுகைபிட வர்க்கறுத்தார் மாமலரோன் சாபம்
மதுகைபிட வர்க்கறுத்தார் வாழ்வு

*சாரும் அருவிதவழ் சாரலும் செஞ்சந்தனத்தின்*
*வேரும் அரவம் அறா வேங்கடமே – நேரும்*
*மது கைபிடவர்க் கறுத்தார் மாமலரோன் சாபம்*
*மதுகை இடவர்க்கு அறுத்தார் வாழ்வு*

**பொருள் :**

வேங்கட மலையில் அருவிகளில் எப்போதும் பேரோசை நீங்காது ஒலிக்கும் (அரவம் + அறா) அங்கு செந்நிறமான சந்தன மரத்தின் வேர்ப்பகுதியில் மலைப்பாம்புகள் நீங்காமல் இருக்கும் (சந்தன மரத்தின் வேர்கள் மலைப்பாம்புகளைப் போல் தடித்து விளங்கும்) அந்த வேங்கடமலைதான் தன்னுடன் போர் செய்த மது கைடபன் எனும் அரக்கர்களை அழித்தவனும் தாமரை மலரில் வாழும் பிரமனின் சாபத்தை வலிமை மிக்க ரிஷபத்தை வாகனமாய்க் கொண்ட சிவனுக்கு நீக்கியவனும் ஆன பெருமான் வாழும் இடமாகும்.

88. மண்மட்டுத் தாழ்சுனையும் வட்டசி லாதலமும்
விண்மட்டுத் தாமரைசேர் வேங்கடமே – எண்மட்டுப்
பாதமுன் னினைந்தார் பரமபதம் சேர்கவென்று
போதமுன் னினைந்தார் பொருப்பு

*மண்மட்டுத் தாழ்சுனையும் வட்டச் சிலாதலமும்*
*விண்மட்டுத் தாமரைசேர் வேங்கடமே – எண்மட்டுப்*
*பாதம் உன்னி நைந்தார் பரமபதம் சேர்க என்று*
*போத முன் நினைந்தார் பொருப்பு*

**பொருள் :**

வேங்கட மலையில் மணம் மிகுந்த மலர்கள் பொருந்த தரையின் அளவில் தாழ்ந்து வரும் சுனைகளில் தாமரை மலர்கள் நிறைந்து விளங்கும் (தாமரை + சேர்) அம்மலையில் உள்ள வட்ட வடிவமான கற்பாறைகளில் விண்ணளவு தாவும் மான்கள் நிறைந்து இருக்கும் (தா + மரை + சேர்) வேங்கடமலைதான் தனது திருவடியை எள்ளளவு நேரமாகிலும் நினைத்து உருகுபவர்களைத் தனது பரம பதம் அடைக என நினைக்கும் பெருமானின் மலையாகும்.

89. போதாவிரு சுடரும் போதுதற்கும் ஓதுதற்கும்
வேதாவினால் முடியா வேங்கடமே – மாதாவின்
வீங்குதனத் துக்கினியான் விம்மியழா தாட்கொண்டான்
தாங்குதனத் துக்கினியான் சார்பு

*போதா இருசுடரும் போது தற்கும் ஓதுதற்கும்*
*வேதா வினால் முடியா வேங்கடமே - மாதாவின்*
*வீங்கு தனத்துக்கு இனி யான் விம்மி அழாது ஆட்கொண்டான்*
*தாங்கு தன் நத்துக்கு இனியான் சார்பு*

பொருள் :

வேங்கட மலையில் மூங்கில்கள் விண்ணுற ஓங்கிச் செறிந்து வளர்ந்துள்ளதால் சூரியன் சந்திரன் ஆகிய இரண்டு ஒளிச் சுடர்களும் செல்ல வழிகள் இல்லாது விளங்கும் அம்மலையின் சிறப்பினைக் கூற நான் முகனாலும் இயலாது அந்த வேங்கட மலைதான் இனிமேலும் நான் தாயின் முலைப்பால் அருந்துதற்கு ஏங்கி அழாமல் (இனிப் பிறப்பு இல்லாதபடி) என்னை ஆட்கொண்டவனும் தனது கரத்தில் உள்ள சங்கினை விரும்பி ஊதுபவனும் ஆன பெருமான் சார்ந்துள்ள இடமாகும்.

90. பேய்க்குமொரு பேய்போன்று பித்தாய்த் திரிவோர்க்கும்
வேய்க்குமணி முத்திவரும் வேங்கடமே – வாய்க்கமுதூர்
வண்மைப்பே ராயிரந்தான் மன்னினான் மாவலிபால்
தண்மைப்பே ராயிரந்தான் சார்பு

*பேய்க்கும் ஒரு பேய் போன்று பித்தாய்த் திரிவோர்க்கும்*
*வேய்க்கும் அணி முத்திவரும் வேங்கடமே – வாய்க்கு அமுது ஊர்*
*வண்மைப் பேர் ஆயிரம் தான் மன்னினான் மாவலி பால்*
*தண்மைப் பேராய் இரந்தான் சார்பு*

பொருள் :

வேங்கட மலையில், பேய்களுக்கே ஒரு பேயைப் போல் காட்சிதரும் மனநோய் கொண்டவர்களுக்கும் (அம் மலையை அடைந்ததால்) வீடுபேறு கிடைக்கும் அங்கு செழித்து வளர்கின்ற மூங்கில்கள் அழகுமிக்க முத்துக்களை பொருந்தி இருக்கும் (விளைந்திருக்கும்) (முத்து + இவரும்) அந்த வேங்கட மலைதான் உரைத்தாலே வாயில் அமுதை ஊறச் செய்யும் புகழ்ப் பெயர்கள் ஆயிரம் கொண்டவனும், மாவலி மன்னனிடம் மிகவும் எளிய குறளனாய் மூன்றடி மண் இரந்தவனும் ஆன பெருமான் சார்ந்துள்ள இடம்.

91. வாழ்க்கைமனை நீத்தவரும் வாளரியும் மாதங்க
வேட்கைமறந் திகழும் வேங்கடமே – தோட்கைவிழ
மாகவந்தனைக் கழித்தார் வாழிலங்கைப் பாதகரை
லோகவந்தனைக் கழித்தார் ஊர்

*வாழ்க்கை மனை நீத்தவரும் வாள்அரியும் மாதங்க*
*வேட்கை மறம்திகழும் வேங்கடமே – தோள், கை, விழ*
*மா கவந்தனைக் கழித்தார் வாழ் இலங்கைப் பாதகரை*
*லோக வந்தனைக்கு அழித்தார் ஊர்*

**பொருள் :**

வேங்கட மலையில் வாழும், மனையறம் துறந்து துறவறம் கொண்டவர்கள் (மாது + அங்க + வேட்கை + மறந்து + இகழும்) சிற்றின்ப ஆசையை மறந்து இகழ்வர் (மாதங்க + வேட்கை + மறந்து + இகழும் எனப் பிரித்து நிறைந்த பொன் ஆசையினை மறந்து இகழ்வர் எனப் பொருள் கூறுவதும் உண்டு) அம்மலையில் வாழும் கொடுமை மிக்க சிங்கங்கள் யானைகளை வேட்டையாடிக் கொல்ல வேண்டும் எனும் ஆசையும் சினமும் விளங்கும்படித் திரியும் (மாதங்க + வேட்கை + மறம் + திகழும்) அந்த வேங்கட மலைதான் கபந்தன் எனும் அரக்கனின் தோள்களையும் கைகளையும் வெட்டி வீழ்த்தியவனும் உலகத்தவர் வணங்கி வேண்டியதால் இலங்கையில் வாழ்ந்த அரக்கர்களை அழித்தவனும் ஆன பெருமானின் ஊராகும்.

92. வஞ்ச மடித்திருப்பார் வாக்கும் கலைக்கோடும்
விஞ்ச மடித்திருக்கார் வேங்கடமே – கஞ்சப்
பிரமா னந்தத்தான் பிரபஞ்சம் மாய்த்த
பரமா னந்தத்தான் பதி

*வஞ்சம் அடி திருப்பார் வாக்கும் கலைக்கோடும்*
*விஞ்ச மடித்திருக்கார் வேங்கடமே – கஞ்சப்*
*பிரமா நந்த தான் பிரபஞ்சம் மாய்த்த*
*பரமானந்தத் தான் பதி.*

**பொருள் :**

வஞ்சத்தின் பால் செல்லாதவர்களின் சொற்கள் நிறைந்த மறைமொழிகளைக் கூறும், மான்களின் கொம்புகள் வளைந்து வலிமை பொருந்தி இருக்கும் வேங்கட மலைதான், தாமரை மலரில் இருக்கும் பிரமனும் அழிய ஊழிப் பேரழிவு காலத்தில் பெருமகிழ்வுற்ற பெருமானின் ஊர் ஆகும்.

93. கூட்டு தவத்தவரும் கோளரிக ளின்தொகையும்
வேட்டு வரம்பொழியும் வேங்கடமே – மோட்டுமதத்
தந்திக் கமலத்தார் தம்பெறூஉம் வீடளித்தார்
உந்திக் கமலத்தார் ஊர்

*கூட்டு தவத்தவரும் கோளரிகளின் தொகையும்*
*வேட்டு வரம்பொழியும் வேங்கடமே – மோட்டு மதத்*
*தந்திக்கு அமலத்தார் தம் பெறூஉம் வீடு அளித்தார்*
*உந்திக் கமலத்தார் ஊர்.*

பொருள் :

தாங்கள் கூட்டுவித்த தவ வலிமை மிக்கவர்கள் தம்மிடம் வேண்டி வந்தவர்கட்கு வரங்களைப் (வேட்டு + வரம் + பொழியும்) பொழிகின்ற. சிங்கக் கூட்டங்கள் தம்மீது வேடுவர்கள் எய்யும் அம்புகட்குத் தப்பி மறைகின்ற வேங்கட மலைதான் உயர்ந்த மதம் பொழியும் யானைக்குக் குற்றமற்றவர்கள் பெறுவதற்கு உரிய வீடுபேற்றை அளித்தவனும் தனது கொப்பூழில் தாமரை மலரினை உடையவனுமான பெருமானின் ஊராகும்.

94. சேலஞ்சுங் கண்மடவார் தேங்குழலும் கோங்கினமும்
மேலஞ்சு வர்க்கமாம் வேங்கடமே – கோலஞ்சேர்
மாரிலலங் காரத்தார், மற்றும்பல் பூணணிந்த
காரிலலங் காரத்தார் காப்பு

*சேல் அஞ்சும் கண்மடவார் தேம் குழலும் கோங்கினமும்*
*மேலஞ்சுவர்க்கம் ஆர் வேங்கடமே – கோலம்சேர்*
*மாரில் அலங்கு ஆரத்தார், மற்றும் பல் பூண் அணிந்த*
*காரில் அலங்காரத்தார் காப்பு*

பொருள் :

வேங்கட மலையில் சேல் மீனினம் ஒப்பாக மாட்டோம் என அஞ்சும் வண்ணம் அமைந்த கண்களை உடைய பெண்கள் தங்களது கூந்தலை ஐந்து விதமாய் (முடி, குழல், சுருள், கொண்டை, பனச்சை) (மேல் + அஞ்சுவர்க்கம்) பின்னிவருவர் அம்மலையில் கோங்கு மரங்கள் வான் உலகில் உள்ள சொர்க்கத்தை எட்டும் வண்ணம் உயர்ந்து விளங்கும். அவ்வேங்கட மலைதான் அழகு மிகுந்த தனது மார்பினில் மாலைகள் அசைந்து விளங்கும்படி இருப்பவனும், மேலும் பல வகையான ஆபரணங்களை அலங்காரமாய் அணிந்த கரியதிருமேனியானும் ஆன பெருமானது காப்பிடமாகும்.

95. கொய்யும் மலர்ச் சோலைக் கொக்கும் பிணியாளர்
மெய்யும் வடுத்தவிரும் வேங்கடமே - நையும்
சனனாந் தகனார், தலையிலி தோள் சாய்த்த
சினனாந் தகனார் சிலம்பு

*கொய்யும் மலர்ச் சோலைக் கொக்கும் பிணியாளர்*
*மெய்யும் வடுத் தவிரும் வேங்கடமே - நையும்*
*சனன அந்தகனார், தலையிலி தோள் சாய்த்த*
*சின நாந்தகனார் சிலம்பு*

**பொருள் :**

கொய்யப்படும் மலர்கள் நிறைந்த சோலையில் உள்ள மாமரங்கள் மாவடுக்ளை உதிர்க்கின்ற, (வடு + தவிரும்) நோய் கொண்டவர்களின் உடல்களில் (வேங்கட மலையில் வந்ததால்) நோயால் ஏற்பட்ட தழும்புகள் நீங்குகின்ற வேங்கட மலைதான், துயரம் கொண்டு வருந்தும் பிறப்பை ஒழிப்பவனும் தலையே இல்லாத அரக்கனான கபந்தனின் தோள்களை வெட்டி வீழ்த்திய "நாந்தகம்" எனும் சினவாள்படை உடையவனுமான பெருமானின் மலையாகும்.

96. நேர்க்கவலை நோயினரும் நீடுசிலை வேடுவரும்
வேர்க்கவலை மூலம்கல் வேங்கடமே - கார்க்கடல்மேல்
தாண்டும்கா லத்திறப்பார் தம்மைவிழுங்கிக் கனிவாய்
மீண்டும்கா லத்திறப்பார் வெற்பு

*நேர்க் கவலை நோயினரும் நீடுசிலை வேடுவரும்*
*வேர்க்கவலை மூலம் கல் வேங்கடமே - கார்க்கடல்மேல்*
*தாண்டும் காலத்து இறப்பார் தம்மைவிழுங்கிக் கனிவாய்*
*மீண்டும் காலத் திறப்பார் வெற்பு.*

**பொருள் :**

வேங்கட மலையில் நோய் கொண்டவர்கள் தம் உடல் வேர்க்க, அலைந்து மருத்துவ மூலிகைகளைச் சேகரிப்பர். அம் மலையில் உள்ள நீண்ட விற்களை உடைய வேடர்கள் கவலைக் கிழங்கைத் தோண்டி எடுப்பர். அந்த வேங்கட மலைதான், கருமையான கடல் பொங்கி வரும் ஊழியில் உயிர்களை (காப்பதற்காக) உண்டு பின்னர் மீண்டும் அவ்வுயிர்கனை வெளிப்படுத்துவதற்காகத் தனது கனிவாயைத் திறப்பவனான பெருமானின் மலையாகும்.

97. தண்டா மரைச் சுனையில் சாதகமும் வேடுவரும்
விண்டாரை நாடுகின்ற வேங்கடமே – தொண்டாக்கி
ஏவத்தனக் குடையார் என்னைமுன் னாளெடுத்த
கோவத்தனக் குடையார் குன்று

*தண் தாமரைச் சுனையில் சாதகமும் வேடுவரும்*
*விண்டாரை நாடுகின்ற வேங்கடமே – தொண்டு ஆக்கி*
*ஏவத் தனக்கு உடையார் என்னை, முன்நாள் எடுத்த*
*கோவத்தன குடையார் குன்று.*

பொருள் :

வேங்கட மலையில் குளிர்ச்சி மிகுந்த தாமரைத் தடாகத்தில் வாழும் சாதகப் பறவைகள் (விண் + தாரை) விண்ணில் இருந்து இழியும் மழைத்துளிகளை நாடும். அம் மலையில் உள்ள வேடுவர்கள் (விண்டாரை) பகைவர்களை நாடி அவர்களை அழிக்க நினைப்பர் அம்மலைதான், என்னைத் தனது தொண்டனாய் மாற்றி ஏவுதற்குத் தமது உடைமையாக்கிக் கொண்டவனும் முன்பு கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்தவனும் ஆன பெருமானது மலையாகும்.

98. வாழரியும் சந்தன்ந்தோய் மாருதமும் தாக்குதலால்
வேழமருப் புகுதும் வேங்கடமே – நீழல்அமர்
பஞ்சவடி காட்டினான் பாரளப்பான் போலெவர்க்கும்
கஞ்சவடி காட்டினான் காப்பு

*வாழ் அரியும் சந்தனம் தோய் மாருதமும் தாக்குதலால்*
*வேழ மருப்புகுதும் வேங்கடமே – நீழல் அமர்*
*பஞ்சவடி காட்டினான் பார் அளப்பான் போல் எவர்க்கும்*
*கஞ்ச அடி காட்டினான் காப்பு*

பொருள் :

வலிய சிங்கங்கள் தாக்குவதால் யானைகளின் தந்தங்கள் (வேழம் + மருப்பு + உகும்) முறிந்து விழுகின்ற வேங்கடமலை, சந்தன மரங்களின் ஊடே புகுந்து வரும் காற்று படிவதால் மூங்கில்களும் நறுமணம் வீசுகின்ற வேங்கட மலைதான், மர நிழல்களின் அடியில் கட்டிய பஞ்சவடியில் காட்டில் வாழ்ந்தவனும், இவ்வுலகத்தைத் தனது திருவடியால் அளப்பவன்போல் தனது தாமரை மலரடியை அனைவருக்கும் காட்டியவனும் ஆன பெருமான் காக்கும் இடம்.

99. எவ்விடமு மாறுதோய்ந் தெல்லோரும் பல்பாம்பும்
வெவ்விடரின் நீங்கியெழும் வேங்கடமே – தெவ்விடையேழ்
அட்டவனா கத்தணையான் ஆதிமறை நூல்மார்க்கம்
விட்டவனா கத்தணையான் வெற்பு

*எவ்விடமும் ஆறு தோய்ந்து எல்லோரும் பல் பாம்பும்*
*வெவ்விடரின் நீங்கிஎழும் வேங்கடமே – தெவ் விடை ஏழ்*
*அட்டவன் நாகத்து அணையான் ஆதிமறை நூல் மார்க்கம்*
*விட்டவன் ஆகத்து அணையான் வெற்பு*

**பொருள் :**

வேங்கட மலையில் உள்ள யாவரும் அம்மலைகளில் உள்ள புண்ணிய தீர்த்தங்களில் மூழ்கி எழுந்து, கொடிய துன்பங்கள் நீங்கப் பெறுவர் (வெவ் + இடரின் + நீங்கி) அம்மலையில் உள்ள மலைப் பிளவுகளில் பாம்புகள் வெளிப்பட்டு எழும் (வெள் + விடரின் + நீங்கி) அந்த வேங்கட மலைதான் பகைமை கொண்ட காளைகள் ஏழையும் வென்றவனும், வேதங்கள் காட்டும் பாதைகளை விட்டவர்களைச் சேராதவனும் ஆன பெருமானின் மலை.

100. பாடும் மதுகரமும் பச்சைத் தழைக்குடிலின்
வேடும் மணமருவும் வேங்கடமே – நீடு
மகரால யங்கடந்தார் வாழ் வசுதேவர்க்கு
மகரால யங்கடந்தார் வாழ்வு !

பாடும் மதுகரமும் பச்சைத் தழைக் குடிலின்
வேடும் மணம் மருவும் வேங்கடமே – நீடு
மகராலயம் கடந்தார் வாழ் வசுதேவர்க்கு
மகர் ஆலயங்கள் தந்தார் வாழ்வு.

**பொருள் :**

வேங்கட மலையில் இனிய இசை எழுப்பிக் கொண்டு திரியும் வண்டுக் கூட்டங்கள், மலர்களின் நறுமணத்தால் கவரப்பட்டு மலர்களை அடையும் அம் மலையில் பசிய ஓலைக் குடிசைகளில் வாழும் வேடர்கள் திருமணத்தை நாடிச் செய்து கொள்வர் அம் மாலைதான் நீண்டு செறிந்த கடலை அணையிட்டுத் தாண்டிச் சென்றவனும் வசுதேவரின் மகனும் உலக மக்கள் தொழுவதற்கு ஆலயங்கள் தந்தவனும் ஆன பெருமான் வாழும் இடம்.



உ

ஸ்ரீ ராமஜெயம்



# திருவரங்கத்து அந்தாதி

*அழகிய மணவாள தாசர்*

ஆர்க்கும் புனற்பொன்னி வருடும் அரங்கன்

அடிக்கு, நெஞ்சை

ஈர்க்கும் யமக அந்தாதியாய் நூறு

இயம்பி நின்ற

சீர்க்கும் புகழ்சேர் மணவாள தாசரின்

செஞ்சொல் தனைப்

பார்க்கும் எவர்க்கும் திருவரங்கன் அருள்

பாலிக்குமே.

*விளக்க உரை*

*மு.நா. நாராயணன்*



# திரு அரங்கத்து அந்தாதி

1. திருவரங்காவுறை மார்பா ! திசைமுகன்
சேவிப்பகந்
திருவரங்கா தரித்தின் னிசைபாடத்
திருக்கண் வளர்
திருவரங்காவுன் பழவடி யேற்கருள்
செய்யவெழுந்
திருவரங்கா தலித்தேனு னக்கேதொண்டு
செய்வதற்கே !

*திரு அரங்கா(ய்) உறைமார்பா ! திசை முகன்
சேவிப்ப,
கந்திருவர் அங்கு ஆதரித்து இன்னிசை பாடத்
திருக்கண் வளர்
திருஅரங்கா ! உன் பழ அடியேற்கு அருள்
செய்ய எழுந்திரு !
வரம் காதலித்தேன் உனக்கே தொண்டு
செய்வதற்கே.*

**பொருள் :**

திருமகள் தங்கி உறையும் இருப்பிடமாக உள்ள மார்பகத்தை உடையவனே ! (திரு அரங்காது உறைமார்பா எனப் பிரித்து திருமகள் அழிதல் இல்லாது வாழும் மார்பினன் என்று பொருள் கூறுவாரும் உண்டு - அரங்குதல் = அழிதல்) நான்முகன் வந்து வணங்க, கந்தர்வர்களும் அவ்வாறு வணங்கி இனிய இசை பொழிய, அதைக் கேட்டவண்ணம் கண்துயிலும் திருஅரங்கப் பெருமானே ! நான் உனக்குத் தொண்டு செய்யும் பேறாகிய வரத்தைப் பெற விரும்பினேன் ! ஆதலால் உன்னுடைய பழமையான அடியவனான எனக்கு அருள் செய்ய எழுவாயாக !

2. செய்யவளைக் குரு வின்னருளால் திருத்
தாள் வணங்கி
செய்யவளைக் குலம் சூழரங்கேசன்
சிறிதமுது
செய்யவளைக் கும் புவிக்குமங் காந்தசெவ்
வாய் முகுந்தன்
செய்யவளைக் கும் சிலம்பணி பாதங்கள்
சேர்ந்தனமே.

*செய்யவளைக் குருவின் அருளால் திருத்தாள்*
*வணங்கி,*
*செய்ய வளைக்குலம் சூழ் அரங்கேசன்;*
*சிறிது அமுது*
*செய்ய அளைக்கும் புவிக்கும் அங்காந்த*
*செவ்வாய் முகுந்தன்*
*செய்ய வளைக்கும் சிலம்பு அணி பாதங்கள்*
*சேர்ந்தனமே !*

**பொருள் :**

எனக்கு நல்லறிவு புகட்டிய ஆசிரியரின் அருளால், திருமகளின் தாள் மலர்களைத் தொழுது வணங்கி, வயல்களில் சங்கினங்கள் திரண்டிருக்கும் திருவரங்கத்துப் பெருமானும், இப்பூவுலகையும், வெண்ணெயையும், உண்பதற்காகச் சிறிது திறந்த செவ்வாயை உடைய முகுந்தனும் ஆன பெருமானின், வளைந்துள்ள "சிலம்பு" எனும் அணி பொருந்திய சிவந்த மலரடிகளை அடைந்தேன்.

3. தனமாதரம் சொற் குதலைப்புதல்வர்
தரணியில்லம்
தனமாதரம் செயும் வாழ்வஞ்சியே
தஞ்சம் நீயெனப் போந
தனமாதரம் கிக்க வெற்பெடுத்தாய்
தண்ணனந்த சிங்கா
தனமாதரம் கம்உள்ளா யரங்காமுத்தி
தந்தருளே

*தனமாதர், அம்சொல் குதலைப் புதல்வர்*
*தரணி, இல்லம்*
*தனம் ஆதரம் செயும் வாழ்வு அஞ்சியே*
*தஞ்சம் நீ எனப்*
*போந்தனம் ! ஆ தரங்கிக்க வெற்பு எடுத்தாய்*
*தண் அனந்த சிங்காதன!*
*மா தரங்கம் உள்ளாய் ! அரங்கா !*
*முத்தி தந்தருளே.*

**பொருள் :**

தனங்களை உடைய மங்கையர் அழகிய மழலைச் சொல் பேசும் குழந்தைகள், நிலம், வீடும், செல்வம் ஆகியவற்றில் அன்பு வைக்கும் (விரும்பும்) வாழ்க்கையினை அஞ்சி நீயே சரண் என உன்னிடம் அடைக்கலம் புகுந்தேன் ! பசுக்கூட்டங்கள் (மழைக்கொடுமையில் இருந்து விலகி) தங்கி இருப்பதற்காகக் கோவர்த்தன மலையினை எடுத்தவனே ! "அனந்தன்" எனும் பெயர் கொண்ட பாம்பைக் குளுமை மிக்க அரியாசனமாய்க் கொண்டவனே ! பெரிய (பெருமை மிக்க) அலைகளை உடைய திருப்பாற்கடலில் இருப்பவனே ! திருவரங்கப் பெருமானே எனக்கு வீடுபேற்றை அளித்தருள்வாய்.

4. தந்தமலைக்கு முனின்ற பிரானெதிர்
தாக்கிவெம்போர்
தந்தமலைக்கு மைத்தானரங்கேசன்
தன்பூவினிடைத்
தந்தமலைக்குத் தலைவன் பொற்பாதம்
சரணென்றுய்யார்
தந்தமலைக்கும் வினையி னைவார் பலர்
தாரணிக்கே

*தந்த மலைக்கு முன் நின்ற பிரான், எதிர்தாக்கி*
*வெம்போர்*
*தந்த மலைக் குமைத்தான் அரங்கேசன்*
*தண் பூவின் இடைத்*
*தந்து அமலைக்குத் தலைவன், பொற்பாதம் சரண்*
*என்று உய்யார்*
*தம்தம் அலைக்கும் வினையின் நைவார் பலர்*
*தாரணிக்கே !*

**பொருள் :**

வலிய தந்தங்களை உடைய மலைபோன்ற யானை தன்னைக் காக்கும்படி கூவி அழைக்க அதன் முன் காட்சிதந்து காத்தவனும், (கௌரவர் அவையில் நிலவறையில் மறைந்து இருந்து) தன்னை எதிர்த்துக் கொடிய போர் செய்த மல்லர்களை மிதித்துத் துவைத்து அழித்தவனும் (மலைக் குமைத்தான் = மல்லைக் குமைத்தான்) குளுமை மிக்க தாமரை மலரில் இருக்கும் நூல்போன்ற இடையினை உடைய குற்றமற்ற திருமகளின் கணவனும் ஆன திருவரங்கப் பெருமானின் பொற்பாதங்களைச் சரணம் எனக் கொண்டு வாழாத பலர் இவ்வுலகிலே தங்கள் தங்கள் செய்த வினைகளின் விளைவினால் துன்புறுத்தப்பட்டு வருந்துவர்.

5. தாரணி தானவன் பாலிரந்தான் சங்கம்
வாய்வைத்தொன்னார்
தாரணிதானவம் செய்தா னரங்கன்
தமர்கள் பொருந்
தாரணிதான அமரா வதியும்
தருநிழலும்
தாரணிதான வயிரா வதமும்
தருகினுமே

*தாரணி தானவன் பால் இரந்தான், சங்கம்*
*வாய்வைத்து ஒன்னார்*
*தார் அணிதான் அவம் செய்தான், அரங்கன்*
*தமர்கள் பொருந்தார்,*
*அணிது ஆன அமராவதியும்*
*தரு நிழலும்*
*தார் அணி தான அயிராவதமும்*
*தருகினுமே.*

பொருள் :

அரக்கனான மகாபலியிடம் மூன்றடி நிலத்தை யாசித்தவனும், தன்னுடைய பாஞ்ச சன்னியம் எனும் சங்கை வாயில் வைத்து ஊதிப் பகைவர்களின் (கௌரவர்களின்) சேனை அணிவகுப்பைப் பாழ் செய்தவனும் ஆன திருவரங்கப் பெருமானை தமது உறவாகக் கொண்ட அடியவர்கள், பெருமை மிக்க வானவர் உலகையும் அங்குள்ள கற்பக மரங்களின் நிழலையும், மலர்மாலைகளை அணிந்துகொண்டு மதம் பெருக்கும் தெய்வ யானையான ஐராவதத்தையும் தருவதாக இருந்தாலும் அவற்றை ஏற்க மனம் விரும்பார்கள்.

6. தருக்காவலா வென்று புல்லரைப் பாடித்
தனவிலைமா
தருக்காவ லாய்மயி லேகுயிலேவென்று
தாமதராய்
தருக்காவலா நெறிக் கேதிரிவீர்கவி
சாற்றுமின்பத்
தருக்காவலா யுதன்பின்தோன் றரங்கர் பொற்
றாளிணைக்கே !

*"தருக்காவலா" என்று புல்லரைப் பாடி*
*தனவிலை*
*மாதருக்கு ஆவலாய் மயிலே ! குயிலே என்று*
*தாமதர் ஆய்*
*தருக்கா(ய்) அலாநெறிக்கே திரிவீர் ! கவி*
*சாற்றுமின்!*
*பத்தருக்கா(ய்) அலாயுதன் பின் தோன்று அரங்கர்*
*பொற்றாள் இணைக்கே !*

பொருள் :

"நினைத்ததைத் தரும் கற்பக மரத்தினை உடைய வானுலகின் தலைவனான இந்திரனே" என்று வள்ளன்மை இல்லாத அற்பர்களைப் புகழ்ந்து கவிபாடி பொருள் விலைப் பெண்டிரான வேசிகள் மீது ஆவல் கொண்டு அவர்களை மயிலே என்றும் குயிலே என்றும் ஒழுக்கம் இல்லாதவராய் ஆணவம் கொண்டு, தீய நெறியிலே திரியும் புலவர்களே! தனது பக்தர்களைக் காப்பதற்காகவே கலப்பையினை ஆயுதமாகக் கொண்ட பலராமனின் தம்பியாகப் பிறந்த திருவரங்கப் பெருமான் பொற்றாமரை மலர் போன்ற இரு பாதங்களின் சிறப்புகளைப் பற்றிக் கவி பாடுவீர் !

7. தாளத்தனத்தத்தைச் சொல்லி யரால்வரும்
தாழ் மலபா
தாளத்தனத்தத்தைத் தப்பநிற் பீர்புடை
தங்கியவே
தாளத்தனத்தத்தைத் தீர்த்தா னரங்கன்
சகடுதைத்த
தாளத்தனத்தத்தை யாயுதன் பாதம்
தலைக்கொண்மினே

*தாளத் தனத் தத்தைச் சொல்லியரால் வரும்*
*தாழ் மல*
*பாதாளத்து அனத்தத்தை தப்ப நிற்பீர் ! புடை*
*தங்கிய*
*வேதாளத்தன் அத் தத்தைத் தீர்த்தான்! அரங்கன்,*
*சகடு உதைத்த*
*தாள் அத்தன், அத்தத்து ஐ ஆயுதன் பாதம்*
*தலைக் கொண்மினே !*

**பொருள் :**

தாளத்தினை ஒத்திருக்கும் பெரிய தனங்களை உடையவரும் கிளிபோலக் கொஞ்சிப் பேசும் சொற்களை உடையவருமான பெண்களின் தொடர்பால் வரும் பிலம் போன்ற நரகவேதனையினை விட்டு விலகி உயிர்வாழ விரும்புவோரே ! பூத கணங்கள் புடைசூழ இருப்பவரான சிவபெருமானின் பிச்சை எடுக்கும் தொழிலை மாற்றியவனும், சகடு வடிவில் வந்த அசுரனைக் காலால் உதைத்த இறைவனும், தனது கையில் (அத்தத்து - ஹஸ்தம் என்றால் கை எனப் பொருள்) சங்கு, சக்கரம், வில், வாள், தண்டு எனும் ஐந்து ஆயுதங்களை உடையவனும் ஆன சுதர்ஸனம் (சக்கரம்), பாஞ்ச சன்னியம் (சங்கு), சாரங்கம் (வில்), நாந்தகம் (வாள்) கௌமோதகி (தண்டு) என்பன திருமாலின் ஐம்படைகள்) திருஅரங்கப் பெருமானின் பாதகமலங்களை உங்கள் தலைமேல் கொண்டு வணங்குவீர்!

8. தலையிலங்காபுரம் செற்றா னரங்கனென்
தாழ் சொல்புன்கு
தலையிலங்காதரம் செய்த பிரான்சரண்
அன்றிமற்றோர்
தலையிலங்காநின்ற கண்ணிலம் காண்கைக்கு
தாழுகைக்குத்
தலையிலங்காதிலம் கேட்கைக்கு வாயிலம்
சாற்றுகைக்கே

*தலை இலங்காபுரம் செற்றான் அரங்கன் என்*
*தாழ் சொல் புன்*
*குதலையில் அங்கு ஆதரம் செய்த பிரான் சரண்*
*அன்றி மற்று ஓர்*
*தலை, இலங்கா நின்ற கண் இலம் காண்கைக்கு*
*தாழுகைக்கு*
*தலை இலம், காது இலம் கேட்கைக்கு, வாய் இலம்*
*சாற்றுகைக்கு(ஏ)*

**பொருள் :**

மாநகரங்களுள் முதன்மையான இலங்கை மாநகரை அழித்தவனும் எனது தாழ்மையான அற்பமான துதிகளை குழந்தைகள் பேசும் மழலையில் அன்பு வைக்கும் பெற்றோர் போல விரும்பி நின்றவனான திருவரங்கப் பெருமானின் மலரடிகளை விட்டு வேறொரு தலைவனைக் காண்பதற்கு என் முகத்தில் (விளங்கும்படி இருக்கும்) கண்களை நான் பெறவில்லை. வணங்குவதற்குத் தலையைப் பெறவில்லை. வேறொரு தலைவன் சிறப்பைக் கேட்கக் காதுகளைப் பெறவில்லை. வேறொரு தலைவன் புகழைக் கூற நான் வாயையும் பெறவில்லை. (திருவரங்கப் பெருமானையன்றி வேறொருவனை என் கண்கள் காணாது, தலைவணங்காது. வேறொருவன் புகழை என்வாய் மொழியாது செவிகளும் கேட்காது)

9. கைக்குஞ்சரமன் றளித்தா யரங்கமண்
காக்கைக்குமாய்
கைக்குஞ்சரமச ரம்படைத்தாய் கடல்
நீறெழுத்து
கைக்குஞ்சரமக ரக்குழை யாயெனைக்
கைக்கொ ளுடல்
கைக்குஞ்சரம தசையிலஞ் சேலென்றன்
கண்முன் வந்தே !

*கைக் குஞ்சரம் அன்று அளித்தாய் ! அரங்க, மண்*
*காக்கைக்கும்*
*மாய்க்கைக்கும் சரம் அசரம் படைத்தாய் ! கடல் நீறு*
*எழுத்*
*துகைக்கும் சர! மகரக் குழையாய் ! எனைக்*
*கைக்கொள் உடல்*
*கைக்கும் சரம தசையில் அஞ்சேல் என்று என்*
*கண்முன் வந்தே !*

**பொருள் :**

துதிக்கையினை உடைய யானை மடுக்கரையில் அன்று ஓலமிட்டு அழைத்தபோது அதன் துயர் துடைத்து அருளியவனே! திருவரங்கப் பெருமானே ! இவ்வுலகினைக் காப்பதற்கும் பின் அழிப்பதற்குமாய் அசையும் உயிர்களையும் அசையாப் பொருள்களையும் படைத்து அருள் செய்தவனே ! கடல் நீர் வறண்டு துகள் எழும்படி வருத்திய அனலம்புகளை ஏவியவனே ! நான் எனது உடலை வெறுத்து எனது உயிர் பிரியும் அந்திம காலத்தில் என் முன்னர்க் காட்சி தந்து "அஞ்சாதே" என மொழிந்து என்னை நீ ஏற்று அருள்வாயாக!

10. வந்தனையேற்றனை யென்புன்சொல் கொண்டனை
வன்மனத்தே
வந்தனையேற்றனை யாவையு மாயினை
வான்தர உ
வந்தனையேற்றனை தானொத்த தாளில்
வைப்பாய் பலித்து
வந்தனையேற்றனை தீர்த்தா யரங்கத்து
மாதவனே !

*வந்தனை ஏற்றனை ; என்புன்சொல் கொண்டனை*
*வன் மனத்தே*
*வந்தனை; ஏற்று அனை யாவையும் ஆயினை ;*
*வான் தர*
*உவந்தனையேல் தனைத் தான் ஒத்த தாளில்*
*வைப்பாய் -- பலித்துவம்*
*தனை ஏற்றனை தீர்த்தாய் அரங்கத்து*
*மாதவனே !*

**பொருள் :**

என் வணக்கத்தை ஏற்றுக் கொண்டாய். எனது அற்பமான துதிப்பாடல்களையும் ஏற்றுக் கொண்டாய். எனது கல்போன்ற மனத்தினுள் வந்து அமர்ந்தாய். எனக்கு உற்ற தாய் போல இருந்து மற்றுமுள்ள உறவுகள் அனைத்தும் ஆகி இருந்தாய். எனக்கு வானில் உள்ள உனது பரமபதம் அளித்தற்கு விரும்பினாயானால், உன்னை நிகர்ப்பவர் வேறு யாரும் இன்மையால் உனக்கு நீயே ஒப்பாகும் உனது அடியிணையில் வைத்துக் கொள்வாய்.

காளை யூர்தியுடைய சிவபெருமானின் இரத்தல் தொழிலைத் தீர்த்த திருவரங்கத்தில் அருள் செய்கின்ற மாதவனே.

**11.** மாதங்கத்தானை யரங்கனை வஞ்சனி
லங்கையிலே
மாதங்கத்தானை இருதிங்கள் தாழ்த்துபின்
வாம்பரிதேர்
மாதங்கத்தானை வலத்தானை முன்வதைத்தானை
தன்பால்
மாதங்கத்தானை வைத்தானை வைத்தேனென்
மதியகத்தே

*மா தங்கத் தானை அரங்கனை; வஞ்சன்*
*இலங்கையிலே*
*மா தங்க, தான் ஐ இரு திங்கள் தாழ்த்து, பின்*
*வாம் பரி தேர்*
*மாதங்கம் தானை வலத்தானை முன் வதைத்தானை ;*
*தன் பால்*
*மாது அங்கத்தானை வைத்தானை வைத்தேன்*
*என் மதிஅகத்தே.*

**பொருள் :**

பெருமை மிக்க பொன்னாலான ஆடையினை உடுத்தியவனான திருவரங்க நாயகனும், வஞ்சகனான இராவணனுடைய இலங்கையில், திருமகளான சீதாதேவி சிறைப்பட்டு இருக்க, பத்து மாதங்கள் சென்ற பின்னர் குதிரை, தேர், யானை, காலாள் ஆகிய நான்குவகைப் படைகளையும், வர வலிவும் உடல் வலிவும் கொண்ட இராவணனை அழித்தவனும், உமையம்மையைத் தன் மேனியில் வைத்த சிவபெருமானைத் தனது வலப்பக்கம் வைத்தவனும் ஆன பெருமானை (அரங்கனை) என் மனத்தகத்தே இருத்தினேன். (தானை - ஆடை & சேனை)

12. மதிக்கவலைப்புண்ட வெண்டயிர் போல
மறுகுறுமென்
மதிக்கவலைப்புண் தணிகின் றிலேன், மண்ணும்
வானகமும்
மதிக்கவலைப்புனல் சூழரங்கா ! நின்
மனத்தருள்தா
மதிக்கவலைப்புன் பிறப்பினி மேலும்
வருங்கொலென்றே

*மதிக்க அலைப்புண்ட வெண் தயிர் போல*
*மறுகுறும் என்*
*மதிக் கவலைப்புண் தணிகின்றிலேன்!*
*மண்ணும் வானகமும்*
*மதிக்க அலைப்புனல் சூழ் அரங்கா, நின்*
*மனத்து அருள்*
*தாமதிக்க வ்லைப் புன் பிறப்பு இனிமேலும்*
*வரும் கொல் என்றே !*

பொருள் :

இப்பூவுலகத்தாரும் வானுலகத்தாரும் பணியும்படி, அலைகள் நிறைந்த காவிரி ஆற்றால் சூழப்பெற்ற திருவரங்கத்தில் அருள் செய்யும் பெருமானே ! உன் திருவருள் கருணையினை எனக்கு வழங்காமல் காலம் தாழ்த்தினால் இழிவு மிக்க பிறப்பு என்னும் வலை என்னைச் சூழ்ந்து கொள்ளுமோ என நினைத்து மத்தினால் கடையப்பட்ட வெண்மையான தயிர் போலச் சுழன்று தவிக்கும் என் மனக் கவலையினைத் தீர்க்க வழியின்றி உள்ளேன். ஆதலால் உன் அருளைத் தந்து என்னைக் கடைத்தேற்றுவாய்.

13. வருந்துவரைப்பட்ட மங்கையர் எண்மர்
மனங்களைக்க
வருந்துவரைப்பட்ட வாயரங் கேசனை
வஞ்சப்பகை
வருந்துவரைப்பட்ட வேழமட் டானை
மறந்துலகோர்
வருந்துவரைப் பட்ட யீப்போல் மடந்தையர்
மால்வலைக்கே !

*வரும் துவரைப் பட்ட மங்கையர் எண்மர்*
*மனங்களைக்*
*கவரும் துவர் ஐப் பட்ட வாய் அரங்கேசனை*
*வஞ்சப்*
*பகைவர் உந்து வரைப் பட்ட வேழம் அட்டானை,*
*மறந்து உலகோர்*
*வருந்துவர் ஐப் பட்ட ஈப்போல் மடந்தையர்*
*மால்வலைக்கே !*

**பொருள் :**

துவாரகையில் வந்து பொருந்திய பட்டத்து ராணிகளான ருக்மணி, சத்யபாமை, சாம்பவதி, சக்தியை, மித்ர விந்தை, சுசீலை, ரோகிணி என்னும் எட்டுப் பெண்களின் மனங்களையும் கவர்ந்த அழகு பொருந்திய (ஐ = அழகு) வாயினை உடைய திருவரங்கப் பெருமானும், பகைமையும் வஞ்சகமும் கொண்ட கம்சன் அனுப்பிய குவாலய பீடம் எனும் யானையினை அழித்தவனும் ஆன பெருமானிடத்துப் பக்தி செலுத்தாமல் அவனை மறந்து திரியும் உலக மக்கள் கோழையிடைச் சிக்கிய ஈயினைப் போல் பெண்களின் பால் கொள்ளும் காமமென்னும் வலையினில் வீழ்ந்து துயருறுவர்.

14. மாலைக் கல்லார மடவார்பு னாக்கையில்
வாஞ்சை வைத்து
மாலைக் கல்லாரம் புலிக்குனை யாநிற்பர்
மாய்விப்பதோர்
மாலைக் கல்லாரம் புயத்தாளில் வைக்கும்
மதிலரங்க
மாலைக் கல்லாரஞ் சலியா ரென்னேசில
மானிடரே !

*மாலைக் கல்லார மடவார் புன் ஆக்கையில்*
*வாஞ்சை வைத்து*
*மாலைக்கு அல் ஆர் அம்புலிக்கு நையா நிற்பர்*
*மாய்விப்பது ஓர்*
*மாலைக் கல்லார்; அம்புயத் தாளில் வைக்கும்*
*மதில் அரங்க*
*மாலைக் கல்லார் ; அஞ்சலியார் என்னேசில*
*மானிடரே.*

**பொருள் :**

சில மனிதர்கள், செங்கழுநீர் மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்த பெண்களின் இழிவுமிக்க உடலின்பால் விருப்பம் வைத்து மாலைப் பொழுதுக்கும் சிற்றின்ப ஆசையினை அதிகரிக்கச் செய்யும் இரவில் ஒளிவீசும் நிலவுக்கும் வருந்தி நிற்பர். இத்தகைய, தங்கள் உயிரையே மாய்க்கும் தன்மை கொண்ட மயக்கத்தைத் தங்கள் மனத்தினில் இருந்து கல்லி எறிய மாட்டார்கள். தனது பக்தர்களைத் தனது தாமரை போன்ற தாள்களில் வைப்பவனான மதில்கள் சூழ்ந்த திருவரங்கப் பெருமானின் சிறப்புக்களைக் கற்று அறிய மாட்டார்கள். அவனை வணங்கித் துதிக்க மாட்டார்கள் ! அத்தகையவர்கட்கு எவ்வளவு மதியீனம் உண்டு

(பிகு) "மாலைக் கல்லார மடவார் கண் ஆக்கையில் வாஞ்சைவைத்து" எனப் பாடம் கொண்டு "மாலைப் பொழுதில் மலர்ந்த கருங்குவளை மலர் போன்ற பெண்களின் கண்களிலும் அவர்தம் உடல்களிலும் விருப்பம் வைத்து" எனப் பொருள் கூறுவாரும் உண்டு.

15. மானிடராக லரிதரிதே மண்

டலத்துநெறி

மானிடராக மிலாதவ ராதல்

மலரயனார்

மானிடராக மத்தாலன் பராய

வரங்கத்துளெம்

மானிடராக மலரடிக் காட்படும்

வாழ் வரிதே !

*மானிடர் ஆகல் அரிது ; அரிதே*

*மண்டலத்து*

*நெறிமான் இடர் ஆகம் இலாதவர் ஆதல் ;*

*மலர் அயனார்,*

*மான் இடர், ஆகமத்தால் அன்பர் ஆய்*

*அரங்கத்துள்*

*எம்மான் இடராகமலர் அடிக்கு ஆட்படும்*

*வாழ்வு அரிதே.*

**பொருள் :**

இவ்வுலகத்தில் ஆறறிவுடைய மனிதர்களாகப் பிறப்பது அரிது. அப்படிப் பிறந்தாலும் ஒழுக்க நெறி உடையவராகவும், கூன் குருடு செவிடு ஊமை ஆகியவர் ஆகாமல் உடல் ஊனம் இல்லாதவராகவும் பிறப்பது அரிது. அப்படியே குறைபாடுகள் இல்லாதவராகப் பிறந்தாலும், தாமரை மலர் தந்த திசை முகனும், மானை இடப்பக்கத்துக் கையில் ஏந்திய சிவபெருமானும் ஆதிமறை நூலின்படி போற்றிய, திருவரங்கத்துள் இருக்கும் எங்களின் இறைவனின் சிவந்த மலரடிகளுக்குத் தொண்டு செய்யும் வாழ்க்கை அமையப் பெறுதல் அரிதே !

16. அரிதாமரைக்க ணந்தோ லுடுத்தாராய
னார்க் கரியான்
அரிதாமரைக்க ணம்மான்திருப் பாதம்
அடைமின்சன்மம்
அரிதாமரைக்க ணந்தங்கா துயிரவன்
ஊர் வினவில்
அரிதா மரைக்க ணமீர்த்தோ டும்பொன்னி
அரங்கமன்றே !

*அரி, தாம் அரைக்கண் அம் தோல் உடுத்தார்*
*அயனார்க்கு அரியான் ;*
*அரி; தாமரைக் கண் அம்மான்; திருப்பாதம்*
*அடைமின்; சன்மம்*
*அரிது ஆம் ; அரைக் கணம் தங்காது உயிர்;*
*அவன் ஊர் வினவில்*
*அரி, தாம் மரைக்கணம் ஈர்த்து ஓடு பொன்னி*
*அரங்கம் அன்றே !*

பொருள் :

இந்திரன் மற்றும் தம்முடைய இடையில் அழகுமிக்க புலித் தோலை உடுத்த சிவபெருமான் பிரமன் ஆகியோருக்கு அறிவதற்கு அரியவனும், அரக்கர்களை அழிப்பதனால் அரி எனப் பெயர் கொண்டவனும், தாமரை மலர் போன்ற கண்களை உடைய கடவுளுமான திருமாலின் மலர்ப் பாதங்களைச் சரணம் என அடையுங்கள். அப்படி அடைவதனால் பிறப்பு ஒழியும். எப்படியென்றால சரணமடைபவரின் உயிர் மோட்சத்தை அடையுமே அல்லாது உடலில் அரை நொடியும் தங்காது அப்பெருமானின் ஊர் எது எனக் கேட்டால் சிங்கங்களையும் தாவிப் பாயும் மான் கூட்டங்களையும் தனது நீரோட்டத்தில் இழுத்து வரும் காவிரியின் இடையே உள்ள திருவரங்கம் ஆகும்.

(அரி - எனும் சொல்லுக்கு இந்திரன் என்றும் பொருள் உண்டு)

(தாம் மரை - தாவிப் பாயும் மான்)

17. அரங்காதுவார்கணை கண்வள்ளை கோங்கின்
அரும்புமங்கை
அரங்காதுவார் முலை என்றைவர் வீழ்ந்தனர்
ஆடரவின்
அரங்காதுவார மிலாமணி யேயணி
ஆர்மதில்சூழ்
அரங்காதுவார கையாய் அடியேனுன்
அடைக்கலமே

*அரம் காது வார் கணைக்கண் ; வள்ளை கோங்கின்*
*அரும்பு, மங்கையர்*
*அம் காது வார்முலை என்று ஐவர் வீழ்ந்தனர்*
*ஆடு அரவு இன்*
*அரங்கா ! துவாரம் இலா மணியே ! அணி*
*ஆர் மதில் சூழ்*
*அரங்கா ! துவாரகையாய் ! அடியேன்*
*உன் அடைக்கலமே !*

**பொருள் :**

அரத்தால் ராவிக் கூர்மையாக்கப்பட்ட அம்பு போன்ற கண்கள் என்றும், அழகிய காதுகள் வள்ளைக் கொடியின் இலைகள் போன்றன என்றும் கோங்க மலர் அரும்பு போன்ற கச்சினை அணிந்த தனங்கள் என்றும் பெண்களைப் புகழ்ந்து ஐம்புலன்களிலும் மங்கையரது ஆசை மிகுதி கொண்டு சிற்றின்ப ஆசை என்னும் வலையில் வீழ்கின்றனர். படமெடுத்து ஆடுகின்ற காளிங்கன் என்னும் கொடிய நாகத்தின் உச்சியினைத் தனது ஆடல் மேடையாகக் கொண்டவனே ! உள்துளை படாத மாணிக்கம் போன்றவனே ! எழில் மிக்க மதில்கள் சூழ்ந்த திருவரங்கத்தில் அருள் செய்யும் பெருமானே ! துவாரகை எனும் நகரை உடையவனே ! எளியேன் உனக்கு அடைக்கலம்.

20. நந்தமரங்கனை மாகட லேழும்
நடுங்க வெய்த
நந்தமரங்கனைப் பற்று நெஞ்சே வினை
நையுமுன்கை
நந்தமரங்கனை யார்மயல் போம்வரம்
நற்கதி வா
நந்தமரங்கனை வர்க்குமெஞ் ஞான்றும்
நரகில்லையே !

*நந்த மரம் கனை மா கடல் ஏழும்*
*நடுங்க எய்தான்*
*நம்தம் அரங்கனைப் பற்று, நெஞ்சே! வினை*
*நையும் ; முன் கை*
*நந்து அமர் அங்கனையார் மயல் போம் ; வரும்*
*நற்கதி வானம் ;*
*தமர் அங்கு அனைவர்க்கும் எஞ்ஞான்றும்*
*நரகு இல்லையே !*

**பொருள் :**

எனது நெஞ்சே! ஏழு மராமரங்களும் துளைபட்டு அழியவும் ஆரவாரம் செய்யும் பெரிய கடல்கள் ஏழும் அஞ்சி நடுங்கும்படியாகவும் சரம் தொடுத்த நமது திருவரங்கப் பெருமானைச் சரணடைவாய் ! அப்படி அடைந்தால் முன்பு செய்த தீவினைகள் கருகிப் போகும். முன்னங் கைகளில் சங்காலான வளையல்களை அணிந்த பெண்கள்பால் உண்டாகும் மயக்கமும் அழியும் சிறந்த வீடுபேறு உண்டாகும். உனக்கு மட்டுமல்ல உன்னைச் சார்ந்த உறவினர் அனைவர்க்கும் எந்தக் காலத்திலும் நரகத்துயர் வாய்க்காது.

21. நரகந்தரம்புவி யிம்மூன் றிடத்தும்
நனி மருவு
நரகந்தரங் கித்துவெங்கா லர்க் கஞ்சுவர்
நாயக வா
நரகந்தரம்புட் பிடரே றங்கர்நல்
ஆய்க்குலத்தி
நரகந்தரங் கமுற்றா ரடியார்க்கு
நமனஞ்சுமே

*நரகு அந்தரம் புவி இம் மூன்று இடத்தும்*
*நனி மருவுநர்*
*அகம் தரங்கித்து வெம் காலற்கு அஞ்சுவர் ;*
*நாயக*
*வானர கந்தரம் புட் பிடர் ஏறு அரங்கர் ; நல்*
*ஆய்க்குலத்து*
*இனர் அகம் தரங்கம் உற்றார் அடியார்க்கு*
*நமன் அஞ்சுமே*

**பொருள் :**

நரகம், வானகம், வையகம் ஆகிய மூன்று இடங்களிலும் வாழும் அனைவரும் உள்ளம் கலங்கிக் கொடுமை மிக்க எமனுக்கு அஞ்சுவர் ஆனால் அந்த எமனே, தலைமை பூண்ட வானரமாகிய அனுமனது தோளிலும் (கழுத்திலும்) பறவைகட் கரசனான கருடனது பிடரியிலும் ஏறிவரும் திருவரங்கப் பெருமானும், சிறந்த யாதவர் குலத்தில் வந்தவரும் திருப்பாற்கடலில் உறைபவனும் ஆன பெருமானின் அடியார்களுக்கு அஞ்சுவான்.

22. அஞ்சக்கரத்தலைக் கங்கைய னேற்றலும்
அஞ்சிறைய
அஞ்சக்கரத்தலைக் குண்டிகையான் மண்டை
அங்கைவிட்டே
அஞ்சக் கரத்தலைச் செய்துபித் தேக
வருளரங்கன்
அஞ்சக்கரத்தலை வன்தாளலால் மற்
றரணிலமே.

*அஞ்சு அக்கரத் தலைக் கங்கையன் ஏற்றலும்*
*அம் சிறைய*
*அஞ்சம் கரத்தலைக் குண்டிகையான் மண்டை*
*அங்கை விட்டே*
*அஞ்சக் கரத்தலைச் செய்து பித்து ஏக*
*அருள் அரங்கன்*
*அம் சக்கரத் தலைவன், தாள் அலால் மற்று*
*அரண் இலமே !*

பொருள் :

"நம சிவாய" எனும் ஐந்து எழுத்து மந்திரத்தானும் தலையில் கங்கை நதியைத் தரித்தவனும் ஆன சிவன் தன்னிடம் வேண்டிக் கொண்ட அளவில், அழகிய சிறகுகளை உடைய அன்னத்தை வாகனமாய்க் கொண்டவனும் கையில் கமண்டலத்தைத் தாங்கியவனான பிரமனின் மண்டை ஓடு, அச்சமுற்று சிவனின் கைகளை விட்டு மறைந்தது. பின் அச் சிவன் கொண்ட மன மயக்கமும் நீங்கும் வண்ணம் அருள் செய்தவனான திருவரங்கனின் திருத்தாள்களை விட்டால் நமக்கு வேறுகாப்பு இல்லை.

23. இலங்கையிலாத ரன்னைங் கரன்மோடி
எரிசுரத்தோன்,
இலங்கையிலாத மலையான வீசன்
இரிய வெம்போர்
இலங்கையிலாத படிவாண னைச்செற்ற
என்னரங்கன்
இலங்கையிலாத வன்போகக் கண்டானென்
இதயத்தனே !

*இலங்கு அயில் ஆதரன், ஐங்கரன் மோடி,*
*எரி சுரத்தோன்*
*இலம் கையிலாத மலை ஆன ஈசன்*
*இரிய வெம்*
*போரில் அம் கை இலாதபடி வாணனைச் செற்ற*
*என் அரங்கன்,*
*இலங்கையில் ஆதவன் போகக் கண்டான்,*
*என் இதயத்தனே!*

பொருள் :

ஒளிவீசும் வேல்படையினை ஏற்ற முருகன், விநாயகன், துர்க்கை, அக்கினி, பாலைக் கடவுள், கைலாய மலையினைத் தான் வசிக்கும் இடமாய்க் கொண்ட சிவன் ஆகியோர் வாணாசுரனுடன் போரிட இயலாமல் பின் வாங்கிட, அந்த வாணாசுரனின் அழகிய ஆயிரம் கைகளையும் வெட்டி வீழ்த்தி அழித்த எம்பெருமானான திருவரங்கனும் இலங்கையில் சூரியன் நுழையும்படி செய்தவனும் ஆன பெருமான் என்றும் என் மனத்தகத்தே உள்ளான்.

(இராவணன் ஆண்ட காலத்தில் சூரிய சந்திரர்கள் இராவணனுக்கு அஞ்சி இலங்கை மாநகருக்குள் நுழையாமல் அந்நகரைச் சுற்றி வலமாகச் சென்றனர். இராவணன் மடிந்ததும் சூரியன் இலங்கை நகரினுள் தைரியமாய்ச் செல்லும்படி செய்தார் திருமால்)

24. அத்தனை வேதனை யீன்ற வரங்கனை
ஐம்படை சேர்
அத்தனை வேதனை வாய்வைத்த மாயனை
ஆரணங்கோர்
அத்தனை வேதனை தீர்த்தானைச் சேர்க்கில
ளாயிரஞ்சால்
அத்தனை வேதனை அப்புவள் சாந்தென்
றனலரைத்தே

*அத்தனை, வேதனை ஈன்ற அரங்கனை*
*ஐம்படை சேர்*
*அத்தனை வே தனை வாய் வைத்த மாயனை*
*ஆர் அணங்கு ஓர்*
*அத்தனை வேதனை தீர்த்தானைச் சேர்க்கிலள் ;*
*ஆயிரம் சால்*
*அத்தனை வேது அனை அப்புவள் சாந்து என்று*
*அனல் அரைத்தே!*

**பொருள் :**

உலக உயிர்கள் அனைத்தினுக்கும் கடவுள் ஆனவனை, நான்முகனைப் பெற்றவனை, ஐந்து ஆயுதங்கள் கொண்ட தலைவனை, மூங்கில் குழலை வாயில் வைத்து ஊதி இன்னிசை பரப்பி மாயம் செய்தவனை, கௌரவர் அவையில் அவமானம் நேர்ந்த போது பாஞ்சாலி தன் மனத்தே நினைத்த இறைவனை, அப் பாஞ்சாலியின் துன்பத்தைத் துடைத்தவனை என் அன்னை என்னோடு சேர்க்க மாட்டாள். ஆனால் (அரங்கனைச் சேராததால் எழும் என் காம வெம்மைக்கு) ஆயிரம் அண்டாக்களில் சந்தனம் என்ற பெயரில் நெருப்பையே அரைத்து கார மருந்தாக அப்புவாள் (அவள் அங்ஙனம் என் சுரத்தை மாற்றிக் குளிர்விப்பதற்காகப் பூசப்பட்ட சந்தனம், மாறாக என் மேனி வெம்மையை அதிகரிக்கச் செய்யும்)
(இது ஓர் அகத்துறைப் பாடல் ! திருவரங்க நாதன் பால் மையல் கொண்ட பெண்ணின் கூற்றாகப் பாடிய பாடல்)

25. அரைக்கலைவேலை உடுத்தமண் பற்பகல்
ஆண்டு பற்றல்
அரைக்கலைவேலை உடைவேந்தர் வாழ்வெண்ணல் ;
ஐவரையும்
அரைக்கலைவேலை அவர்க்கே, புரிவையென்
றாலும் நெஞ்சே !
அரைக்கலைவேலை அரங்கனுக் காட்பட
வாதரியே !

*அரைக்கு அலை வேலை உடுத்த மண் பல் பகல்*
*ஆண்டு*
*பற்றலரைக் கலை வேலை உடை வேந்தர், வாழ்வு எண்ணல் ;*
*ஐவரையும்*
*அரைக்கலை வேலை அவர்க்கே, புரிவை, என்றாலும்*
*நெஞ்சே !*
*அரைக் கலை வேலை அரங்கனுக்கு ஆட்பட*
*ஆதரியே !*

**பொருள் :**

என் மனமே ! தனது இடுப்புக்கு ஆடையாக அலைகள் செறிந்த கடலை உடுத்த நிலமகளை (பூமியை) பல நாள்கள் அரசாண்டு பகைவர்களை அழிக்கும் வேற்படையினை உடைய மன்னர்களது வாழ்க்கையை எண்ணி ஆசைப்படாதே. உன்னுடன் உறையும் ஐம்புலனாகிய, ஐவரையும் அடக்காமல் அப்புலன்களுக்கு ஆட்பட்டு தொண்டு செய்வாய். ஆயினும் ஒரு அரை நொடி கால அளவிலாவது திருவரங்கப் பெருமானுக்கு ஆட்பட்டுத் தொண்டு செய்ய விருப்பம் கொள்வாயாக !

26. ஆதவனந்தரம் தோன்றாமல் கல்மழை
ஆர்த்தெழுநாள்,
ஆதவனந்தர வெற்பெடுத்தான் அடி
யார் பிழைபார்
ஆதவனந்தரங் கத்தான ரங்கன்
அடியனென்றுள்
ஆதவனந்தரங் கண்டீர் வினைவந்
தடைவதுவே !

*ஆதவன் அந்தரம் தோன்றாமல் கல்மழை*
*ஆர்த்து எழு நாள்,*
*ஆ தவனம் தர, வெற்பு எடுத்தான் ;*
*அடியார் பிழை*
*பாராதவன் அம் தரங்கத்தான் ; அரங்கன்*
*அடியன் என்று*
*உள்ளாத அனந்தரம் கண்டீர் வினைவந்து*
*அடைவதுவே !*

**பொருள் :**

வானத்திலே சூரியனே தோன்றாதபடி ஏழு நாள்கள் தொடர்ந்து ஆலங்கட்டிகளோடு மழை பொழிய, பசுக் கூட்டங்களின் துயரம் நீங்கும்படி கோவர்த்தன மலையினை ஓர், குடைபோலப் பிடித்துக் கொண்டிருந்தவனும், தன்னை அண்டி வந்து பக்தி செய்யும் அடியவர்களின் தவறுகளைப் பொருட்படுத்தாது அருளுபவனும், அழகிய அலைகள் சூழ்ந்த திருப்பாற்கடலில் உறைபவனுமான திருவரங்கப் பெருமானை எவன் ஒருவன் மனமார நினைத்து வழிபடாமல் இருப்பானாகில், அதன் பின்பே அவனது ஜென்ம வினையும் செய்த வினைகளும் அவனைச் சூழ்ந்து துன்புறுத்தும். (திருவரங்கனை மனத்தால் வழிபட்டால் எந்த வினையும் நம்மை அண்டாது)

27. அடையப் பன்னாகம் கடிவா யமுதுக,
அங்கிகுளிர்
அடையப் பன்னாக மருப்பா யுதமிற
அன்றுகுன்றால்
அடையப் பன்னாக மிசை தாங்க பாலர்க்
கருள் செய்ததால்
அடையப் பன்னாகங் கரியா னரங்கனெட்
டக்கரமே !

*அடையப் பல்நாகம் கடிவாய் அமுதுஉக,*
*அங்கி குளிர்*
*அடைய, பல் நாக மருப்பு ஆயுதம் இற,*
*அன்று குன்றால்*
*அடை அப்பு அந் நாகமிசை தாங்க, பாலர்க்கு*
*அருள் செய்தது*
*ஆல்அடை அப்பன் ஆகம் கரியான் அரங்கன்*
*எட்டு அக்கரமே.*

**பொருள் :**

ஆல இலையில் துயின்ற கரிய திருமேனியான் திருவரங்கப் பெருமானது "ஓம் நமோ நாராயணா" என்ற எட்டு எழுத்து மந்திரம், இரண்யனின் மகனான பிரகலாதனுக்கு அருள் செய்து அவனது தந்தையின் கட்டளையால் அவன்மீது கடிக்க விடப்பட்ட பல கொடிய நாகங்கள் கடித்த போது அவை பொழிந்த விஷம் அமிர்தமாக மாறவும், அவனைத் தீயில் இட்டு கருகும்படி விட்டபோது அந்த நெருப்பு குளிர்ச்சி தரவும், யானைகளால் மிதிக்கும்படி விடப்பட்ட போது அந்த யானைகளின் தந்தங்களாகிய ஆயுதம் முறிந்து போகவும் மலைகளால் சூழப்பட்ட கடலில் எறிந்த போது அக்கடலுள் உள்ள குன்றுகள் மிதவைகள் ஆகவும்படியும் செய்தது.

28. அக்கவரம்பு னைந்தா ரயனாரிடை
ஆயிருநா
லக்கரவம்பு மலராள் கொழுந
னரங்கன் செங்கோ
லக்கரவம்பு யன்தான் மூலமென்ப
தறிவித்திடான்
அக்கரவம்புவி மேல்வேழ மேவெளி
யாக்கியதே

*அக்கு அரவம் புனைந்தார் அயனார், இடை*
*ஆய், இரு நால்*
*அக்கர வம்பு மலராள் கொழுநன்*
*அரங்கன் செங்கோல்*
*அக் கர அம்புயன் தான் மூலம் என்பது*
*அறிவித்திடான் ;*
*அக் கரவு அம் புவிமேல் வேழமே*
*வெளி ஆக்கியதே !*

**பொருள் :**

எலும்பையும் பாம்பையும் அணிந்த சிவனுக்கும் நான்முகனுக்கும் இடையில் (மும்மூர்த்திகளில் ஒருவனாய்) "ஓம் நமோ நாராயணா" எனும் மந்திரத்துக்கு உரிய இறைவனாக, மணம்கமழும் தாமரை மலரில் அமர்ந்துள்ள திருமகளின் கணவனும் சிவந்த தண்டுகளை உடைய தாமரை போன்ற கரங்களை உடையவனும் திருவரங்க பெருமானுமான தான் இருந்து தான்தான் சகல உயிர்கட்கும் உலகங்களுக்கும் மூலப் பொருள் என்பதை வெளிப்பட அறிவிக்காது மறைத்தான். ஆனால் அந்த ரகஸியத்தை இவ்வுலகில் முதலையால் பற்றப்பட்ட யானைதான் (திருமால்தான் ஆதிமூலம் என்பதை) வெளிப்படுத்தியது.

29. ஆக்குவித்தார் குழலா லரங்கேச
ரன்பால்விதுரன்
ஆக்குவித்தார வடிசி லுண்டார்கட
லாடையகல்
ஆக்குவித்தார றிவற்றேனைத் தம்மடி
யார்க் கடிமை
ஆக்குவித்தா ரடியேயடி யேன்துய்க்கும்
மாரமுதே !

*ஆக் குவித்தார் குழலால், அரங்கேசர்*
*அன்பால் விதுரன்*
*ஆக்கு வித்தார அடிசில்உண்டார் ; கடல்*
*ஆடை அகலாக்*
*கு வித்தார் ; அறிவு அற்றேனைத் தம்*
*அடியார்க்கு அடிமை*
*ஆக்குவித்தார் அடியே, அடியேன் துய்க்கும்*
*ஆரமுதே.*

**பொருள் :**

தமது குழலிசையின் இனிமையால் ஆநிரைகளைத் திரள வைத்துக் கூட்டியவர், விதுரனது மனையில் அவர் அன்போடு தயாரித்த அறுசுவை விருந்தினை சுவைத்து உண்டவர், கடல் ஆடையினை என்றும் அகலாமல் கொண்ட நிலவுலகு தோன்றுவதற்கு அரிய மூல விதை போன்றவர், சிறிதும் அறிவற்றவனான எளியேனைத் தன்து அடியார்கட்குத் தொண்டு செய்யும் அடியவனாக ஆக்கியவன் ஆகிய திருவரங்கப் பெருமானின் பாதார விந்தங்களே நான் ஆர்வத்துடன் உண்ணும் அமிர்தமாகும்.

30. ஆராதனஞ்செய்து கண்டனின் கீர்த்தி
அறைவன்திரு
வாராதனஞ்செய் வன்வேதா வென்றால்
அடியேன் புகழ்க்
காராதனஞ்செய்யப் போதாம் திருமகள்
ஆகப்பல்பூண்
ஆராதனஞ்செயன் பாகா வரங்கத்
தமர்ந்தவனே !

*ஆராத நஞ்சு எய்து கண்டன் நின் கீர்த்தி*
*அறைவன்; திரு*
*ஆராதனம் செய்வன் வேதா என்றால்*
*அடியேன் புகழ் கைக்கு*
*ஆர் ? ஆதனம் செய்யப் போதுஆம் திருமகள்*
*ஆக ! பல் பூண்*
*ஆரா ! தனஞ்செயன் பாகா ! அரங்கத்து*
*அமர்ந்தவனே !*

**பொருள் :**

யாரும் உண்ணாத விஷத்தினை அருந்திய கண்டனான சிவபெருமான் உன் பெருமைக்குரிய புகழை விரித்துரைப்பான் ! வேதாவான பிரமன் உனக்கு வழிபாடு செய்வான். அத்தகைய சிறப்பினைப் பெற்ற உன் பெருமைகளை எடுத்து உரைப்பதற்கு அடியவனான என்னால் இயலுமோ? சிவந்த தாமரை மலரில் உறையும் திருமகளை மார்பில் தாங்கி உள்ளவனே, பலவகைப்பட்ட மணி ஆரங்களை அணிந்தவனே, அருச்சுனன் தேரின் சாரதி ஆனவனே ! திருவரங்கத்தில் உள்ள பெருமானே !

31. அமரவரம்பை யினல்லார் பலரந்திக்
காப் பெடுப்ப,
அமரவரம்பை யில்வேல்வேந்தர் சூழமண்
ணாண்டிருந்தோர்
அமர வரம்பை யில்கான்போ யிறந்தனர்
ஆதலில் வீ
டமரவரம்பையில் மஞ்சா ரரங்கருக்
காட்படுமே!

*அமர அரம்பையின் நல்லார் பலர் அந்திக்*
*காப்பு எடுக்க,*
*அமர அரம் பையில் வேல் வேந்தர் சூழ, மண்*
*ஆண்டிருந்தோர்*
*அமர வரம்பை இல் கான்போய் இறந்தனர்*
*ஆதலில், வீடு*
*அமர அரம்பையில் மஞ்சு ஆர் அரங்கருக்கு*
*ஆட்படுமே !*

**பொருள் :**

விண்ணுலகத்து ரம்பையைவிட எழில் மிகுந்த மங்கையர்கள் பலர் மாலைப் பொழுதுகளில் கண்ணேறு கழித்து காப்புக் கயிறு கட்ட, போரில் பயன்படுவதற்காக அரத்தால் ராவி கூர்மையாக்கப்பட்ட வேல்களை உடைய மன்னர்கள் புடை சூழ இவ்வுலகை ஆண்டுகொண்டு இருந்தவர்கள் அனைவரும் பின்னர் எல்லையே இல்லாத கானகம் அடைந்து மாய்ந்தார்கள் (ஆதலால் உலக வாழ்வு நிலையற்றது) என்பதால் நீங்கள் வீடுபேறு பெறவேண்டுமானால் மேகங்களைத் தொடும் அளவு வாழை மரங்கள் உயர்ந்த வளர்ந்துள்ள திருவரங்கப் பெருமானுக்கு ஆட்பட்ட அடியவராகுங்கள்.

32. ஆளாகவந்த அடியேற் கருள்பரி
யானைதிண்டேர்
ஆளாகவந்தனில் செற்றிலங் கேசனை
அட்ட வல்வில்
ஆளாகவந்தன் புயம்து ணித்தா
யரங்காமுளரி
ஆளாகவந்தமில் லுன்னடி யார்க்கன்பன்
ஆவதற்கே.

*ஆளாக வந்த அடியேற்கு அருள் ! பரி யானை*
*திண் தேர்,*
*ஆள் ஆகவம் தனில் செற்று இலங்கேசனை*
*அட்ட வல் வில்லாளா !*
*கவந்தன் புயம் துணித்தாய் ! அரங்கா*
*முளரியாள்*
*ஆக ! அந்தம் இல் உன் அடியார்க்கு*
*அன்பன் ஆவதற்கே !*

பொருள் :

குதிரை, யானை, தேர், காலாள் எனும் நால்வகைப்பட்ட படைகளுடன் போருக்கு வந்த இலங்கேஸ்வரனை அவனது படைகளுடன் அழித்த வலிமை பொருந்திய வில் ஏந்தியவனே ! கபந்தன் எனும் அரக்கனின் தோள்களை வெட்டி வீழ்த்தியவனே ! திருவரங்கப் பெருமானே ! தாமரை மலராள் ஆன திருமகள் உறையும் மார்பனே ! முடிவே இல்லாத உனது அடியவர்களின் அடியவனாகும்படி உன் திருவடிகளே சரணமென வந்த எனக்கு அருள் செய்வாயாக !

33. ஆவாகனத்தர் அடியார்மனத் துள்புள்
ளானவொப்பில்
ஆவாகனத்த ரரங்கர்பொற் றாளுக்
கடிமைப்படார்
ஆவாகனத்த வழுக்குடல் பேணி
அறிவழிந்தவ்
ஆவாகனத்த ரிருந்தெ னிராமலெ
னம்புவிக்கே

*ஆவாகனத்தர் அடியார் மனத்துள் புள்*
*ஆன ஒப்பு இல்லா*
*வாகனத்தர்; அரங்கர்; பொற்றாளுக்கு*
*அடிமைப்படார்*
*ஆ ஆ, கனத்த அழுக்கு உடல் பேணி*
*அறிவு அழிந்து அவா*
*ஆகு அனத்தர் இருந்து என் இராமல் என்*
*அம்புவிக்கே !*

**பொருள் :**

மந்திர முறையால் அழைக்கும் (ஆவாகனம்) அடியார்களின் மனத்தகத்தில் வாசம் செய்பவனும் பறவைகட்கு அரசனான கருடன் எனும் ஒப்புவமை இல்லாத வாகனத்தை உடையவனும் திருவரங்கப் பெருமானும் ஆன ரெங்கநாதன் பொன்னடிகளுக்கு ஆட்படாமல், ஊன் பொதிந்து பாரமான தமது தூய்மை யில்லாத உடம்பைப் பேணி, ஆசை மிகுதலால், துன்பம் கொள்ளும் பயன் இல்லாத மானிடர் இவ்வுலகில் இருந்தாலும், இராமல் செத்தொழிந்தாலும் என்ன பயன் ?

34. அம்புவிலங்கை நகர்பாழ்படச் சங்கு
மாழியும் விட் (டு)
அம்புவிலங்கைக் கொண்டா யரங்கா ! வன்
றிடங்கர் பற்றும்
அம்புவிலங்கை யளித்தா யினியென்னை
ஆசையென்றிய்
அம்புவிலங்கை யிட்டேசம் சிறையி
லடைத்திலே !

*அம் புவி லங்கை நகர் பாழ்படச் சங்கும்*
*ஆழியும் விட்டு*
*அம்பு வில் அங்கைக் கொண்டாய் ! அரங்கா !*
*அன்று இடங்கர் பற்றும்*
*அம்பு விலங்கை அளித்தாய் ! இனி என்னை*
*ஆசை என்று*
*இயம்பு விலங்கை இட்டே சம் சிறையில்*
*அடைத்திடலே !*

பொருள் :

அழகு மிகுந்த இலங்கை மாநகரம் அழிவு எய்துதற்காகச் சங்கையும் சக்கரத்தையும் அகற்றிவிட்டு உன்னுடைய அழகுத் திருக் கரங்களில் அம்பையும் வில்லையும் ஏந்தியவனான திருவரங்கப் பெருமானே ! அன்றொரு நாள் மடுக்கரையில் முதலையின் வாயில் சிக்கிய யானைக்கு அபயம் அளித்தவனே ! இனிமேல் என்னை அற்பமான ஆசை எனச் சொல்லப்படும் விலங்கைப் பூட்டி கலக்கம் தரும் பிறப்பு எனும் சிறைக்குள் அடைத்து விடாதே ஐயனே !

35. இடவமலைக்கும் புயங்க மலைக்கு
மிலங்குமகல்
இடவமலைக்கும் இருங்க மலைக்கு
மிறைவ சங்க
இடவமலைக்கும் புனலரங்கா வெய்த்தமார்க்
கண்டன் கண்டு
இடவமலைக்கு முலகழியா துள்
ளிருந்த தென்னே !

*இடவ மலைக்கும் புயங்க மலைக்கும்*
*இலங்கும் அகலிட*
*அமலைக்கும் இருங் கமலைக்கும்*
*இறைவ !*
*சங்க இடவ ! மலைக்கும் புனல் அரங்கா !*
*எய்த்த மார்க்கண்டன்*
*கண்டிட அம் அலைக்கும் உலகு அழியாது உள்*
*இருந்தது என்னே !*

பொருள் :

ரிஷப மலை எனப்படும் திருமாலிரும் சோலை மலைக்கும் (அழகர் கோவில்) நாகமலை எனப்படும் திருவேங்கட மலைக்கும் அகன்ற இடப்பரப்பினைக் கொண்ட மண்ணுலகாகிய நிலமகளுக்கும், பெருமை மிக்க தாமரை மலரில் உறையும் திருமகளுக்கும் அதிபனே ! பாஞ்ச சன்னியம் என்ற சங்கை இடக்கையில் ஏந்தியவனே ! கரைகளில் போர் புரிவது போல் மோதித் தாக்கும் காவிரியை உடைய திருவரங்கப் பெருமானே. ஊழிக் காலத்தில் உனது திருவயிற்றுக்குள் இருந்த மார்க்கண்டேயன் காணும்படி ஊழியால் அழிக்கப்பட்டு உலகங்கள் அனைத்தும், அழியாமல் இருந்த விந்தை எவ்வாறு ஏற்பட்டது (பி.கு) பெருமாள் ஊழிக்காலத்தே உலகனைத்தையும் தனது வயிற்றுனுள் அடக்கியபோது அவ்வுலகங்களைத் தமது வயிற்றுக்குள்ளேயே மார்க்கண்டேயர் காணுமாறு அருளினார்)

36. இருந்தயிலங்க வெளிறுபடா தென்செய்
தாலும் நிம்பத் (து)
இருந்தயிலந் தித்தியா தவைபோல்புல்லர்
யாவும்கற்றாய்ந் (து)
இருந்தயிலம் பன்னகண்ணார்க் கல்லால் வெண்ணெய்
இல்லிலொளித் (து)
இருந்தயிலங்கை அரங்கர்க்கன் பாகி
இருக்கிலரே !

*இருந்தை இலங்க வெளிறு படாது என் செய்தாலும்*
*நிம்பத்து*
*இருந் தைலம் தித்தியாது ! அவைபோல் புல்லர்*
*யாவும் கற்று ஆய்ந்து*
*இருந்து ஐயில் அம்பு அன்ன கண்ணார்க்கு*
*அல்லால், வெண்ணெய் இல்லில் ஒளித்து*
*இருந்து அயில் அம்கை அரங்கர்க்கு அன்பு*
*ஆகி இருக்கிலரே.*

பொருள் :

ஒரு நாளும் கரியானது தன் கருமை நிறத்தினின்று மாறுபட்டு வெண்மை துலங்கும்படி இருக்காது. எவ்வளவு முயற்சிகள் செய்தாலும் வேப்ப எண்ணை இனிப்பைத் தராது. அது போல் கீழ்மை மனம் படைத்த கயவர்கள் எவ்வளவு கல்வி கேள்விகளை உணர்ந்து நூல்கள் பலவற்றை ஆராய்ந்து அறிவு பெற்றிருந்தாலும், வேல் போன்ற கூர்மை மிக்க கண்களை உடைய விலை மகளிர்கள் நேசத்தையே விரும்புவார்கள் அன்றி, ஆய்ச்சியர் மனைகளில் ஒளிந்து இருந்து வெண்ணெய் உண்ட திருவரங்கப் பெருமானுக்கு அன்பர்களாய் ஆக மாட்டார்கள்.

37. இருக்குமந்தத் தில்லறியா வரங்கன்மண்
ணேழுக்குந்தய்
இருக்குமந்தத்திரு வாய்மலர்ந்தா னெட்டெழுத்தைக்
குறியா
திருக்குமந்தப் புத்தியீர்த்துநல் வீடெய்த
லாகுங்கைபோய்
இருக்குமந்தச் செவிட்டுமன்முன் னீர்கடந்
தேறுமன்றே

*இருக்கும் அந்தத்தில் அறியா அரங்கன் மண்*
*ஏழுக்கும்*
*தயிருக்கும் அந்தத் திருவாய் மலர்ந்தான்*
*எட்டு எழுத்தைக் குறியாது*
*இருக்கும் மந்தப்புத்தி ஈர்த்து நல் வீடு எய்தல்*
*ஆகும், கை போய்*
*இருக்கும் அந்தச் செவிட்டு ஊமன் முந்நீர்*
*கடந்து ஏறும் அன்றே.*

**பொருள் :**

ரிக் வேதமும் அதன் முடிவாகிய வேதசார நூல்களும் உணர்வதற்கு அரியவனான திருவரங்கப் பெருமானும், இவ்வுலகமனைத்தையும், தயிரையும் உண்பதற்காகத் தனது அழகிய வாயைத் திறந்தவனும் ஆன பெருமானின் "ஓம் நமோ நாராயணா" என்னும் எட்டு எழுத்து மந்திரத்தை மனத்தில் நினைத்து வழிபாடு செய்யாத உங்களது அறிவற்ற தன்மை நீங்கிச் சிறந்த வீடுபேறு கிடைக்கக் கூடும். எப்போது என்றால் கைகளை இழந்து முடவனான செவிட்டு ஊமையன் அகண்ட கடலைக் கடந்து கரையேறும் நாளில் தான் (திருவரங்கனது திருவடிகளை எண்ணித் துதிக்காத, அறிவற்றவர்கள் வீடுபேறு அடைய முடியாது)

38. ஏறும்கரியும் பரியும்செற் றான்பர
னென்றுமன்று
வேறும்கரி மறையாதலினா லையம்
யாதுமக்கீ
டேறும்கரிய வரங்கர்க் கன்பாய்வினை
யென்னுமிடி
யேறும்கரியு மினிமேல் பிறவி
இடரில்லையே !

*ஏறும், கரியும், பரியும் செற்றான் பரன்*
*என்று மன்றுள்*
*ஏறும், கரி மறை ; ஆதலினால் ஐயம் யாது*
*உமக்கு ?*
*ஈடேறும் கரிய அரங்கர்க்கு அன்பாய் ; வினை*
*என்னும் இடி*
*ஏறும் கரியும், இனிமேல் பிறவி*
*இடர் இல்லையே !*

**பொருள் :**

வலிமை மிக்க எருதையும், யானையையும் குதிரையையும் வென்றவனான திருமால்தான் முழுமுதல் கடவுள் எனச் சொல்லிக்கொண்டே சான்றோர்களும் அறிஞர்களும் மிக்க அவையில் ஏறுங்கள். வேதங்களே உங்களின் கூற்றக்கு சாட்சியாகும். ஆதலால் அக்கூற்றில் உங்களுக்குச் சிறிதும் சந்தேகம் கொள்ளாது, கறுத்த திருமேனியனான திருவரங்கப் பெருமானின் அடியவராகி வாழ்வில் உய்யுங்கள், அங்ஙனம் ஆவீர்களாகில் உங்களுக்கு ஏற்படும் தீய வினைப் பயன்களாகிய இடியும் கரிந்து அழியும் உமக்குப் பிறப்புத் துன்பம் என்பதே இனிமேல் இல்லாது ஒழியும்.

39. இடராகவந்தெனைப் புன்சிறு தெய்வங்கள்
என்செயு மான்
இடராகவன்பிணி மாநாக மென்செயும்
யான்வெருவி,
இடராகவன்னி புனலிடி கோள் மற்று
மென் செயும் வில்
இடராகவன் னரங்கன் திருத்தாளென்
இதயத்ததே !

*இடராக வந்து எனைப் புன் சிறு தெய்வங்கள்*
*என் செயும் ?*
*மானிடர் ஆக வன்பிணி மா நாகம் என் செயும் ?*
*யான் வெருவியிட*
*ராகவன்னி, புனல், இடி, கோள் மற்றும்*
*என் செயும் ?*
*வில் இட ராகவன், அரங்கன் திருத்தாள் என்*
*இதயத்ததே !*

**பொருள் :**

கோதண்டம் எனும் வில்லை இடக் கரத்தில் கொண்ட ரகுகுல திலகம், திருவரங்கப் பெருமானின் பொற்றாமரை மலரடிகள் என் மனத்தகத்தே பதிந்து நிலை நிற்பதால், துஷ்ட தேவதைகளான சிறு தெய்வங்கள் துன்பம் தருவதற்காக என்னை அணுகி என்ன செய்யும் ? மண்ணுலக மானிடப் பிறப்புக்கு உரிய கொடிய நோய்கள் பெரிய நச்சரவங்கள் என்ன செய்யும் ? சிவந்த அக்னியும், நீர்ப்பெருக்கும், இடி மின்னல்களும் மற்றுமுள்ள கோள்களும் என்ன செய்யும் ?

40. அத்திரங்காய மெனவுணரே னென
தாசையுன்கை
அத்திரங்கா யத்தியின்வெரி தால் நரை
யாகிப் பல் வீழ்
அத்திரங்கா யந்திரம்போல் வொறியைந்
தழியுமக்கால்
அத்திரங்கா யரங்கா ! வடி யேனுன்
அடைக்கலமே.

*அத்திரம் காயம் என உணரேன் ; எனது ஆசை
உன் கை
அத்திரம் காய் அத்தியின் வெரிதால் ; நரை
ஆகி, பல்வீழ்
அ(த்) தினங்கா யந்திரம்போல் வொறி ஐந்து
அழியும் அக்காலத்து
இரங்காய் அரங்கா ! அடியேன் உன்
அடைக்கலமே !*

பொருள் :

எனது உடல் நிலைத்து இருக்காது என நான் உணர மாட்டேன் (ஸ்திரம் என்பது நிலையானது அதன் எதிர்ப்பதம் அஸ்திரம்-நிலையற்றது) என் மனத்தே எழும் ஆசைகளின் அளவோ, உனது கை அம்பினால் வறண்ட கடலினும் பெரியது. நரை எய்தி முதுமை அடைந்து பற்கள் உதிர்ந்து வீழ, தோல் சுருங்கி, யந்திரம் போல இயங்கி வந்த ஐம்புலன்களும் அழிகின்ற எனது அந்திம காலத்தில் என் மீது இரக்கம் காட்டுவாயாக திருவரங்கப் பெருமானே. நான் இப்போதே உன்னிடம் அடைக்கலம் புகுந்தேன்.

41. கலக் கூழைக்கை க்குங்கருத் துடையீரரங்
கத்துள்ளிலைக்
கலக் கூழைக்கைக் குங்கறியிட்டுத்துய்த்திரும்
காது படைக்
கலக் கூழைக்கைக் குள்வருவா ணனைக்கண்
ணுதலும் விட்ட
கலக் கூழைக் கைக் குப்பைகண் டானை வீதியில்
கண்டுவந்தே !

*கலக்கு ஊழைக் கைக்கும் கருத்து உடையீர்*
*அரங்கத்துள் இலைக்கலக்*
*கூழைக் கைக்கும் கறிஇட்டுத் துய்த்திரும் ;*
*காது படைக்கலக்*
*கூழைக் கைக்குள் வரு வாணனை*
*கண்ணுதலும் விட்டு அகலக்*
*கூழைக் கைக்குப்பை கண்டானை*
*வீதியில் கண்டு உவந்தே !*

**பொருள் :**

கொடிய துன்பங்களைத் தந்து உள்ளத்தையும் உடலையும் வருத்தும் ஊழ்வினையினை வெறுக்கும் எண்ணம் உடைய மாந்தர்களே ! படைக்கலன்களோடு கூடிய படை அணிவகுப்போடு போர் செய்ய வந்த பாணாசுரனை, நெற்றிக் கண்ணை உடைய சிவன் போரிட இயலாமல் அகல, அவ்வாணனது ஆயிரம் கரங்களையும் வெட்டி வீழ்த்திய திருவரங்கப் பெருமானை, திருவரங்கத்தில் பவனி வரும்போது பார்த்து மகிழ்வடைந்து காய்கறிகளோடு வெறும் கூழை (மட்டும் புகிக்கும் நிலை வந்தாலும்) உண்டு வாழுங்கள்.

42. கண்டகனாவின் பொருள்போல யாவும்பொய்
காலனெனும்
கண்டகனாவி கவர்வதுவே மெய்
கதிநல்கென
கண்டகனாவிப் பொழுதேசெல் கென்றருள்
காரரங்கன்,
கண்டகனாவின் புறக்கண்டு வாழ்த்திக்
கடிதுய்ம்மினே !

*கண்ட கனாவின் பொருள் போல யாவும் பொய் ;*
*காலன் எனும்*
*கண்டகன் ஆவி கவர்வதுவே மெய் ;*
*கதி நல்கு என*
*கண்டகனா ! இப்பொழுதே செல்க என்று அருள்*
*கார் அரங்கன்,*
*கண் தக நா இன்புற கண்டு வாழ்த்தி*
*கடிது உய்ம்மினே !*

**பொருள் :**

இவ்வுலக இன்பங்கள் யாவும் கனவில் கண்ட பொருள் போலப் பொய்மை உடையதாகும். காலன், கண்டகன் என அழைக்கப்படும் யமன் நமது உயிர்களைக் கவரும் செயல் மட்டுமே உண்மையாகும் ! எனக்கு நற்கதியாகிய வீடுபேற்றத் தந்தருள வேண்டும் எனக் கண்டாகன்னன் பணிந்து வேண்ட, "கண்டாகன்னா நீ இப்பொழுதே பரம பதமாகிய வைகுந்தத்துக்குச் செல்வாய்" என அருள் புரிந்த கரிய திருமேனித் திருவரங்கப் பெருமாளை உங்களது கண்கள் தகுதி பெறும்படி கண்டு, நாக்கு இனிமை அடையுமாறு வாழ்த்திப் போற்றி விரைவில் நலம் பெறுவீராக !

**43.** கடிக்கும்பணி நஞ்சமுதாகும் தீங்குநன்
காகும்பராக்
கடிக்கும்பணி யலர்தாழ்வர்கல் லாமையும்
கற்றமையாம்
கடிக்குபணி யறமெல்லா மரங்கர்பைங்
கன்னித் துழாய்
கடிக்கும்பணி யொளிக்குநற் பாதம்
கருதினர்க்கே.

*கடிக்கும் பணி நஞ்சு அமுதாகும், தீங்கு நன்கு*
*ஆகும்; பராக் (கு)*
*அடிக்கும் பணியலர் தாழ்வார் ; கல்லாமையும்*
*கற்றமை ஆம் ;*
*கடிக்கும் பணி அறம் எல்லாம் அரங்கர்*
*பைங்கன்னித் துழாய்*
*கடிக்கும் பணி ஒளிக்கும் நற் பாதம்*
*கருதினர்க்கே !*

**பொருள் :**

திருவரங்கப் பெருமானின் பசுமை நிறமுடைய இளந் தளிர்த்துளசியின் மணம் வீசும், அணிகலன்களின் ஒளிதுலங்கும் மலரடிகளை மனத்தினால் நினைந்து துதிப்பவர்களுக்குக் கடிக்கின்ற பாம்பின் நஞ்சும் அமிர்தமாய் மாறும். அசட்டை செய்து அவமரியாதை செய்யும் பகைவர்களும் கீழ்ப்படிந்து வணங்குவர். கற்றுத் தெளியாத பொருள்களும் கற்று அறிந்தது போல் தெளிவு பெறும். நன்னெறிகளெல்லாம் உமக்கு ஏவல் செய்வனவாகி நலம் பயக்கும்.

44. தினகரனார் கலிதீகாற் றொடுங்கும்
செயலும் விண்மீ
தினகரனார், கொண்டலேழ்செறுக் காமையும்
சென்றெதிர் மோ
தினகரனா ருயிர்செற்றா ரரங்கர்
திகிரி சங்கேந்
தினகரனார் நம்பெருமா ளமைத்த
திருக்கைகண்டே !

*தினகரன் ஆர்கலி, தீ, காற்று ஒடுங்கும்*
*செயலும் விண்*
*மீதின் நகரனார் கொண்டல் ஏழ் செருக்காமையும்*
*சென்று எதிர்*
*மோதின கரன் ஆர் உயிர் செற்றார்*
*அரங்கர் திகிரி சங்கு*
*ஏந்தின கரனார் நம் பெருமாள், அமைத்த*
*திருக்கை கண்டே*

பொருள் :

எதிர்த்துப் போரிட்ட கரன் எனும் அரக்கனது உயிரை அழித்தவரும், சங்கு சக்கரம் ஆகியனவற்றை ஏந்தி இருப்பவரும், "நம் பெருமாள்" என அழைக்கப்படுவருமான திருவரங்கப் பெருமான் தமது திருக்கரத்தால் (ஹஸ்த முத்திரை) "நில்" எனக் காட்டியதால்தான், பகலவனும், ஆரவாரம் செய்யும் கடலும், நெருப்பும், காற்றும் தத்தமது செயல்களில் வரம்பு கடவாமல் இருக்கும், விண்ணக நகரான அமராவதியின் தலைவன் இந்திரனின் ஆணையால், செயல்படும் ஏழு மேகங்களும் செருக்கு அடையாமல் அளவு கடந்து மழை பொழியா.

45. திருக்காவிரிக்கும் யமுனைக்கும் கங்கைக்கும்
தெள்ளமுதாம்
திருக்காவிரிக்கும் கடற்கும் பிரான்
தென்னரங்கமென்னத்
திருக்காவிரிக்கு மொழியார்க்குத்
தீமெழு காவிரன்புய்த்
திருக்காவிரிக்கு மதுயெவ்வா றவனுங்கள்
சென்மத்தையே

*திருக் கா விரிக்கும் யமுனைக்கும் கங்கைக்கும்*
*தெள் அமுது ஆம்*
*திருக் காவிரிக்கும் கடற்கும் பிரான்*
*தென் அரங்கம் என்னத்*
*திருக்கு ஆவிர் இக்கு மொழியார்க்குத்*
*தீ மெழுகு ஆவிர் அன்பு*
*உய்த்திருக்கா இரிக்குமது எவ்வாறு*
*அவன் உங்கள் சென்மத்தையே.*

**பொருள் :**

அழகிய பூஞ்சோலைகளை வளர்த்து வரும் யமுனை நதிக்கும் கங்கை நதிக்கும் தெளிந்த அமுதம் போன்ற சிறப்பு வாய்ந்த காவிரிக்கும் திருப்பாற்கடலுக்கும் இறைவனான திருவரங்கப் பெருமானின் திருவரங்கம் என்று நாவினால் ஒருமுறை கூறவும் மனங் கொள்ளாமல், கரும்பின் சாறுபோல் இனிய மொழி பேசும் பெண்களை நினைத்து அனலில்பட்ட மெழுகுபோல் உருகுவீர்கள். அரங்கனிடம் பக்தி செலுத்தாமல் இருக்கும் உங்களது பிறவித் துன்பத்தை எம் பெருமான் எவ்வாறு ஒழிப்பார் ?

46. சென்மந்தரங்கம் கருமஞ்சுழி பிணி
சேலினங்கு
சென்மந்தரங்க திர்பொன்கோள் கள்மாரி
திண்சுஹற்றசனி
சென்மந்தரங்க வற்றுள்விழு வோர்கரை
சேர்க்கும்வங்கம்
சென்மந்தரங்க வின்தோளா ரரங்கர்
திருப்பாதமே !

*சென்மம் தரங்கம் ; கருமம் சுழி ; பிணி*
*சேல்இனம் ;*
*குசென், மந்தர், அம் கதிர், பொன் கோள்கள்*
*மாரி திண்சுஹற்று, அசனி*
*செல், மந்தர் அங்கு அவற்றுள் விழுவோர்*
*கரை சேர்க்கும் வங்கம்*
*செல் மந்தரக் கவின் தோளார் அரங்கர்*
*திருப் பதமே.*

பொருள் :

மாந்தர்களுக்கு உரிய பிறப்புக்கள் ஒரு பெரிய அலை செறிந்த கடல் போன்றது. அம் மாந்தர்களது ஊழ்வினைப் பயன்கள் அந்தக் கடலினுள் உள்ள நீர்ச் சுழிகள் போன்றவை. அவர்கட்கு ஏற்படும் நோய்கள் உடலைக் கடிக்கும் மீன் இனங்கள் போன்றவை. செவ்வாய் கிரகமும், சனியும், வியாழனும், ஏனைய கிரகங்களும், யமனும், மழையும், இடியும் அக்கடல் நீரினுள் வாழ்ந்து துன்பங்களைத் தரும் நீர் வாழ் உயிர் இனம் போன்றவை. அக்கடலுள் மூழ்கும் மனிதர்களைக் கரைசேர்க்கும் மரக்கலம் ஆவது அழகும் மலைபோன்ற வலிமையும் பொருந்திய தோள்களை உடைய திருவரங்கப் பெருமானது மலரடிகளே ஆகும்.

47. பதக்கமலங்க லணிமார்ப ! பொன்னி
படிந்திமையோர்
பதக்கமலங்க ளறுசீ ரரங்க !
பகட்டயிரா
பதக்கமலங்க ரித்தூர்வோன் சிவனயன்
பார்க்க வந்துன்
பதக்கமலங்க ளடியேன் தலைக்கென்று
பாலிப்பதே !

*பதக்கம் அலங்கல் அணி மார்ப ! பொன்னி*
*படிந்து இமையோர்*
*பதக் கம் மலங்கள் அறுசீர் அரங்க !*
*பகட்டு அயிராபதக்*
*கம் அலங்கரித்து ஊர்வோன், சிவன், அயன்*
*பார்க்க வந்து உன்*
*பதக் கமலங்கள் அடியேன் தலைக்கு என்று*
*பாலிப்பதே !*

**பொருள் :**

பதக்கம் எனும் அணிகலனையும், மலர்மாலைகளையும் மார்பில் அணிந்தவனே ! காவிரி நதியில் நீராடித் தேவர்கள் தமது தீவினைப் பயன்கள் நீங்கப் பெறும் திருவரங்கத்தில் அருள் பாலிப்பவனே ! சிறப்பு மிகுந்த அயிராவதம் என்னும் யானையை வாகனமாகக் கொண்ட இந்திரன், சிவபெருமான், நான்முகன் ஆகியோர் முன்னில்லயில் நீ காட்சி தந்து, உன் பாத தாமரைகளை என் தலைமீது வைத்து ஆண்டருள் செய்வது எந்த நாளோ ?

48. பாலனம்செய்யமர் நாடாண்டு பூணொடு
பட்டணிந்து
பாலனம்செய்ய கலத்துண்டு மாதர் பல்
போகத்தையும்
பாலனம்செய்ய விருப்பதி லையம்
பருகி நந்தன்
பாலனம்செய்யவள் கோமா னரங்கம்
பையில் கை நன்றே

*பால் அனம் செய் அமர் நாடு ஆண்டு பூணொடு*
*பட்டு அணிந்து*
*பால் அனம் செய்ய கலத்து உண்டு மாதர்*
*பல் போகத்தையும்*
*பாலனம் செய்ய இருப்பதில், ஐயம் பருகி,*
*நந்தன்*
*பாலன், நம் செய்யவள் கோமான் அரங்கம்*
*பயில்கை நன்றே !*

பொருள் :

பால் போன்ற வெண்ணிறமான அன்னங்கள் வயல்களில் உலவித்திரியும் நாட்டை ஆண்டு, அணிகலன்களொடு பட்டாடைகளை அணிந்து, செம்மை நிறமுள்ள பொற்கிண்ணங்களில் பாலும் இனிமையும் கலந்த உணவையும் உண்டு, பலவகைப்பட்ட பெண்ணின்பம் அனுபவித்து வாழ்வதைக் காட்டிலும், பிச்சை எடுத்த வெறும் கூழை மட்டுமே குடித்து, நந்த கோபாலனும் நமது, சிவந்த திருமகளின் கணவனும் ஆன பெருமானான திருவரங்கத்தானை மனத்தில் பதித்து, (பற்றி) வாழ்வதே சிறப்பு மிக்கதாகும்.

49. பையிலத்தி மூளை நரம்பூ னுதிரம்
பரந்தகுரம்
பையிலத்தியுள்விளை பாண்டமென் னாமல்புன்
பாவையர்தோல்
பையிலத்திசெய்து நரகெய்துவீ ருய்யப்
பற்று மினோ
பையிலத்தி மேவித் துயில்கூ ரரங்கர் பொற்
பாதத்தையே !

*பையில், அத்தி மூளை நரம்பு ஊன் உதிரம்*
*பரந்த குரம்பை*
*இலத்தி உள் விளை பாண்டம் என்னாமல்*
*புன் பாவையர்*
*தோல் பையில் அத்திசெய்து நரகு எய்துவீர்*
*உய்யப் பற்றுமினோ*
*பையில் அத்தி மேவித் துயில் கூர்*
*அரங்கர் பொற் பாதத்தையே !*

**பொருள் :**

மனித உடலானது ஒன்றுடன் ஒன்றாய் இணைந்த எலும்புகள், மூளை, நரம்புகள், சதை, இரத்தம் ஆகியவை பரவிய (உயிர் சில காலமே தங்கி இருக்கும்) ஒரு சிறு குடில். உள்ளே மலம் விளையும் மட்கலம் என எண்ணாமல் இழிவான பொருள் விலைப் பெண்டிர்களின் உடலின் மீது விருப்பம் கொண்டு அதன் காரணமாய் நரகத்தை அடையும் மானிடரே ! நீங்கள் நற்கதி பெற்று வாழ ஆதிசேடனின் படத்தில் அறிதுயில் கொள்ளும் திருவரங்கப் பெருமானின் மலரடிகளை (மனத்தாலும் உடலாலும்) பற்றிக் கொள்வீராக.

50. பாதகங்கைக்கு மரங்கர் பல்பேய்
பண்டிராவணனுற்
பாதகங்கைக்கு மென்றெள்ளக் கொய்தார்
படிக்கேற்றதிருப்
பாதகங்கைக்குள் விழு முன்னமே
பங்கயன் விளக்கும்
பாதகங்கைக்கு ளிர் நீர்வீழ்ந் ததீசன்
படர்சடைக்கே !

*பாதகம் கைக்கும் அரங்கர் ; பல்பேய்*
*பண்டு இராவணன்*
*உற்பாத கம் கைக்கும் என்று எள்ளக்*
*கொய்தார் படிக்கு, ஏற்ற*
*திருப்பாத கம் கைக்குள் விழுமுன்னமே*
*பங்கயன் விளக்கும்*
*பாத கங்கைக் குளிர்நீர் வீழ்ந்தது ஈசன்*
*படர் சடைக்கே !*

**பொருள் :**

தமது பக்தர்களின் துயரங்களை அழிக்கின்ற திருவரங்கப் பெருமானும் முன்னாளில் இராவணனது கொடுமை நிறைந்த தலைகள் கசக்கும் என்று போர்க்களத்தில் ஊன் உண்ண வந்த பேய்கள் இகழும்படி அவனது தலைகளைக் கொய்தவருமான பெருமான் மாவலியிடம் மூன்றடி நிலம் கேட்டபோது அவனால் வழங்கப்பட்ட திருப்பக் கூடாத தாரை நீர் கைக்குள் விழுவதற்கு முன்பாகவே பிரமன் பெருமானது மலரடிகட்குச் செய்த திருமஞ்சன நீராகிய குளிர்ந்த கங்கை ஈசனது அடர்ந்த சடைமுடியில் வீழ்ந்தது.

51. படநாகத்தந்தர மீதிருப்பா னெம்
பரனரங்கன்
படநாகத்தந்தம் பறித்தோன் புகழைப்
பரவுமின்க
படநாகத்தந்தக் கரணம்பொல் லான்சிசு
பாலன்முன் பல்
படநாகத்தந்த வசைக்கும் தந்தான் தொல்
பரக தியே !

*பட நாகத்து அந்தரம் மீது இருப்பான்*
*எம் பரன் ; அரங்கன் ;*
*பட நாகத் தந்தம் பறித்தோன் ;*
*புகழைப் பரவுமின் ;*
*கபடன் ஆகத்து அந்தக் கரணம் பொல்லான்*
*சிசு பாலன் முன்*
*பல்பட நா கத்து அந்த வசைக்கும்*
*தந்தான் தொல் பரகதியே !*

**பொருள் :**

வைகுண்டமாகிய வானுலகில் படங்களை உடைய அனந்தன் மேல் இருப்பவனும், எங்கள் இறைவனும் தனது மாமன் கம்சன் அனுப்பிய யானையின் தந்தங்களை முறியும் வண்ணம் பறித்தவனுமான திருவரங்கப் பெருமானின் புகழைப் போற்றிப் பாடுங்கள் ஏனெனில் திருவரங்கநாதன், வஞ்சகனும் மனத்தில் அகங்காரம் கொண்ட பொல்லாதவனும் ஆன சிசுபாலன், தனது நாவினால் பலவாறாகத் திட்டிய ஏச்சையும் பேச்சையும் கூட இனிதாக ஏற்று அந்தச் சிசுபாலனுக்கு வீடுபேறளித்தவன் ஆவான்.

52. பரவையி லன்னகண் பாஞ்சாலிநின்
பரமென்னநிரு
பரவையில் மேகலையீந்தான ரங்கன்
பணிந்திமையோர்
பரவையி லாழிபிரா னடிக்கீழுற்
பவித்தழியும்
பரவையில் மொக்குகளைப் போற்பல கோடி
பகிரண்டமே !

*பரவு அயில் அன்ன கண் பாஞ்சாலி "நின்*
*பரம்" என்ன,*
*நிருபர் அவையில் மேகலை ஈந்தான் ; அரங்கன்*
*பணிந்து இமையோர்*
*பரவு ஐயில் ஆழிப் பிரான், அடிக்கீழ்*
*உற்பவித்து அழியும்*
*பரவையில் மொக்குகளைப் போல் பலகோடிப்*
*பகிரண்டமே !*

**பொருள் :**

அகன்று பரந்த வேல் போன்ற கண்களை உடைய பாஞ்சாலி, எனக்கு நீ செய்யும் அருள் எனக்குக் கவசம் ஆகும் என்று ஓலமிட மன்னர்கள் நிறைந்த சபையில், மேம்பாடு மிக்க ஆடைகளை அளித்தவனும், தேவர்கள் வணங்கிப் போற்றும், இறைவனும், சக்கரப் படையை உடையவனும் ஆன திருவரங்கப் பெருமானின் மலரடிகளுக்குக் கீழே கடலுள் எழும் நீர்க்குமிழிகளைப் போல் பல கோடி அண்டங்களும் உலகங்களும் தோன்றிப் பின் அழிந்து போகும்.

53. அண்டமடங்கலை யுந்தந்து காத்தவை
யந்தந்தன்பால்
அண்டமடங்கலைச் செய்காரண மம்பொன்
முத்தலைவான்
அண்டமடங்கலை யீர்த்தோடும் பொன்னி
யரங்கன்புள்கா
ரண்டமடங்கலை முந்நீர் மகளுகப்
பாக வென்றே.

*அண்டம் அடங்கலையும் தந்து காத்து அவை*
*அந்தம் தன் பால்*
*அண்ட மடங்கலைச் செய் காரணம் – அம்பொன்*
*முத்து அலைவான்*
*அண்ட, மடங்கலை ஈர்த்து ஓடும் பொன்னி*
*அரங்கன், புள்*
*காரண்டம் அடங்கு அலை முந்நீர் மகள்*
*உகப்பாக என்றே.*

**பொருள் :**

பொன் மணிகளையும் முத்துக்களையும் தனது விண்ணகத்தை எட்டும் அளவு உயர்ந்துள்ள அலைகளால் வாரித் தெளிப்பதோடு, சிங்கங்களையும் அலைகளால் இழுத்துக்கொண்டு ஓடும் பொன்னி நதியினால் சூழப்பெற்ற திருவரங்கப் பெருமான், பலகோடி அண்டங்கள் அனைத்தையும் படைத்து காப்பாற்றிப் பின் யுக முடிவில் மீண்டும் தன் பக்கம் அடங்கியிருக்கும்படிச் செய்யும் காரணம் என்னவெனில், நீர்க்காக்கைகளும் (காரண்டம்) ஏனைய பறவைகளும் வாழ்ந்து இருக்கும் திருப்பாற் கடலில் தோன்றியவளான திருமகள் மனமகிழ்வு கொள்வாள் என்பதற்காகவேயாம்.

54. ஆகமதிக்கு முகமேல் முகமுடை
யானயன்வாழ்
ஆகமதிக்கும் நவநீதக் கள்வ !
அவனி கொள்வார்
ஆக மதிக்கு ளஞ்சேரரங் காவுன்னை
யன்றித் தெய்வ்
மாக மதிக்கு ளெண்ணேனடி யேன் பிறர்
யாரையுமே

*ஆகம திக்கு முகமேல் முகம் உடையான்*
*அயன் வாழ் ஆக !*
*மதிக்கும் நவநீதக் கள்வ !*
*அவனிகொள்*
*வராக ! மதிக்குளம் சேர் அரங்கா ! உன்னை*
*அன்றித் தெய்வ மாக*
*மதிக்குள் எண்ணேன் அடியேன் பிறர்*
*யாரையுமே*

**பொருள் :**

மறை நூல்கள் (வேதங்கள்) ஆகிய நான்கும் ஆக, திசைக்கு ஒன்றாக நான்கு முகங்களும் அவற்றினோடு மேலும் ஒரு முகமாக ஐந்து முகங்கள் (ஈசானம் தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம்) உடைய சிவனும் பிரம்மாவும் ஒன்றி வாழும் திருமேனி உடையவனே ! இப்பூவுலகத்தைத் தனது கொம்பில் தாங்கிய வராக மூர்த்தியே ! நிலவு ஒளி செய்கின்ற நீர் நிலையான பாற்கடலில் உறையும் திருஅரங்கப் பெருமானே ! உனது அடிமையாகிய நான் உன்னையல்லாது வேறு யாரையும் தெய்வமாக மனத்தாலும் எண்ணமாட்டேன் !

55. ஆரத்தனந்த ரும்தாய்தந்தையா னந்த
மாவரி கழ்
ஆரத்தனந்த னன்தீமை கண்டா
லம்கவுத்தவூ
ணாரத்தனந்த சயனா வணி யரங்
கா திகிரி
ஆரத்தனந் தன்மதலாயென்தீங் குனக்
கத்தன் மைத்தே !

*ஆரத் தனம் தரும் தாய், தந்தை*
*ஆனந்த மாவர்; இகழார்*
*அத்த ! நந்தனன் தீமை கண்டால்*
*அம் கவுத்துவ !*
*பூணாரத்து அனந்த சயனா ! அணி அரங்கா !*
*திகிரி*
*ஆர் அத்த ! நந்தன் மதலாய் ! என் தீங்கு*
*உனக்கு அத்தன்மைத்தே.*

**பொருள் :**

பெற்ற மகவுக்குத் தாய்ப்பால் தரும் அன்னையும் தந்தையும் தமது புதல்வன், செய்யும் குற்றங்களை (மடியில் ஏறி விளையாடல், மிதித்தல், கடுஞ்சொல் கூறல் ஆகியனவற்றைப் பொருட்படுத்தி அவனைத் தண்டிக்கவோ இகழ்ந்து உரைக்கவோ மாட்டார்கள். மாறாக, அக்குறும்புச் செயல்களால் மனமகிழ்வே அடைவர் ! அழகிய கவுத்துவ மணியாகிய மார்பணியை உடையவனே, அணிகலன்களோடு மலர் மாலைகளும் புரளும் மார்பினை உடையவனே ! அனந்தாழ்வான் ஆகிய ஆதிசேடன் மீது அறிதுயில் கொள்பவனே. பெருமை மிக்க திருவரங்கப் பெருமானே ! நந்த கோபனின் மைந்தனே ! நான் செய்கின்ற குற்றங்களும் அறியாப் பிழைகளும் எனக்குத் தந்தை போல் விளங்கும் நீ (பொருட்படுத்தாது) அவ்வாறே ஏற்கவேண்டும்.

56. அத்தனுமன்பு வுளவன்னை யும்பேரு
மனந்தமதாம்
அத்தனுமன்பு லனாதலி ணாண்டருள்
அம்புயை வீ
ரத்தனுமன்புய மீதேறரங்க னம்
சார்ங்க வயி
ரத்தனுமன்புகல் பேரிரு வீர்க்கும்
அடியனென்றே.

*அத்தனும் அன்புஉள அன்னையும்*
*பேரும் அனந்த மதாம்;*
*அத் தனு மன் புலன்; ஆதலின்*
*ஆண்டருள் – அம்புயை*
*வீரத்து அனுமன் புயமீது ஏறு அரங்கன்*
*அம் சார்ங்க வயிரத்*
*தனு மன் புகல் பேர் இருவீர்க்கும்*
*அடியன் என்றே !*

**பொருள் :**

ஒவ்வொரு பிறப்பின்போதும் என்னைப் பெற்ற தந்தையும், என்மீது பரிவும் பாசமும் கொண்ட தாயும், எனக்கு சூட்டப் பெற்ற பெயர்களும் கணக்கில்லாதவை ஆகும். அப்படிப்பட்ட பிறப்புகளினால் பெற்ற உடலும் கொண்ட இழிவு பொருந்திய அறிவீனன் நான்! ஆதலால் திருமகள் ஏறி அமர்ந்துள்ள மார்பினை உடையவனும், வீரம் மிக்க அனுமானின் தோள்மீது ஏறிப் போரிட்ட ராமன், திருவரங்கப் பெருமான் இருவரும் ஆகிய, வைரம் பாய்ந்த சார்ங்கம் எனும் வில்லை ஏந்திய பெருமானே என்னை ஆட்கொண்டருள்வீராக.

57. அடியவராகம் ஆட்கொள்ள வும்மெண்ணி
ஆருயிர்கட்(கு)
அடியவராகம் படைத்தமை யால்
அகமே ! பெரிய
அடியவராக வரங்கருக் காட்செய்
யருட் கதையால்
அடியவராகஞ் செய்மாறனுக் காட்செயும்
ஐவரையே !

*அடியவர் ஆகவும் ஆட்கொள்ளவும் எண்ணி*
*ஆருயிர்கட்கு*
*அடி அவர் ஆகம் படைத்தமையால்*
*அகமே ! பெரிய*
*அடிய வராக அரங்கருக்கு ஆட்செய் !*
*அருட் கதை யால்*
*அடி அவராகம் செய் மாறனுக்கு ஆட் செயும்*
*ஐவரையே.*

**பொருள் :**

மானிடர் அனைவரும் பெருமானுக்குத் தொண்டர்களாக, அப்படி ஆகிய தொண்டர்களை ஆட்கொள்வதற்காகவே, தமது திருவடிகளையும் தமது பொலியும் திருமேனியையும் கொண்டு விளங்குவதால், (தொண்டர்களாக்கி, அத்தொண்டர்களை ஆட்கொள்வதற்காவே அவ்வுயிர்கட்கு படைப்பின் அடிநாள் தொட்டே, உடலையும் கொடுத்ததினால் எனவும் பொருள் கூறுவர்) என் மனமே! பெரிய காலடிகளை உடைய பூவராக மூர்த்தியாய் அவதாரம் செய்த திருவரங்க நாதனுக்குத் தொண்டு செய்து வாழ் ! அங்ஙனம் வாழ்ந்தால் தீய சிற்றின்ப மோகத்தை விளைவிக்கும் மன்மதனுக்கு அடிமைகள் போல் செயல்படும் ஐம்புலன்களையும் திருவரங்கப் பெருமானின் கதாயுதத்தால் தாக்கி அடித்து வலிமை குன்றச் செய்வாய்!

58. வரையாழி வண்ண ரரங்கேச ரீசன்முன்
வாணன்டிண்டோள்
வரையாழி யார்புள்ளின் வாகனத்தே வந்த
நாள் தொடிற்றை
வரையாழிய துயராய்த் தூசும் நாணும்
மதியுஞ் செங்கை
வரையாழி யும்வளையு மிழந்தாளென்
மடமகளே!

*வரை ஆழிவண்ணர் அரங்கேசர் ஈசன்முன்*
*வாணன் திண்தோள்*
*வரைஆழியார் புள்ளின் வாகனத்தே வந்த*
*நாள் தொடு இற்றை வரை*
*ஆழிய துயராய்த் தூசும் நாணும்*
*மதியும் செங்கை*
*வரை ஆழியும் வளையும் இழந்தாள் என்*
*மடமகளே!*

பொருள் :

கரைகளை உடைய கடல் போன்ற கருநிறம் கொண்டவரான திருவரங்கப் பெருமான் சிவபிரானின் பார்வையிலேயே வாணாசுரனின் வலிமை மிக்க திண்மை கொண்ட தோள்களை நீக்கிய சுதர்சனச் சக்கரத்தினை உடைய அவர் கருட வாகனத்தில் மீது ஏறிப் பவனி வரக்கண்ட என் பேதைப் பெண், அன்று முதல் இன்றுவரை ஆழ்ந்த துயர்கொண்டவளாய் அரையில் உடுத்திய ஆடையினையும் பெண்களுக்குரிய பண்பான நாணத்தையும் தன் மெய்யறிவையும் சிவந்த கைகளின் விரல்களில் அணியப்பட்ட மோதிரத்தையும், கைகளில் அணியப் பெற்ற வளைகளையும் இழந்துவிட்டாள் (திருவரங்கப் பெருமானின் மீது மையல் கொண்டதால் பெண் துயரம் கொண்டாள் அதனால் உடல் மெலிந்தாள் அதன் காரணமாய் இடுப்பில் உள்ள ஆடை நெகிழ்ந்தது. மோதிரமும் வளைகளும் கழன்றன) (வரை என்ற சொல் கரை எனவும் நீக்கல் எனவும், விறலிறை எனவும் பொருள் கொளல் வேண்டும்).

59. மகரந்தகாதலை வாழ்வென்ன வாரிசுட்
டாய்திதிதன்
மகரந்தகாதலை வானிலுள் ளோர்க்குமண்
ணோர்க்குவட்டா
மகரந்தகாதலை வார்குழை யாய்வளர்
சீரங்கதா
மகரந்தகாதலை வாக்கின் சொல்லேன்மட
வா ரெதிரே!

*மகரம், தகாது அலை வாழ்வு என்ன*
*வாரிசுட்டாய்! திதிதன்*
*மகர் அந்தகா! தலை வானில் உள்ளோர்க்கு*
*மண்ணோர்க்கு உவட்டா*
*மகரந்த காதுஅலை, வார்குழையாய்!*
*வளர் சீரங்க*
*தாம! கரந்த காதலை வாக்கின் சொல்லேன்*
*மடவார் எதிரே.*

பொருள் :

அலைகள் நிறைந்த கடலில் இனி வசிப்பது இயலாது என்று மகரம் எனப்படும் சுறாமீன்கள் நினைத்து வருந்தும் வண்ணம் கடலை உனது சுடுசரங்களால் சுட்டவனே! திதி என்ற அரக்கியின் புதல்வர்களுக்கு காலனே! வானில் உள்ள தேவர்கட்கும் பூவுலகில் வாழும் மானிடர்களுக்கும் தெவிட்டாத தேன் போல் இனிமை தருபவனே! திருச்செவிகளில் அசைந்தாடும் குண்டலங்களை அணிந்தவனே ! திருவரங்கத்தில் அருள்செய்யும் பேரொளியே! எனக்கு உன்மேல் உள்ள காதலை என் தோழியரிடம் கூறாமல் வெட்கத்தினால் மறைத்ததை நீ எனது தோழியர் முன்பாக உனது திருவாக்கினால் கூறுவாயாக. (பாடல் 59ம் 60ம் அரங்க நாதன் மேல் மையல் கொண்ட ஓர் பெண்ணின். கூற்றாய் அமைந்தது).

60. வாராகவா மனனேயரங்கா வட்ட
நேமிவல
வாராகவா வுன்வடிவுகண் டால்மன்
மதனுமட
வாராகவாதரம் செய்வனென் றாலுய்யும்
வண்ணமெங்கே
வாராகவாச முலையேனைப்போ லுள்ள
மாதருக்கே!

*வாராக! வாமனனே! அரங்கா வட்ட*
*நேமி வலவா!*
*ராகவா! உன் வடிவு கண்டால்*
*மன்மதனும் மடவார்*
*ஆக ஆதரம் செய்வன் என்றால் உய்யும்*
*வண்ணம் எங்கே*
*வார் ஆக வாச முலையேனைப் போல் உள்ள*
*மாதருக்கே!*

**பொருள் :**

உலகம் உய்வதற்காகப் பன்றிவடிவ அவதாரம் செய்தவனே! மாணிக்குறளானாக அவதாரம் செய்தவனே! வட்ட வடிவமான சக்கரம் படையினை உடைய வல்லமை மிக்கவனே! ரகுகுலத்தில் ராமனாகத் தோன்றியவனே! உன்னுடைய எழில் பொருந்திய திருஉருவத்தைக் கண்டால் உன்மேல் மோகம் கொண்டு மன்மதனும் பெண்ணுருவம் கொண்டு உன் காதலை நாடுவான் என்றால் கச்சுப் பொருந்திய நறுமணப் பூச்சுக்கள் பூசப்பட்ட தனங்களை உடைய என்னைப் போல் உள்ள பெண்களுக்கு உன் திருமேனி எழில் கண்டால் பிழைக்கும் வழி உண்டோ?

61. மாதம் பத்துக் கொங்கையுமல் குல்தேரும்
வயிறுமில்லை
மாதம்பத்துக் குறியுங்கண் டிலேம்வந்து
தோன்றினை; பூ
மாதம்பத்துக் கெதிர்மார்பா! வரங்கத்து
வாழ்பரந்தா
மாதம்பத்துக் கருத்தில்லார் பிறப்பென்பர்
வையகத்தே

*மா தம்பத்துக் கொங்கையும் அல்குல்தேரும்*
*வயிறும் இல்லை*
*மாதம் பத்துக் குறியும் கண்டிலேம்*
*வந்து தோன்றினை*
*பூமாது அம்பத்துக்கு எதிர்மார்பா! அரங்கத்து*
*வாழ் பரந்தாமா!*
*தம் பத்துக் கருத்து இல்லார் பிறப்பு என்பர்*
*வையகத்தே!*

**பொருள் :**

இரணியனை அழிப்பதற்காக நீ நரசிம்ம அவதாரம் செய்த போது, அந்தத்தூணில் தனங்களோ, தேர்த்தட்டுப் போன்ற அல்குலோ, வயிறோ இல்லை பத்துமாதம் கருவைச் சமந்த அறிகுறிகளும் இல்லை இருப்பினும் அந்தத் தூணில் பிறந்து தோன்றினாய், மலர் மகளான திருமகளின் கண்களுக்கு (அம்பத்து-அம்பகத்து-கண்களுக்கு) ஓர் இலக்காய் அமைந்த மார்பினை உடையவனே! திருவரங்கத்தில் வாழ்கின்ற திருமாலே ! நீ தூணிடைத் தோன்றிய விந்தையை உன்மீது பற்று கொள்ளாதவர்கள் உனக்கு நேர்ந்த பிறப்பென்று அறியாமல் சொல்வார் (வீடுபேறின்மையால் மட்டுமே பிறவிக் கடலில் உயிர்கள் வீழும்)

62. வைகுந்தர்தா மரைபோற்பாதர் நாகத்து
மாதர் புடை
வைகுந்தமேற்கொண் டிருந்தார் வடிவைந்தின்
வாழுமிடம்
வைகுந்தம்பாற் கடல்மாநீ ரயோத்தி
வண்பூந்துவரை
வைகுந்தமன்பர் மனஞ்சீ ரரங்கம்
வடமலையே

*வைகுந்தர், தாமரைபோல் பாதர் நாகத்து*
*மாதர் புடைவை*
*குந்தமேல் கொண்டு இருந்தார்; வடிவு ஐந்தின்*
*வாழும் இடம்*
*வைகுந்தம், பாற்கடல், மா நீர் அயோத்தி,*
*வண் பூந்துவரை,*
*வைகும் தம் அன்பர்மனம், சீர் அரங்கம்,*
*வடமலையே*

பொருள் :

கூர்மை மிக்க குந்தம் எனும் ஆயுதம் உடையவர், தாமரை போன்ற மலரடி உடையவர் ஆயர்பாடியில் கோபியரின் சேலைகளை எடுத்துக்கொண்டு குருந்தமரத்தின் மேல் ஏறி இருந்தவர் ஆகிய திருவரங்கப் பெருமான் ஐந்து திருக் கோலங்களுடன் வாழ்கின்ற இடங்களாவன, வைகுண்டம், திருப்பாற்கடல், நீர்வளம் பொருந்திய அயோத்தி, வளமையும் பொலிவும் மிக்க துவாரகை, தம் மீது பற்றுக் கொண்ட வாழும் அடியார்களது மனம், திருஅரங்கம், திருவேங்கடமலை ஆகியவையே.

63. வடமலை தென்மலைகச்சி குறுங்குடி
மானிற்பது
வடமலை வேலையரங்கம் குடந்தை கண்
வளருமிடம்
வடமலை கொங்கைத்திரு வோடிருப்புவை
குந்தம் கர
வடமலை யன்பருளம் நடை யாட்ட
மறையந்தமே!

*வடமலை தென்மலை கச்சி குறுங்குடி*
*மால் நிற்பது;*
*வடம், அலைவேலை, அரங்கம், குடந்தை*
*கண் வளரும் இடம்,*
*வடம் அலை கொங்கைத் திருவோடு இருப்பு*
*வைகுந்தம்,*
*கரவடம் மலை அன்பர் உளம் நடை ஆட்டம்*
*மறை அந்தமே*

**பொருள் :**

திருவரங்கப் பெருமானாகிய பெருமான் நின்ற திருக்கோலத்தில் காட்சி தந்து அருள்கின்ற இடங்களாவன வடமலை எனும் பெயர் கொண்ட திருவேங்கடமலை, தென்மலை எனும் பெயர் கொண்ட திருமாலிருஞ்சோலையாகிய அழகர் கோவில் காஞ்சிபுரம், திறுக்குறுங்குடி ஆகியன. அப் பெருமான் அறிதுயில் கொண்ட கோலத்தில் அருள்செய்யும் இடங்கள், ஆலிலை, திருப்பாற்கடல், திருவரங்கம், திருக்குடந்தை ஆகியன. பெருமான், மாலைகளும் அணிகலன்களும் புரளும் தனங்களை உடைய திருமகள் உடன் இருக்க, அருளும் இடங்கள், வைகுண்டம்! உள்ளத்தே உள்ள கசடுகளைப் போராடி அகற்றும் அடியார்களின் நெஞ்சகத்தில் தான் பெருமான் நடந்து சேரும் இடமாகும்! மறைகளின் முடிவே பெருமான் நடனமிடும் இடம்.

64. அந்தகராசலம் வந்தாலுனை யழை
யாதிருப்பார்
அந்தகராசலங் காபுரியார்க் கரங்
கா மறையின்
அந்தகராசலக் கூக்குரல் ஓயுமு
னாழ்தடங்க
லந்தகராசலத் தேதுஞ்ச நேமி
யறுக்கக் கண்டே

*அந்தகர் ஆசலம் வந்தால் உனை*
*அழையாது இருப்பார்*
*அந்தக, ராசலங்கபுரி யார்க்கு!*
*அரங்கா! மறையின்*
*அந்த! கராசலக் கூக்குரல் ஓயுமுன்*
*ஆழ்தடம்*
*கலந்த கரா சலத்தே துஞ்ச, நேமி*
*அறுக்கக் கண்டே*

பொருள் :

திருவரங்கப் பெருமானே! இலங்காபுரியில் வாழ்ந்த அரக்கர்களின் அரசனான இராவணனுக்கு எமனாக வந்தவனே! வேதமறைகள் விளக்கும் உபநிடதங்களாய் விளங்குபவனே! முன்பு மடுக்கரையில் முதலைவாய்ப்பட்ட துன்பம் நீங்குவதற்காக மதயானை "ஆதிமூலமே" என உனைக் கூவி அழைத்த ஒலி ஓய்வதற்கு முன்பாகவே அந்தக் குளத்திலேயே அம்முதலை இறக்கும்படி உனது சக்கரப்படையால் அறுத்துத் தள்ளிய செயலைக் கண்டிருந்தும் தமக்குத் துன்பம் வரும்போது உன்னை அழைத்து உன்னிடம் முறையிடாமல் இருப்பவர்கள் உண்மையில் குருடர்களே!

65. அறுகுதலைப்பெய் பனிபோன்ற தாதுரு
வாய்ப் பிறந்தல்
அறுகுதலைப் பிள்ளை யாய்க்காளை யாய்க்கிழ
மாகி ஐயன்
அறுகுதலைச் செய்து வீழ்காயம் நானென்னும்
ஆரிருளை
அறுகுதலைக்கொள் பணியரங்கா! நின்க
ணாசை தந்தே!

*அறுகு தலைப்பெய் பனிபோன்ற தாது உருவாய்ப்*
*பிறந்து*
*அலறு குதலைப் பிள்ளைஆய்க் காளையாய்க்*
*கிழம்ஆகி ஐ*
*அளறு குதலைச் செய்து வீழ் காயம் நான்*
*என்னும் ஆர் இருளை*
*அறு! கு தலைக்கொள் பணி அரங்கா!*
*நின்கண் ஆசை தந்தே*

**பொருள் :**

மிகச்சிறிய அறுகம்புல்லின் நுனியில் விழுந்த பனித்திவலை போன்ற சுக்கிலவிந்து வாய்த் தோன்றி, அலறி அழும் குழந்தையாய், பின் மழலைபேசும் பிள்ளையாய், இளமைதுள்ளும் காளை வடிவமாய், கிழப்பருவம், எய்தி சகதி போன்ற கோழையினைச் சிந்தி மடியும் இந்த உடற்கூட்டை, நான் எனது என நினைத்து மானிடர், கொள்ளும் ஆணவத்தை உன்மீது பற்றுவைக்கும் ஆர்வத்தை, உண்டாக்கி அறுத்துத் தள்ளுவாய்! இப்பூவுலகைத் தலையில் சுமக்கும் ஆதிசேடனை அணையாகக் கொண்ட திருவரங்கப் பெருமானே.

66. ஆசுகவிக்கு நிகரெனக் கில்லையென்
றற்பரைப் பூ
ஆசுகவிக்குவில் வேள்வடி வாயறி
வாலகத்திய்
ஆசுகவிக்கு வலயமன் னாவென்
றரற்றியிரந்
தாசுகவிக்கும் புலவீர் புகழ்மின்
அரங்கனையே!

*ஆசுகவிக்கு நிகர் எனக்கு இல்லை என்று*
*அற்பரைப்*
*"பூஆசுக இக்கு வில் வேள் வடிவா!*
*அறிவால் அகத்தியா!*
*சுக! இக்குவலய மன்னா" என்று*
*அரற்றி, இரந்து*
*ஆசு கவிக்கும் புலவீர்! புகழ்மின்*
*அரங்கனையே!*

பொருள் :

நினைத்ததை நினைத்த மறுகணம் பாடலாகப் புனையும் ஆற்றலில் எனக்கு நிகர் யாரும் இல்லை யென்று, அற்ப மனம் படைத்த ஈனர்களை, மலர் அம்புகளையும், கரும்பு வில்லையும் உடைய மன்மதனைப் போல் எழில் பெற்றவனே எனவும், அறிவாற்றலில் அகத்தியனையும் சுக முனிவனையும் போன்றவனே எனவும், இப்பூவுலகமெல்லாம் ஆட்சி செய்யும் அரசனே எனவும் பிதற்றலாகப் பாடல் இயற்றி, யாசித்து, குற்றங்களை (குற்றங்கள் எனத்தெரிந்த பின்பும்) விரும்பிச் செய்யும் புலவர்களே! தேவையில்லாமல் செய்யும் அச்செயலை ஒழித்துத் திருவரங்கப் பெருமானின் பெருமைகளைப் புகழ்ந்து பாடல்களை இயற்றுங்கள்.

(இறுதி வரியில் உள்ள கவிக்கும் என்ற சொல் (கவித்தல்) விரும்பிச் செய்தல் என்ற பொருளில் அமைந்தது.

67. கனக விமானமற் றீனர்க் குரைக்கிலேன்
கால்பெற்றவா
கனக விமானற் கருடப்பு ளூர்தியை
கால் மலர் கோ
கனகவிமானம் புவிமான் தடவரைக்
கண்வளரும்
கனகவிமானத் தரங்கனை நாச்சொல்லக்
கற்ற பின்னே !

*கன கவி மானம் அற்று ஈனர்க்கு*
*உரைக்கிலேன் ! கால் பெற்ற*
*வாகன கவி, மால் நல் கருடப் புள்*
*ஊர்தியை ; கால் மலர்*
*கோ கனக வி மான், அம் புவிமான்*
*தடவ அரைக்கண் வளரும்*
*கனக விமானத்து அரங்கனை, நா சொல்லக்*
*கற்ற பின்னே !*

பொருள் :

காற்றுக் கடவுளான வாயுதேவன் பெற்ற குரக்கினத்து அனுமனையும், பெருமையும் அழகும் கொண்ட பறவையாகிய கருடனையும் தனது வாகனமாய்க் கொண்டவனும், பொற்றாமரை மலரினளான அழகிய திருமகளும் எழில் பொருந்திய நில மகளும் உனது இரு திருவடி மலர்களை வருட, அரைக்கண் மூடி, பொன்னாலான விமானம் அமைந்த கோவிலான திருவரங்கத்தில் அறிதுயில் கொள்ளும் பெருமானின் பெருமைகளைப் பாடலாகப் புகழ்ந்து பாடும் ஆற்றலை எனது நாக்கு கற்றக்கொண்ட பின்பு, அரிய சிறப்புக்கள் பொருந்திய பாடல்களை அற்பமான மானிட ஈனர்கள் மேல் நான் பாட மாட்டேன்.

(கோ + கனக + வி + மான் - பொற்றாமரை மலரினளான அழகிய திருமகள்)

68. கற்றினமாயவை காளையர்வான் கண்
மீள் நினைவ
கற்றின மாயமும் நீகன்று காளைய
ராகிப்பல்ப
கற்றினமாயர் பரிவுறச் சேரி
கலந்தமையும்
கற்றினமாய வொண்ணாவரங் காசெங்
கமலற்குமே !

*கற்றினம் ஆயவை காளையர் வான்கண்டு*
*மீள் நினைவு*
*அகற்றின மாயமும், நீ கன்று காளையர்*
*ஆகிப் பல்*
*பகல் தினம் ஆயர் பரிவுறச் சேரி*
*கலந்தமையும்*
*கற்று இனம் ஆய ஒண்ணா அரங்கா !*
*செங்கமலற்குமே.*

**பொருள் :**

திருஅரங்கப் பெருமானே, முன்னம் தேவருலகிற்குக் கடத்தப்பட்ட கன்றுகளின் கூட்டங்களுக்கும் ஆயர் குலச் சிறுவர்களுக்கும், தாம் மீண்டு ஆயர் பதி வந்த போதும், கடத்தப் பட்டதும் மறைத்து வைக்கப்பட்டதும் மீண்டதுமான நினைவுகள் முற்றிலும் மறந்து போகும்படி செய்த விந்தையும், அப்படி அவர்கள் கடத்தப்பட்ட நேரத்தில் பல நாள்களுக்கு அக்கன்றுகளின் வடிவாயும் ஆயர் குலச் சிறுவர்களின் வடிவாயும் நீ ஒருவனே மாறி அவரவர் குடும்பத்தில் தங்கி, குடும்பத்தினருடன் அன்புறக் கலந்து வாழ்ந்த விந்தையும், உனது நாபிக் கமலத்தில் தோன்றிய பிரம தேவனாலும் இன்னும் கற்று அறிய முடியாதபடி நீ விளங்குகிறாய்.

69. கமலங்குவளை மடவார்தனம் கண்க
வென்றுரைத்த
கமலங்குவளை முதுகாகி யும்கரை
வீர் புனல் கா
கமலங்குவளை விளையாடரங் கண்விண்
காற்று கனல்
கமலங்குவளை உண்டான்தொண் டராய்உய்ம்மின்
காம மற்றே.

*கமலம் குவளை மடவார் தனம் கண்கள்*
*என்று உரைத்து*
*அகம் மலங்கு வளை முதுகு ஆகியும்*
*கரைவீர் ! புனல்*
*காகம் மலங்கு வளை விளையாடு அரங்கன்*
*விண் காற்று கனல்*
*கமலம் கு அளை உண்டான் தொண்டராய்*
*உய்ம்மின் காமம் அற்றே.*

பொருள் :

உடலின்பத்தை நாடி, பெண்களின் தனங்களைத் தாமரை மொட்டு எனவும், கண்கள் குவளை போன்றவை எனவும் பலவாறாகப் பிதற்றி மனம் கலக்கம் அடைந்து, முதுகு வளைந்து கூன் எய்தும் முதுமைக் காலம் வரையும் பெண்ணாசை கொண்டு துன்புறும் நீவிர் காமத்தை முற்றும் களைந்து, நீர்க்காகங்களும் மலங்கு எனும் மீனினமும் சங்குகளும் புரளும் காவிரியால் சூழப்பட்ட திருவரங்கப் பெருமானாகிய மண், வெண்ணெய் உண்ட மாயனின், தொண்டர்களாகி நலம் பெறுவீராக !

70. கா மனத்தால் விழ ஊதியக் காலவக்
கவரரங்கன்
காமனத்தா வென்று நைவார்க் கமுதன்கல்
நெஞ்சர்க்கிரங்
காமனத்தானளக் கும்கடற் பார்கலம்
போன்றது மீ
காமனத்தா மரையோன் கங்கை பாய்
மரங்கால் மலரே.

*கா மன் நத்தால் விழ ஊதி அக்*
*காலவக் கவர் அரங்கன்*
*காமன் அத்தா என்று நைவார்க்கு*
*அமுதன் ; கல் நெஞ்சர்க்கு*
*இரங்கா மனத்தான் அளக்கும் கடல் பார்*
*கலம் போன்றது ;*
*மீகாமன் அத் தாமரை யோன் ; கங்கை*
*பாய் ; மரம் கால் மலரே.*

பொருள் :

அமரர் உலகில் உள்ள கற்பகச் சோலைக்குத் தலைவன் ஆன இந்திரனைத் தனது பாஞ்ச சன்னிய முழக்காலேயே மயங்கி விழும்படி ஊதி அச்சோலையில் இருந்த பாரிஜாத மரத்தைக் கவர்ந்து கொண்டு வந்த திருவரங்கப் பெருமான், மன்மதனின் தந்தையே என அழைத்துப் போற்றுவர்களுக்கு அமிர்தம் போல் இனிமை தருபவன். கல்போல நெஞ்சம் உடைய பாதகர்களுக்குப் பரிவும் இரக்கமும் காட்டாதவன். அப்பெருமான் அளந்த கடலும் மண்ணுலகமும் ஒரு பெரிய மரக்கலம் போன்றது. நான்முகன் அக்கலத்தின் மாலுமி போன்றவன். அரங்கப் பெருமானின் மேல் நோக்கி உயர்ந்துள்ள திருவடி அக்கலத்தின் உள்ள பாய்மரம் போன்றது. திருவடியில் பெருகும் கங்கை அப்பாய் மரம் போன்றது. ஆதலால் அரங்கனைப் போற்றி செய்து பிறவிப் பெருங்கடலைக் கடந்து செல்ல முயல்வீராக.

71. மலருந்தி மேல்விழ மெய்நெரித்தான்
வையமேழும் துஞ்சா
மலருந்தினா னரங்கன்குறளாய்
மண்ணளந்த வன்னாள்
மலருந்தி வாக்கதிர் வண்குடையாய் முடி
மாமணியாய்
மலருந்தி யாய்திருத் தாள் விரலாழி
மணி யொத்ததே

*மலர் உந்தி மேல்விழ மெய் நெரித்தான்*
*வையம் ஏழும் துஞ்சாமல்*
*அருந்தினான் அரங்கன் ; குறள் ஆய்,*
*மண் அளந்த அந் நாள்*
*மலரும் திவாக்கதிர் வண் குடையாய்*
*முடி மா மணியாய்,*
*மலர் உந்தியாய், திருத்தாள் விண் ஆழி*
*மணி ஒத்ததே !*

பொருள் :

கௌரவர் அவையில் குழியில் மறைத்து வைக்கப்பட்டிருந்த மல்லர்கள் உந்துதலோடு தன்மேல் வந்து விழ, அவர்களது உடல்களை நெரித்து அழித்தவனும், ஊழிக் காலத்தில் ஏழு உலகங்களும் அழிந்து போகாமல் காப்பதற்காக அவற்றை உண்டவனும் ஆன திருவரங்கப் பெருமான் குறள் வடிவம் கொண்டு மகாபலியிடம் தானமாகப் பெற்ற உலகை அளந்த நாளில், விண்முட்ட நெடிய வடிவு கொண்டபோது செவ்வொளி பரப்பிய சூரிய கிரணமண்டலம், முதலில் அந்த நெடுமாலுக்கு ஒரு அழகிய குடைபோல காட்சி தந்து பின் அவரது பொன்முடியில் பதிக்கப்பட்ட இரத்தினம் போல் விளங்கி, நாபிக்கமலம் போல் துலங்கி, இறுதியில் அவரது கால் விரல் மோதிரத்தில் அமைந்த மாணிக்கம் போல விளங்கியது.

(முதல் வரியில் உள்ள "மலர்" எனும் சொல் "மல்லர்" என விரித்துப் பொருள்படும்)

72. மணிவாசல்தூங்க வொருகுடைக் கீழ்வையம்
காத்து சிந்தா
மணிவாச வன்னென வாழ்ந்திருப்பார்
பின்னைமாதிருக்கும்
மணிவாச மார்பரங் காகேசவாவென்று
வாழ்த்தித்திரு
மணிவாச கம்கொண் டணிவாரடியை
வணங்கினரே.

*மணிவாசல் தூங்க ஒரு குடைக்கீழ்*
*வையம் காத்து சிந்தாமணி*
*வாசவன் என வாழ்ந்திருப்பார்*
*பின்னை மாது இருக்கும்*
*மணி வாச மார்பு அரங்கா ! கேசவா !*
*என்று வாழ்த்தித்*
*திருமண் இ வாசகம் கொண்டு அணிவார்*
*அடியை வணங்கினரே.*

**பொருள் :**

அரண்மனையில் முன்புறத்தே ஆராய்ச்சி மணி கட்டித் தனது ஒற்றைக் கொற்றக் குடையின் கீழ் இவ்வுலகம் முழுமையும் அரசாட்சி செலுத்தி வானுலகில் உள்ள சிந்தாமணிக்குத் தலைவனான இந்திரனைப் போல் வளமையாக வாழ்ந்திருப்போர், நப்பின்னைப் பிராட்டி தழுவும் நறுமணம் கமழும், கௌத்துவ மணி துலங்கும் மார்பினை உடைய திருவரங்கப் பெருமானே, கேசி எனும் அசுரனைக் கொன்றவனே என்று போற்றி செய்த திருமண் அணிந்து கொள்ளும் வைணவ அடியார்களின் கால்களில் வீழ்ந்து வணங்கியவராவார்.

73. வணங்கரியா னரங்கன்னடி யார்தொழ
வாளரவு
வணங்கரி யாடற்பரிதேர் நடத்தெந்தை
வானவர்க்கும்
வணங்கரியானன்றிக் காப்பா ரில்லாமைவிண்
மண்ணறியும்
வணங்கரியா னவர்வாணன் கண்டாகனன்
மார்க்கண்டனே.

*வணம் கரியான் அரங்கன் அடியார் தொழ*
*வாள் அரவு*
*உவணம் கரி ஆடற்பரி தேர் நடத்து எந்தை*
*வானவர்க்கும்*
*வணங்க அரியான் அன்றிக் காப்பார் இல்லாமை*
*விண் மண் அறியும்வணம்*
*கரியானவர் வாணன், கண்டாகனன்*
*மார்க் கண்டனே.*

**பொருள் :**

கரிய திருமேனியுடையவனும், திருவரங்கப் பெருமான் அவனது அடியவர்கள் பணிந்து வணங்கிப் புகழ் பாட, ஒளிர்கின்ற அரவமான ஆதிசேடன், கருடன், யானை, ஆடுகின்ற குதிரைகள் மற்றும் தேர்களில் பவனிவரும் எங்களது தந்தை போன்றவன், வானுலகத்தாராலும் வணங்குதற்கு அரியவன். அவனையன்றிச் சரண் அடைந்தவர்களைக் காப்பாற்றுவார். வேறு யாரும் இல்லை இவ்வுண்மையினை வானுலகமும் மண்ணுலகமும் அறியும் படி சாட்சியாக உள்ளவர்கள், பாணாசுரன், கண்டா கன்னன் மார்க்கண்டேயன் ஆகியோரே.

**73.** **கண்டலங்காரள கம்கெண்டை மேகம்**
**கவிரிதழ் சொல்**
**கண்டலங்கார முலையிளநீ ரென்று**
**கன்னியர்சீர்**
**கண்டலங்கரங் களால் மரு வேன்கயல்**
**கொக்கென்றஞ்ச**
**கண்டலங்கார மலரரங் கேசர்க்குக்**
**காதலனே.**

*கண் தலம் கார் அளகம் கெண்டை மேகம்*
*கவிர் இதழ் ; சொல்*
*கண்டு ; அலங்கு ஆர முலை இள நீர் ;*
*என்று கன்னியர் சீர்*
*கண்டு அலங்காரங்களால் மருளேன், கயல்*
*கொக்கு என்று அஞ்ச*
*கண்டல் அங்கு ஆர மலர் அரங்கேசர்க்கு*
*காதலனே.*

**பொருள் :**

காவிரிநீர்ப் பரப்பில் உள்ள தாழை மடல்களைக் கண்டு நதியில் புரளும் மீனினங்கள் கொக்கு வந்துவிட்டதோ என அஞ்சி மறைந்துகொள்ளும் அத்தகைய தாழை மிகுந்த காவிரிக் கரையில் மலர் மாலைகளைத் தரித்துள்ள திருவரங்கப் பெருமான் மீது மையல் (பக்தி) கொண்டவனான நான், பெண்களின் கண்கள் கருமை நிறைந்த கூந்தல் ஆகியவற்றைக் கொண்டை மீன் என்றும், மேகம் என்றும், அவர்களது இதழ்கள் முருக்க மலர் போன்றது என்றும், அசைந்து புரளும் மாலைகளை அணிந்த அவர்களது தனங்கள் இளநீர் போன்றன என்றும் மடந்தையர் பெருமைகளைப் பேசி, அவர்களின் அழகாலும் அலங்காரங்களாலும், நான் மயங்கிவிட மாட்டேன்.

75. காதலைவாரிமண் வெண்கோட்டில் வைத்துண்டு
காட்டியரங்
காதலைவாகழற் குள்ளாக்கி னாய்கரப்
பெங்கெனவே
காதலை வார் குழை வைதேகி யைநின்
கருத்துருக்குங்
காதலைவா னரர்த்தேடவிட் டாயிது
கைதவமே !

*காது அலை வாரி மண் வெண்கோட்டில் வைத்து*
*உண்டு, காட்டி, அரங்கா*
*தலைவா ! கழற்குள் ஆக்கினாய் ; கரப்பு*
*எங்கு எனவே,*
*காது அலை வார் குழை வைதேகியை நின்*
*கருத்து உருக்கும்*
*காதலை வானரர்த் தேட விட்டாய் இது*
*கைதவமே !*

**பொருள் :**

மோதிப் புரளும் அலைகளை உடைய கடல் சூழ்ந்த இவ்வுலகை, வராக அவதாரத்தின் போது உனது வெண்மையான தந்தங்களில் வைத்திருந்து, பின் யுக முடிவில் உலகை உண்டு பின்னர் அனைவரும் காணும்படி வெளிப்படுத்திக் காட்டி, பின் வாமன அவதாரத்தின் போது இவ்வுலகை உனது ஒரு காலடிக்குள் அளந்தவனான திருவரங்கப் பெருமானே. என் தலைவனே அப்படி இவ்வுலகில் நீ அறியாத இடமோ பொருளோ இல்லை எனும் நிலையில், காதுகளில் குழைகள் தவழும் சீதாப் பிராட்டியை உனது உள்ளத்தை உருக்கும் காதலியை இராவணன் மறைத்து வைத்திருக்கும் இடத்தை அறியாதவன்போல் வானர வீரர்களை அனுப்பித் தேடச் செய்தாயே இச்செயல் உன்னுடைய கபட நாடகம்தானே !

76. தவராக வக்கணையொன்றால் கடற்றெய்வம்
தானென்றிருந்
தவராகம் தீர்த்துத்தொழக் கண்டநீதர்ப்பை
மேற்கிடந்து
தவராகப் பாவித் தென்னோ தொழுதாய்தண்
ணரங்கத்துமா
தவ ராகவா கண்ணனே யெண்ணொணாவவ
தாரத்தனே !

*தவர் ஆகவக் கணை ஒன்றால் கடல் தெய்வம்*
*தான் என்று இருந்த*
*அராகம் தீர்த்துத் தொழக் கண்ட நீ*
*தர்ப்பை மேல் கிடந்து*
*தவர் ஆகப் பாவித்து என்னோ தொழுதாய் ?*
*தண் அரங்கத்து*
*மாதவ ! ராகவா ! கண்ணனே ! எண் ஒணா*
*அவதாரத்தனே.*

o

பொருள் :

உன் கை வில்லில் இருந்த தொடுக்கப்பட்ட போர்த் தொழில் வல்லமை மிக்க அம்பு ஒன்றினால் கடலுக்கு அதிபதியான வருணனுக்கு இருந்த தான் என்ற அகந்தையை ஒழித்து உன்னை வணங்கும்படிச் செய்த வல்லவனான நீ, தர்ப்பைப் புல் படுக்கையில் படுத்துத் துறவிகளைப் போல உன்னை நினைத்துக் கொண்டு ஏன் அந்த வருணனை வணங்கினாய் ? தண்மை நிறைந்த திருவரங்கத்தில் எழுந்தருளியுள்ள திருவரங்க நாதனே ! ராமனே ! கண்ணனே கணக்கற்ற வடிவில் அவதாரம் செய்த பெருமானே. இத்தகைய முரண்பாடுகளைக் கொண்ட உனது திருவிளையாடல் விந்தையிலும் விந்தையே.

அராகம் - அடங்காமை (அகந்தை)

77. தாராகணம்மண் ணளந்தவன்னாள் அன்பர்
சாத்துந் துழாய்த்
தாராகணம் புயம்போ லரங்கா
தலமே ழுக்குமா
தாராகண மங்கையா யும்பர்தூவிய
தண்மலர் வீழ்
தாரா கணமும் நில்லாகாற்றில் சூழ்வனந்
தானொக்குமே !

*தாராகணம் மண் அளந்த அந்நாள் அன்பர்*
*சாத்தும் து ழாய்த்*
*தாரா ! கண் அம்புயம் போல் அரங்கா*
*தலம் ஏழுக்கும்*
*ஆதாரா ! கணமங்கையாய் ! உம்பர் தூவிய*
*தண் மலர் வீழ்தாரா*
*கணமும் நில்லா காற்றில் சூழ்வனம்*
*தான் ஒக்குமே !*

பொருள் :

உன்மீது பற்று வைக்கும் அடியார்கள் தினமும் சாத்துகின்ற துளவ மாலை அணிந்தவனே ! மலர்ந்த தாமரை போல் துலங்கும் கண்களை உடையவனே ! ஏழு உலகுக்கும் ஆதாரமான மூலப் பொருளே ! திருக்கண்ணமங்கை எனும் வைணவத் தலத்தில் எழுந்தருளியிருப்பவனே ! விண்மீன்கள் நிறைந்த வானையும் மண்ணையும் நீ அளந்த அன்று உன் திருவடிகளில் வானவர் தூவிய குளிர்ச்சியான மலர்கள், கீழே விழாமலும் ஒரு கணமும் ஓரிடத்தில் நிலையாக நில்லாமலும் காற்றில் சுழன்று தோன்றிய காட்சி ஒரு மலர்ச் சோலையே காற்றில் சுழல்வது போல் தோன்றின.

78. தானந்தியாகம் தவங்கல்வி தீர்த்
தந்தழலவி
தானந்தியாகந் தருமிழி பாயின
தண்ணரங்கத்
தானந்தியாகப் பகல்மறைத்தான் பெயர்
தந்திடும் வே
தானந்தியாகண் டலனறியாப் பரந்
தாமத்தையே !

*தானம் தியாகம் தவம் கல்வி தீர்த்தம்*
*தழல் அவிதான்*
*நந்து யாகம் தரும் இழிவு ஆயின*
*தண் அரங்கத்தான்,*
*அந்தி ஆகப் பகல் மறைத்தான்*
*பெயர் தந்திடும்*
*வேதா நந்தி ஆகண்டலன் அறியாப்*
*பரந்தாமத்தையே.*

பொருள் :

வறியோர்க்கு ஈதல், பிறர் நலத்துக்காகத் தனது உடைமைகளை ஈதல், அரிய தவமுயற்சிகள் செய்தல், அற நூல்களைக் கற்றல், புண்ணிய நதிகளில் நீராடல், தீமூட்டி, இறைவனுக்கு அவிர்பாகம் கொடுக்கும் யாகம் செய்தல் ஆகிய யாவும் நற்செயல்கள் தான் ஆயினும் அவை தாழ்மையான பலன்களையே தரும். ஆனால் யுத்த களத்தில் தனது சுதர்சனப் படையால் சூரியனை மறைத்துப் பகலே இரவாகும்படி செய்த குளுமை மிக்க திருவரங்க நாதனது திருநாமத்தை உச்சரித்தாலே, பிரமதேவனும் சிவனும் இந்திரனும் அறியாத பரமபதத்தையே தந்திடும்.

**79.** **தாமரை மாத்திரை மூப்பற்ற வானவர்**
**தண்ணறுஞ்செந்**
**தாமரை மாத்திரை வந்தாள் தலைவரைத்**
**தண்ணரங்கத்**
**தாமரை மாத்திரை போல்வளைந் தேற்றுத்**
**தருப் பொருட்டால்**
**தாமரை மாத்திரைக் கேசங்கி னோசையின்**
**சாய்ந்தனரே.**

***தாமரை மாத்திரை மூப்பு அற்ற வானவர்***
***தண் நறும்***
***செந்தாமரை மாத் திரை வந்தாள் தலைவரைத்***
***தண் அரங்கத்***
***தாமரை, மாத் திரை போல் வளைந்து தருப்***
***பொருட்டால்***
***தாம் அரை மாத்திரைக்கே சங்கின் ஓசையின்***
***சாய்ந்தனரே.***

**பொருள் :**

தாமரை (பதுமம்) எனும் கோடி கோடிகள் கொண்ட ஒரு எண்ணிக்கையுள்ளவர்களான நரை தோல் சுருங்கல் மற்றும் முதுமையில்லாதவர்களான தேவர்கள், பாரிசாத மரத்தின் காரணமாய், பாற்கடலின் நடுவே செந்தாமரை மலரில் தோன்றிய திருமகளின் கணவரும், குளிர்ச்சி மிக்க திருவரங்கத்தில் மலர் மாலைகளைச் சூடிக்கொண்டு அருள் செய்பவனும் ஆகிய நமது பெருமானை மற்ற யாரும் காண முடியாதபடி ஒரு பெரிய திரைபோல் வளைத்துக் கொண்டு போரிட்ட சமயம் அப்பெருமான் முழக்கிய பாஞ்ச சன்னியச் சங்கின் ஒலியைக் கேட்டு அரை மாத்திரை (அரை நொடி) நேரத்தில் மூர்ச்சை ஆயினர்.

80. சாகைக்குந்தந்து துகில்தூக்கி மாதர்
தமைநகைத்தாய் !
சாகைக்குந்தந்து வங்கட்கு மெட்டாய் !
தண் புனலரங்கே
சாகைக் குந்தத்துப் படையாழி யேந்தல்
தமர்கள் வெய்யோர்
சாகைக்குந்தத்துத் தவிர்க்கைக்கும் போலுமுன்
சங்கற்பமே.

*சாகைக் குந்தத்துத் துகில் தூக்கி மாதர்*
*தமை நகைத்தாய் !*
*சாகைக்கும் தத்துவங்கட்கும் எட்டாய்*
*தண்புனல் அரங்கேசா*
*கைக் குந்தத்து, படை ஆழி ஏந்தல்*
*தமர்கள் வெய்யோர்*
*சாகைக்கும் தத்துத் தவிர்க்கைக்கும்*
*போலும் உன் சங்கற்பமே.*

பொருள் :

குருந்த மரக்கிளையில் கோபியர்களின் புடவைகளை எடுத்துக்கொண்டு ஏறி இருந்து அம்மங்கையரைக் கேலி செய்து இன்புற்றவனே ! வேத மறைகளுக்கும் தத்துவங்களுக்கும் எட்டாப் பொருளாய் இருப்பவனே ! குளுமை மிக்க காவிரி சூழ்ந்த திருவரங்கப் பெருமானே ! உனது மலர்க் கையில் குந்தம் எனும் ஆயுதத்தையும் (ஈட்டி) எதிர்த்த படைகளை அழிக்கும் சக்கரத்தையும் ஏந்தி இருப்பது எதிரிகளாகிய கொடியவர்களின் அழிவைக் கருதியும் உன் அடியவர்கள் எடுத்த பிறவித் துன்பத்தை நீக்கக் கருதியும் என்பது தான் உனது கொள்கையாம்.

81. சங்கத்தமரர் குழாத்தொடு மூழ்வினை
தான் விலங்க
சங்கத்தமரன் பராயிருப்பீர் கடல்
தானவர்தே
சங்கத்தமரம் படவெய்த சார்ங்கத்
தனுவரங்கன்
சங்கத்தமரன் சரணேசர ணென்று
தாழ்ந்திருமே !

*சங்கத்து அமரர் குழாத்தொடும் ஊழ்வினை*
*தான் விலங்க*
*சங்கத்து அமர் அன்பராய் இருப்பீர்*
*கடல், தானவர்*
*தேசம் கத்த, மரம் பட, எய்த சார்ங்கத்*
*தனு அரங்கன்*
*சங்கத்து அமரன் சரணே சரண் என்று*
*தாழ்ந்திருமே*

பொருள் :

பரந்த கடலும், அரக்கர்களின் நாடான இலங்கையும் துயரால் வருந்தி ஓலமிட, ஏழு மரா மரங்களும் அழிந்து போகத் தனது சார்ங்கம் என்ற வில்லில் சரம் தொடுத்த திருவரங்கப் பெருமானும், பாஞ்ச சன்னியம் எனும் சங்கை முழக்கும் தெய்வத்தின் திருவடிகளே புகல் எனக் கருதி வணங்கு வீர்களானால், உங்களது பழ வினைகள் நீங்கித் தேவர்களின் கூட்டத்தோடு பொருந்தி அவர்களது சத் சங்கத்தில் இருப்பீர்கள்.

82. இருந்தேனுகமுட வன்வரை நோக்கி
இருப்பது போல்
இருந்தேனுகந்துனை வைகுந்தம் நோக்கி
எதிர்பொரும்கே
விருந்தேனுகனும் படவதைத் தாய் வெண்ணை
யாமத்தொளித்
திருந்தேனுகரரங் காகாணும் நாளினி
என்றருளே !

*இரும் தேன் உக முடவன் வரை நோக்கி*
*இருப்பது போல்*
*இருந்தேன் உகந்து உனை வைகுந்தம் நோக்கி !*
*எதிர் பொரும்*
*கேளிரும் தேனுகனும் பட வதைத்தாய் !*
*வெண்ணை யாமத்து ஒளித்து*
*இருந்தே நுகர் அரங்கா ! காணும் நாள்*
*இனி என்று ? அருளே.*

பொருள் :

இனிமையும் சுவையும் மிக்க மலைத்தேன் தனது நாவில் விழவேண்டும் என நினைத்து மலையில் உச்சியில் உள்ள தேன்கூட்டை நோக்கி அண்ணாந்தவாறு முடவன் இருப்பதைப் போல், உன் திருப்பதம் அடைதலை விரும்பி, பரமபதம் சேர்தலை எதிர்நோக்கி நீண்ட காலமாய்க் காத்திருந்தேன். உன்னை எதிர்த்துப் போரிடத் தன் உறவினருடன் வந்த தேனுகாசுரனும் அவனது பரிவாரமும் அழியும்படி செய்தவனே, கோபியர் மனைகளில் இரவு வரை ஒளிந்து இருந்த வெண்ணெய் உண்ட திருவரங்கப் பெருமானே ! உன்னைத் தரிசனம் செய்து உன் திருவடி நிழலை அடையும் நாள் எந்த நாளோ ! விரைவில் எனக்கு அருள் செய்வாயாக !

83. அரும் பாகவத ரிக்கும்பெய ராய்புள்
எரசினுக்கோ
ரரும்பாகவதரம் துப்பனையா யரங்
காவென உண்
ணரும் பாகவதர் பததீர்த்தங் கொள்ளா
தடிகள் கொப்பு
ளரும்பாகவதர் தொலைப்பார்கல் லார்கங்கை
யாடுதற்கே!

*அரும் பாகு அவதரிக்கும் பெயராய்!*
*புள் அரசினுக்கு ஓர்*
*அரும்பாக! அதரம் துப்பு அனையாய்! அரங்கா!*
*என உண்ண அரும்*
*பாகவதர் பத தீர்த்தம் கொள்ளாது*
*அடிகள் கொப்புள்*
*அரும்பு ஆக அதர் தொலைப்பார் கல்லார்*
*கங்கை ஆடுதற்கே!*

பொருள் :

உச்சரிக்கும் போதே நாவில் இனிமை நிறைந்த பாகு ஊறும்படி உள்ள திருப்பெயரை உடையவனே! பறவைக் கரசனான கருடன் வாகனமாய்க் கொண்டு நடத்தபவனே! சிவந்த பவழம் போன்ற இதழ்களை உடையவனே. திருவரங்கப் பெருமானே எனப் புகழ் மாலைகள் சூட்டி உன் பெருமைகளை நன்கு உணர்ந்த வைணவப் பெரியார்களது திருவடி விளக்கம் செய்த தீர்த்தத்தை விட்டு விட்டு, கால்களில் அரும்புகள் போல் கொப்புளங்கள் தோன்றி வெளிப்படும் வண்ணம் கங்கை ஆற்றில் நீராடுவதற்காகக் கல்லும் முள்ளும் நிரம்பிய கடினமான வழியில் நடந்து செல்வார்கள். அவ்வாறு செய்வதால் பயன் விளையாது.

84. ஆடுமுன்னீர் முதல்தீர்த்தத் தினாலரு
மாதவத்தால்
ஆடுமுன்னீர் மறை வேள்வியி னாலண்ட
ராயுடல்மா
றாடுமுன்னீரது மாயையினா லென்
றரங்கனைக் கொண்
டாடுமுன்னீர் செய்த பாவமும் போய் முத்த
ராம் வண்ணமே !

*ஆடும் முந்நீர் முதல் தீர்த்தத்தினால்*
*அரு மாதவத்தால்*
*ஆடு முன் ஈர் மறை வேள்வியினால் அண்டராய்*
*உடல் மாறாடும் ;*
*உன்னீர் அது மாயையினால் என்று ;*
*அரங்கனைக்*
*கொண்டாடும் – முன் நீர் செய்த பாவம் போய்*
*முத்தர் ஆம் வண்ணமே.*

பொருள் :

(மூன்று வகை நீர் சேரும்) கடலிலும் ஏனைய புண்ணிய நதிகளில் நீராடலாலும், கடுமை மிகுந்த தவங்கள் செய்வதாலும், ஆட்டை அறுத்துப் பலியிட்டுச் செய்யப்படும் மறை வேள்விகளாலும் உங்களது மானுடப் பிறப்பின் உடல் மாறி வானுலகத்தவரின் வடிவைப் பெறுதல் கூடும். ஆயினும் அவ்வாறு ஏற்படல் பொய்த் தோற்றமே என நினையுங்கள். முற் பிறவிகளினும், இம்மையிலும் நீங்கள் செய்த தீவினையின் பலன்கள் நீங்கி நீங்கள் முத்தி பெறும் நிலை அடைய வேண்டுமானால் திருவரங்கப் பெருமானை வழிபட்டுப் பக்தி செய்வீராக.

85. வண்ணங்கலி வஞ்சிவெண்பா வகவல்
வகைதொடுத்தோர்
வண்ணங்கலி கெடவேண்டு மென்றே மக்கள்
மாட்டுரையேன்
வண்ணங்கலி கடல்போல்வா னரங்கன்
வகுளச் செல்வன்
வண்ணங்கலியன் புகழ்த்தா ளெனக்கென்றும்
மா நிதியே.

*வண்ணம் கலி வஞ்சி வெண்பா அகவல்*
*வகை தொடுத்து ஓர்*
*வண்ணம் கலி கெட வேண்டம் என்றே*
*மக்கள் மாட்டு உரையேன் ;*
*வண்ணம் கலிகடல் போல்வான் அரங்கன்*
*வகுளச் செல்வன்*
*வள் நம் கலியன் புகழ் தாள் எனக்கு*
*என்றும் மா நிதியே !*

பொருள் :

எப்படியாவது எனது வறுமை நீங்க வேண்டும் என்பதற்காக, மனிதர்களிடம் சென்று அவர்களைப் புகழ்ந்து, வண்ணப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, வெண்பா, அகவல்பா எனும் பாடல் வகைகளை இயற்றி நிற்க மாட்டேன். ஆரவாரம் செய்யும் கடலைப் போன்ற நிறம் படைத்த மேனியனான திருவரங்கப் பெருமானைப் புகழ்ந்த பாசுரங்கள் இயற்றிய, வகுள மலர்மாலை சூடிய நம்மாழ்வார், திருமங்கை ஆழ்வார் ஆகியோரின் திருவடிகளே எனக்கு எப்போதும் பெரிய நிதியம் ஆகும்.

86. மானாக வரும் நிருதன்புன் மாயையின்
மங்கை என்னும்
மானாகவரு மணியை முன் நீங்கினன்
மாயனென்பார்
மானாகவரும் பலர் சோலை சூழும்
மதிலரங்கா !
மானாகவரு மமுதே அதுவும் நின்
மாயமன்றே !

*மான் ஆக வரும் நிருதன் புன் மாயையின்*
*மங்கை என்னும்*
*மால் நாக அருமணியை முன் நீங்கினன்*
*மாயன் என்பார் !*
*மால் நாக அரும்பு அலர் சோலை மதில்*
*அரங்கா !*
*மால் நா கவரும் அமுதே ! அதுவும்*
*நின் மாயம் அன்றே !*

பொருள் :

உனைப் பரவும் அடியார்களிடத்தே உன்பால் மயக்கம் ஏற்பட வைத்து உனது புகழ்த்துதிகளைச் சொல்லுங்கால் அவை இனிய அமிர்தம் போல் சுவையினைத் தருவதால், அடியவர்களது நாவைக் கவர்கின்றவனே. மிகப்பரந்து வளர்ந்த புன்னை மரங்களில் மொட்டுகள் மலர்ந்து விளங்கும் சோலைகள் சூழ்ந்த வலிமை மிக்க மதில்களையும் உடைய திருவரங்கப் பெருமானே. இராமாவதாரத்தில், இழிவு மிக்க செயல் செய்யும் அரக்கனாக பொன் மான் வடிவு பெற்று வந்த நிகழ்த்திய பொய்ம்மைத் தோற்றங்களால் நாகத்தின் தலை உச்சியில் விளங்கும் அரிய மாணிக்கம் போன்ற, உன் மனைவியாகிய சீதையை நீ, பிரிந்தாய் என்று சிலர் அறியாமல் சொல்வார். ஆனால் அச் செய்கையும் உனது மாயையினால் விளைந்தது அன்றோ ?

87. மாயாதவர் தலை வாயரங்கா ! வட
மாமதுரை
மாயாதவரண்டர் வந்தடைந்தால் மழு
வாளிபிர
மாயாதவர் செய்வர் முந்நூல் சென்னூல் கொண்ட
வண்ணமொப்ப
மாயாதவரத் தனைக்குடர் கோத்ததுன்
வாணகமே !

*மா யாதவர் தலைவா ! அரங்கா ! வட*
*மா மதுரை*
*மாயா ! தவர் அண்டர் வந்து அடைந்தால்*
*மழுவாளி, பிரமா*
*யாது அவர் செய்வர் ? முந்நூல்*
*செந்நூல் கொண்ட வண்ணம் ஒப்ப*
*மாயாத வரத்தனைக் குடர் கோத்தது உன்*
*வாள் நகமே !*

**பொருள் :**

பெருமைகொண்ட யாதவ குலத்துக்குத் தலைவனே ! திருவரங்கப் பெருமானே ! வடக்கே உள்ள சிறப்பு மிக்க மதுராபுரியில் மாய லீலைகள் பல செய்தவனே ! தவ முனிவர்களும் வானுலகத்தவர்களும் அரக்கர்களின் கொடுமைகட்கு அஞ்சிச் சரண் என அடைந்த போது மழுவாயுதம் கொண்ட சிவனும், பிரமதேவனும் என்ன செய்தனர்? சாவு என்பதே இல்லையெனும்படி வரங்களைப் பெற்ற இரணியனது குடலைப் பிடுங்கி, உன் மார்பில் துலங்கும் வெள்ளைப் பூணூல், இரணியனது ரத்தத்தினால் செந்நிறமான பூணுல் போல் தோன்றும்படி அணியச் செய்தது உன்னுடைய வாள் போன்ற நகங்கள்தானே !

88. நகமுண்டகம் தரித்தார்க்கருள் மாயற்கு
ஞாலமுந்நீர்
நகமுண்டகம் மகிழ்ந்தாற்கடி யேமென்மின்
நற்கதிவா
நகமுண்டகம் பரனென்னா தரங்கனை
நாடிலயன்
நகமுண்டக மலர் தான்குவியா தும்
நடுக்குளத்தே.

*நக, முண்ட கம் தரித்தார்க்கு அருள் மாயர்க்கு*
*ஞாலம் முந்நீர்*
*நகம் உண்டு அகம் மகிழ்ந்தார்க்கு அடியேம்*
*என்மின் ; நற்கதி*
*வானகம் உண்டு ; அகம் பரன் என்னாது*
*அரங்கனை நாடில் அயன்*
*நக முண்டக மலர்தான் குவியாது உம்*
*நடுக் குளத்தே !*

பொருள் :

பிறர் எள்ளி நகையாடும்படி, முண்டகம் செய்த தலையினைக் (பிரம்மனின் தலை) கையினில் பற்றிய சிவபெருமானுக்கு அத்துயர் நீங்கும்படி அருள் செய்த மாயையில் வல்லவனுக்கு, உலகம், கடல் மலைகள் ஆகிய அனைத்தையும் உண்டு மனம் மகிழ்ந்தவனுக்கு, நாங்கள் அடியவர்கள் எனச் சொல்லுங்கள். அப்படிச் சொன்னால், உங்களுக்கு நற்கதி உண்டாகி வீடுபேறும் கிட்டும். அது மட்டுமல்ல, "நானே வல்லவன்" என ஆணவம் கொள்ளாமல் திருவரங்கப் பெருமானின் மலரடிகளை நாடிப் பக்தி செலுத்தினால் விதிக் கடவுளான நான்முகனின் நகங்கள் பொருந்திய தாமரைக் கைகள் உங்களது தலைகளின் நடுவே (கபாலத்தில்) உமக்குத் தீங்கு தரும் விதிப்பயன்களை எழுதாது.

89. குளம்படி நெய்யடி சிற்கொத்ததோ கொளப்
பற்றியதோ
குளம்படியில் திங்கள் சே ரரங்கா ! கோல
மாயவன்றுன்
குளம்படி காட்டும் பிறை மருப்போலொரு
கோட்டிருந்து
குளம்படியின் கைத்துள்பரல் போன்ற
குவலயமே

*குளம் படி நெய் அடிசிற்கு ஒத்ததோ*
*கொளப் பற்றியதோ*
*குளம் படியில் திங்கள் சேர் அரங்கா*
*கோலம் ஆய அன்று உன்*
*குளம் அடி காட்டும் பிறை மறுப்போல*
*ஒரு கோட்டு இருந்து*
*குளம்பு அடியின் அகத்துள் பரல் போன்ற*
*குவலயமே !*

**பொருள் :**

காவிரிக் கரையின் மருங்கே படித்துறை அருகே உள்ள தெளிந்த நீரில் நிலவின் நிழல் படியும் திருவரங்கத்தில் இருப்பவனே ! நீ பெரிய வராக மூர்த்தியாய் அவதாரம் செய்த போது உனது நெற்றியருகே உள்ள பகுதியினைக் காட்டும் இளம்பிறையினிடம் உள்ள கறை போல உனது மருப்பில் தங்கி, உன் கால் குளம்பின் அடியில் உள்ள சிறு பரல் கல் போல விளங்கிய இந்த உலகத்தை யுக முடிவின் போது நீ உண்ட போது உனக்கு நிவேதனம் ஆகும் வெல்லம் நெய் கலந்த சர்க்கரைப் பொங்கல் போல் இருந்ததோ, உனக்கு வயிறு நிறைவதற்குப் போதுமானதாய் இருந்ததோ.

குளம் என்ற சொல்லுக்கு - வெல்லம், நெற்றி என்றும் பொருள் உண்டு.

94. விழுங்கூன்தசைச் சுவர்நீர்மலம் கோழைவெம்
பித்தொடுங்க
விழுங்கூனரம்பு றியென்பேணி தோற்கட்டை
வீழ்ந்துநொந்த
விழுங்கூந்த லாரழபாடையில் போய்ச்சுடும்
வெய்யசெந்தீ
விழுங்கூன நோய்க் குடில்வேண் டேனரங்க
விமானத்தனே !

*விழும் கூன் தசைச் சுவர் நீர், மலம் கோழை*
*வெம் பித்தொடும்*
*கவிழும் கூன் ; நரம்பு உறி ; என்பு ஏணி ;*
*தோல்சட்டை ; வீழ்ந்து நொந்து*
*அவிழும் கூந்தலார் அழ பாடையில் போய்ச்*
*சுடும் வெய்ய செந்தீ*
*விழுங்கு ஊன நோய்க்குடில் வேண்டேன்*
*அரங்க விமானத்தனே.*

பொருள் :

பொன் விமானங்கள் அமைந்த திருவரங்கக் கோவிலின் உள்ளே அருள் செய்யும் பெருமானே ! கூனல் விழும் இயல்புடைய, தசையினால் ஆன சுவர்களால் பொதியப்பெற்று நீர் மலம் கோழை பித்தம் ஆகியவை சேர்ந்த கவிழ்ந்து போகக் கூடிய பாண்டமும், நரம்புகளால் கட்டப்பட்டதும், எலும்புகளால் அமைக்கப்பட்டதும் தோலால் மூடப்பட்டதுமான இவ்வுடல், எனது அந்திம வேளையின் போது எனது சுற்றமான மங்கையர் கூந்தல் அவிழ்ந்து விழும்படி கதறி அழ, பாடையில் கிடத்திக்கொண்டுபோய் சுடப்படும், சிவந்து எழும் தீ விழுங்கிச் சுவைக்கும் இழிவு மிக்க இவ்வுடல் என்னும் நோய்களுக்கு இடமான குடிசையை நான் இனி விரும்பமாட்டேன்.

95. மானத்துவண்ட லுழவோரெ ழுத்தின்
வடிவுற்றசீர்
மானத்துவண்ட வினையாள ராயினும்
மால்வளர்வி
மானத்துவண்ட லம்மாமரங் கம்வழி
யாவரினு
மானத்துவண்ட மர்தாரண்ட தாம்பதம்
வாய்க்குமங்கே !

*மால் நத்து வண்டல் உழ, ஓர் எழுத்தின்*
*வடிவு உற்ற சீர்*
*மான துவண்ட வினையாளர் ஆயினும்*
*மால் வளர்*
*விமானத்து வண் தலம் ஆம் அரங்கம்*
*வழியா வரினும்*
*மானத்து வண்டு அமர் தார் அண்டர் ஆம்*
*பதம் வாய்க்கும் அங்கே !*

**பொருள் :**

சேறு நிறைந்த வயல் பகுதியில் ஒரு பெரிய நத்தை ஊர்ந்து செல்லும்போது அந்த நத்தை ஊர்ந்த வழியில் வண்டலினுள் அந்த நத்தை அறியாமலே ஏற்படுத்திய கோடுகள் ஓர் எழுத்தின் வடிவமாய்த் தற்செயலாக அமைந்து விடும். அது போல் அறமும் அறிவும் இன்றிப் பிறப்பு இறப்புகளால் உழல்பவராக இருந்தாலும் அவர்கள் அறியாமலே (தாங்கள் நடக்கும் வழி எது என்பதை அறியாமலேயே) விமானங்கள் பொருந்திய கோவிலை உடைய. திருவரங்கப் பெருமான் துயில் கொள்ளும் கோலத்தில் அருள் செய்யும் திருவரங்கத்தின் வழியாக வந்தால், (அரங்கனைச் சேவித்தால்) வண்டுகள் மொய்க்கும் மலர் மாலைகளை உடைய தேவர்களைப் போல ஆகி வீடுபேறு அடைவர்.

96. அங்காக்கைக்கே மங்கைக் கீந்தனரங்கன்
அவனிக்குவாய்
அங்காக்கைக்கே பசித்தானிற்க வேமுக்தி
ஆக்கிதுய
ரங்காக்கைக்கே சிலர்வேறே தொழுவ
ரருந்திரவி
யங்காக்கைக்கே தனத்தான்தரு மோதிரு
வன்றியிலே

*அம் கா கைக்கே மங்கைக்கு ஈந்தான்*
*அரங்கன் அவனிக்கு வாய்*
*அங்காக்கைக்கே பசித்தான் ; நிற்கவே*
*முக்தி ஆக்கி துயரம்*
*காக்கைக்கே சிலர் வேறே தொழுவர்*
*அரும் திரவியம்*
*காக்கைக் கேதனத்தாள் தருமோ*
*திரு அன்றியிலே !*

பொருள் :

வானவர் உலகில் உள்ள கற்பகச் சோலைப் பாரிசாத மரத்தினைக் கவர்ந்து தனது துணைவியான சத்யபாமாவுக்கு அளித்தவனும், யுக முடியில் இவ்வுலகை உண்ணும் அளவு பசி கொண்டு வாயை அண்ணாந்து திறந்தவனும் ஆன திருவரங்கப் பெருமானை விட்டு விட்டு வீடு பேறு பெறுவதற்கும் துயரங்களிலிருந்து விடுபடவும் சிலர் வேறு தெய்வங்களைத் தொழுது நிற்பார். ஆனால் அரிய செல்வங்களைத் திருமக்கள் மட்டுமே தர இயலுமே யல்லாது காக்கைக் கொடி கொண்டவளான மூதேவியால் தர இயலுமோ.

97. அன்றே அடைய உனக்கேயடி மையென்
றாய்ந்துணர்ந்தார்
அன்றே அடையப் படுவாருனை யரங்
கா வனத்தி
யன்றேவடையை அயில்வோரு மீதறி
யாரறிஞர்
அன்றே யடையைம் புலனாலும் நன்கில்லை
ஆங்கவர்க்கே !

*அன்றே, அடைய, உனக்கே அடிமை என்று*
*ஆய்ந்து உணர்ந்தார்*
*அன்றே அடையப்படுவார் உனை ? அரங்கா*
*வனத்து*
*இயன்றே அடையை அயில்வோரும் ஈது*
*அறியார் ; அறிஞர்*
*அன்றே ! அடை ஐம்புலனாலும் நன்கு இல்லை*
*ஆங்கு அவர்க்கே.*

பொருள் :

திருவரங்கப் பெருமானே ! இவ்வுலகம் தோன்றிய நாள்முதல் உலகில் வாழும் உயிர்கள் அத்தனையும் முழுமையாக உனக்கு ஆட்பட்டவை என்பதை ஆராய்ந்து அறிந்து உணர்ந்தவர்கள் மட்டுமே. அவ்வாறு உணர்ந்த அன்று தினமே உன்னை வந்து சேர்தற்கு உரியவர்கள். இந்த உண்மையை, காட்டில் வசித்து இலை தழைகளை மட்டுமே புசித்து வாழும் முனிவர்களாக இருப்பினும் அறியார். ஆனால் அவர்களை அறிஞர்களெனக் கருதுதற்கு இல்லை. அது மட்டும் அல்ல அவர்கள் கொண்ட புலனடக்கமும் பயன் தராது.

98. ஆங்காரமாமினைத் தோய்மார்பரங் கன்னளை
வெண்ணெயுண்டு
ஆங்காரமா நில முண்டார்க்குத் தொண்டனிவ்
வண்டத்தப் பால்
ஆங்காரமான்ப குதிப்புறம் போயமு
தாற்றில்படிந்
தாங்காரமா னடிகாண்பே னவன்தன்
அருள் சிந்தித்தே

*ஆம் கார் அம் மா மின்னைத் தோய் மார்பு*
*அரங்கன் ; அளை வெண்ணை உண்டாங்கு*
*ஆர மா நிலம் உண்டார்க்குத் தொண்டன்*
*இவ் அண்டத்து அப்பால்*
*ஆங்காரம் மான் பகுதிப் புறம் போய்*
*அமுது ஆற்றில் படிந்து*
*ஆங்கு ஆர் அமான் அடி காண்பேன் அவன்தன்*
*அருள் சிந்தித்தே.*

பொருள் :

நீருண்ட (ஆம் = நீர்) கருமேகத்தைக் கிழித்து ஒளிரும் மின்னலைப் போன்றவளான இலக்குமி உறையும் மார்பினனான திருவரங்கப் பெருமானான, மத்தால் கடையப்பட்ட வெண்ணையினை உண்பதைப் போலவே, மிகப் பரந்த இப்பூவுலகினையும் உண்ட எம்பெருமானுக்கு ஆட்பட்டவனான நான் அவனது அருட்கருணையினை நினைத்து நினைத்து அதன் பயனால் இவ்வகிலத்துக்கு அப்பால் நான், எனது என்னும் ஆணவங்களை அகற்றி அமிர்தமாகிய ஆற்றில் நீராடி அப்பரமபதத்தில் அருள் பாலிக்கும் கடவுளாகிய (அமான் : அம்மான் = கடவுள்) திருவரங்கப் பெருமானின் திருவடிகளைக் கண்டு மகிழ்வேன்.

99. சித்தாகுலமுய்யக் குன்றெடுத் தாய்
தென்னரங்கசுற்றும்
சிந்தாகுலகம் படைத்தளித்தாய் நிலம்
சென்றிரந்த
சிந்தாகுலவுசெல் வந்தந்தை தாய்குரு
தெய்வமுநீ
சிந்தாகுலமடைந் தேனடியேன் சென்மந்
தீர்த்தருளே !

*சிந்த ஆ குலம் உய்யக் குன்று எடுத்தாய் !*
*தென்அரங்க ! சுற்றும்*
*சிந்து ஆகு உலகம் படைத்து அளித்தாய் ! நிலம்*
*சென்று இரந்த*
*சிந்தா ! குலவு செல்வம், தந்தை, தாய், குரு*
*தெய்வமும் நீ !*
*சிந்தாகுலம் அடைந்தேன் ; அடியேன் சென்மம்*
*தீர்த்தருளே !*

பொருள் :

இந்திரனின் ஏவலால் ஏழு நாள்கள் தொடர்ந்து பெய்த கடுமழையின் காரணமாய்ச் சிதறி ஓடிய பசுக் கூட்டத்தைக் காப்பதற்காக மலையைக் குடையாய் எடுத்தவனே ! எழில் பொருந்திய திருவரங்கப் பெருமானே. சுற்றிலும் கடல் சூழ்ந்த இவ்வுலகைப் படைத்துக் காத்தவனே ! மகா பலியிடம் போய் மூவடி நிலம் யாகித்த குறுவடிவினனே (சிந்தன் - குறளனிலும் சற்று நெடியவன்) எனக்குத் தந்தை தாய் குரு தெய்வம் மற்றும் பொருந்திய செல்வம் அத்தனையும் நீதான். பிறவித் துயரால் மனக்கவலை கொண்ட எளியேனின் பிறப்பை ஒழித்து அருள் செய்வாயே !

100. தீரத்தரங்கப் பவநோய் துடைத்தென்னைத்
தேவரொடும்
தீரத்தரங்கப் பணி காப்ப வைத்த
செயலென்ப தோர்
தீரத்தரங்க அபய மென்றார்க் கும்
திரைப் பொன்னி சூழ்
தீரத்தரங்கன் சிலம்பார்ந்த செய்ய
திருவடியே !

*தீர தரங்கப் பவநோய் துடைத்து என்னைத்*
*தேவரொடும்*
*தீரத்தர் அங்கு அப் பணி காப்ப வைத்த*
*செயல் என்பது*
*ஓர்தீர் "அத்தர் அங்க அபயம்" என்று ஆர்க்கும்*
*திரைப் பொன்னி*
*சூழ்தீரத்து அரங்கன் சிலம்பு ஆர்ந்த செய்ய*
*திருவடியே*

**பொருள் :**

"ஆக்கல், அழித்தல் காத்தல் ஆகிய தொழில்களைச் செய்யும் பிரமன், சிவன், திருமால் ஆகிய மும்மூர்த்திகளும் ஒரே திருமேனியில் கொண்டவனே அடைக்கலம்" என ஓலமிடுவது போல் ஆரவாரம் செய்யும் அலைகளை உடைய காவேரிக் கரையில் உள்ள திருவரங்கத்து அதிபனான எம்பெருமான், சிலம்புகள் ஒலிக்கும் சிவந்த மலரடிகள்தான், கடல் அலைபோல் திரண்டு வந்து வருத்தும் எனது பிறவித் துன்ப நோயினை அறவே அகற்றித் தேவர்களோடு வீடுபேறு அடைந்த முக்தர்களோடும் பரமபதத்தில் எம்பெருமானுக்குப் பணி செய்ய வைத்தன என்பதை உணருங்கள்.

முற்றும்



